# தமிழ் ஒளியின்
# கவிதையும் வாழ்வும்

செ.து. சஞ்சீவி

புகழ்ப் புத்தகாலயம்
48, பிள்ளையார் கோயில் தெரு,
(பச்சையப்பன் கல்லூரி, ஆரிங்டன் சாலை அருகில்)
சென்னை - 600 030.

வெளியீடு : 8
முதற்பதிப்பு : ஆகஸ்டு 2000
உரிமை : ஆசிரியருக்கு
**விலை : ரூ.50/-**

## எமது வெளியீடுகள்

1. தமிழ் ஒளியின் கவிதைகள் (3-ம்பதிப்பு அச்சில்)
2. மேதின ரோஜா (மக்கள் கவிதைகள்)
(2-ம் பதிப்பு அச்சில்)
3. கண்ணப்பன் கிளிகள்
4. பாடு, பாப்பா!
5. உயிரோவியங்கள் (சிறுகதைகள்)
6. மாதவி காவியம்

ஒளி அச்சு : ஹைடெக் கிராப்பிக்ஸ்
சென்னை - 12.
அச்சிட்டோர் : **அய்யனார் ஆஃப்செட்**
18வது தெரு,
என்.எஸ்.கே. நகர்,
சென்னை-600 106.

# அணிந்துரை

**டாக்டர் இரா. குமரவேலன்** எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்ப்பேராசிரியர் (ஓய்வு)
பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

நண்பர் திரு. செ.து. சஞ்சீவி அவர்கள், கவிஞர் தமிழ்ஒளி அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர். அவர் கவிஞரின் இன்பத்திலும் துன்பத்திலும் தோள் கொடுத்தவர். வாய்ப்பு நேரும் போதெல்லாம் கவிஞருக்குப் பொருளுதவி செய்தவர்: இருக்க இடமும் அளித்தவர்.

எளிமையும் ஏழ்மையும் ஆன தோற்றப் பொலிவினைக் கொண்ட கவிஞர் பல கவிதைகளையும், நூல்களையும் படைப்பதற்கு உறுதுணையாய் இருந்த சஞ்சீவியார், மிக நீண்ட காலமாகப் பல்வேறு இதழ்களில் கவிஞர் எழுதியிருந்த கவிதைகளையெல்லாம் ஒருசேரத் திரட்டி நூல் வடிவில் கொண்டு வருவதற்கு அரும்பாடுபட்டவர்.

தமிழ்ஒளி என்னும் கவிஞரை உலகுக்கு உணர்த்திய பெருமை சஞ்சீவியார்க்கு உண்டு. எந்த ஓர் இடத்திலும், கட்சியிலும், இயக்கத்திலும், இதழிலும் நிரந்தரமாக இருக்க வியலாத கவிஞர் இவரிடமாவது நிலையாக இருந்திருக்கலாம். ஆனால் காலத்தின் கொடுமை வேறு விதமாக இருந்தது. இருப்பினும், சஞ்சீவியார் சிறிதும் மனம் கோணாது கவிஞரைக் கண்டபோதெல்லாம் உணவு, உடை, உறையுள் உள்ளிட்ட அனைத்து உதவிகளையும் செய்து போற்றி வந்தார்.

சென்னை அமைந்தகரை பூந்தமல்லி நெடுஞ்சாலையில் அங்காடி ஒன்றினைச் சிறிய அளவில் நடத்தி வந்த சஞ்சீவியாரை ஐம்பது அறுபதுகளில் அறியாத வட்டாரத்துப் பெருமக்கள் எவரும் இலர் எனலாம்: குறிப்பாக, அண்மையில் இருந்த பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர்கள், மாணவர்கள், விடுதி வாழ்நர்கள், கவிஞர்கள் வந்து அளவளாவிச் செல்லும் வேடந்தாங்கலாக இருந்தவர் அவர். என்

உறவினரும் பொறியாளருமான திரு. சாமி சுந்தரமூர்த்தி அவர்களுடன் சஞ்சீவியாரின் அங்காடிக்குச் சென்று இலக்கியம் பற்றிப் பேசிப் பொழுதுகளைக் கழித்த அந்தப் பசுமையான நினைவுகள் என்றும் நெஞ்சில் நிலைத்திருக்கும்; மகிழ்ச்சி தரும்.

ஓரிருமுறை கவிஞர் தமிழ்ஒளி அவர்களைக் காணும் வாய்ப்பும் எனக்குக் கிட்டியது. மாணவ சமுதாயத்தினரும் பிற இளைஞரும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், உவமைக் கவிஞர் சுரதா ஆகியோரின் மயக்கத்தில் இருந்த காலம் அது; திராவிட இயக்கத்தினரின் படைப்புகளில் ஊன்றிப் போய், அவற்றை ஆய்ந்தும் மனனம் செய்தும் மகிழ்ந்த காலம். இலக்கிய ஆர்வம், குறிப்பாகக் கவிதை ஆர்வம் பொங்கிப் பெருக்கெடுத்த காலம். படித்த ஒவ்வொருவனும் தான் ஒரு கவிஞனாக மலர வேண்டும் என்று கற்பனை செய்திருந்த காலம். இத்தகைய சூழலில் பலரும் தமிழ்ஒளியின் சிறப்பினை உணரத் தவறிவிட்டனர்; அன்று, அவரை அடையாளம் கண்டு பாதுகாத்துத் தமிழுலகில் அவருக்கு நிரந்தர இடத்தைப் பெற்றுத் தந்த பெருமை சஞ்சீவியாரையே சாரும்.

பொறாமை மிகுந்த அரசியல் உலகும், போட்டி நிறைந்த பதிப்பக உலகும் கவிஞரை எப்படியெல்லாம் புறந்தள்ளின என்பதைச் சஞ்சீவியாரின் இந்நூல் தெளிவாக விளக்குகிறது. தொழிலாளருக்காகவே மிகுதியாகப் பாடிய ஒரு கவிஞரைப் பொதுவுடைமையாளர்களே கூட ஏற்றுப் போற்றாத நிலை வருந்துதற்குரியது.

கவிஞரின் இலக்கிய வாழ்வும், சமுதாய வாழ்வும் பின்னிப் பிணைந்தவை; மரபு சார்ந்த கவிஞராகவும், புதுமைச் சந்தக் கவிஞராகவும் விளங்கிய அவர்தம் இலக்கியப் பணியை இந்நூல் முழுமையாக விளக்கிக் காட்டுகிறது. வீராயி, விதியோ வீணையோ, கோசலை குமரி, மாதவி காவியம், கண்ணப்பன் கிளிகள் ஆகியவை இக்கால கட்டத்தில் தோன்றிய அரிய குறுங்காவியங்கள் ஆகும். கவிஞர்கள் பலரும் விருத்தப்பாக்களையே எழுதிவந்த போது, தமிழ்ஒளி பிறவகைச் சந்தப் பாடல்களைத் தம் நூல்களில் பயன்படுத்தியதோடு நல்ல வெற்றியையும் பெற்றார். இந்தக் காரணத்தினாலேயே கவிஞர் தமிழ்ஒளி இந்நூற்றாண்டின் தனித்தன்மை மிக்க ஒரு கவிஞராகத் திகழ்கிறார்.

புதுமைக் கருத்திற்கு "விதியோ, வீணையோ" புரட்சி நோக்கிற்கு "வீராயி", புதிய சந்தங்களுக்கு "மாதவி காவியம்", பொங்கும் உணர்ச்சிகளுக்குக் "கண்ணப்பன் கிளிகள்" எனக் கவிஞரின் ஒவ்வொரு குறுங்காவியமும் தமிழிலக்கியத்தில் தனித்த இடம் பெறத்தக்கனவாக விளங்குகின்றன.

சஞ்சீவியார் கவிஞரின் பல் வகைப்பாடல்களையும் நுணுகி யாராய்ந்து, வாழ்க்கை ஓவியத்தின் இடையிடையே அவற்றை மேற்கோளாக்கி எடுத்துக்காட்டியிருப்பது எண்ணி இன்புறத் தக்கது.

இந்த நூலைப் படிக்கும்போது கவிஞரின் இலக்கியப் பரிணாம வளர்ச்சியினை இனிது அறிந்து கொள்ள முடிகிறது; அவர்தம் படைப்புகளில் திளைத்து மகிழும் வாய்ப்பு ஏற்படுகிறது. அவருடைய வாழ்க்கை அவலங்களில் இணைந்து கண்ணீர் பெருக்கும் நிலை உண்டாகிறது; முடிக்கிறபோது இப்படியும் ஒரு கவிஞர் "பெருஞ்சித்திரனாராக" நம்மிடையே வாழ்ந்திருக்கிறாரே என்னும் எண்ணம் தோன்றுகிறது. அவருக்கு ஒரு குமணனாக விளங்கிய சஞ்சீவியாரை நெஞ்சம் போற்றி மகிழ்கிறது!

# என் உரை - பதிப்புரை

"கவிஞர் பற்றிய நினைவுகளை குறித்து வையுங்கள். பிறகு நூலாக வெளியிடலாம்" என ஆசிரியர் விந்தன் அவர்கள் பணித்தனர்.

நானும் குறித்து வைத்தேன். ஏட்டில் அல்ல, இதயத்தில்!

கவிஞர் தமிழ் ஒளியை முன்னிறுத்தி, நான் ஏற்றுக் கொண்ட பணிகளை ஓரளவு நிறைவு செய்துள்ள நிலையில், அவரைப் பற்றிய நினைவுகளை எடுத்துரைக்க அவாவினேன்.

சரியாக ஒரு மணி நேரம், ஓரிடத்தில் அமர்ந்து செயல்பட முடியாத அளவுக்கு, உடல்நலம் கெட்டிருந்த போதிலும், இதனை எழுதிட இதயம் துடித்தது. நலிவைப் பொருட்படுத்தாமல், நினைவுகளை எழுதி முடித்தேன்.

தமிழ் ஒளியின் வாழ்வு கவிதையுடன் இணைந்த வாழ்வு. கவிதைப் பயணத்தில் முதலடி வைத்து, இறுதி இலக்கினை எட்டிய வரை, அவர் கவிதைகள் அடைந்துள்ள பரிணாம வளர்ச்சியினை ஓரளவு தெளிவுபடுத்த முயன்றுள்ளேன்.

இப்பணியைச் செம்மையாகச் செய்துள்ளேனா என்பதை தமிழன்பர்கள்தான் உறுதிப்படுத்த வேண்டும்.

இந்த இனிய சந்தர்ப்பத்தில், தமது எம்.பில். பட்ட ஆய்வுக்குத் தமிழ்ஒளியின் கவிதை படைப்புகளை மேற்கொண்டு, பல்கலைக்கழகப் பேராசிரியர்களும் தமிழ்ஒளியை அறியுமாறு செய்த பேராசிரியர் **திருமதி வெ. கனகசுந்தரம்** அவர்களை நன்றியுடன் நினைவு கூர்கிறேன்.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ள நண்பர் - பேராசிரியர் **இரா. குமரவேலன்** அவர்களுக்கும் நன்றி நவில்கிறேன்.

வாசகப் பெருமக்கள், இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கும் "தமிழ்ஒளி" போன்ற கவிஞர்களை இனம் கண்டு ஆதரிக்க முன்வர வேண்டுமெனவும் கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்

**செ.து. சஞ்சீவி**

# கவிஞரை வாழ்த்தும் அறிஞர்கள்!

"கவிஞர் தமிழ்ஒளி தமிழ் வானத்தில் விளங்கிய ஒரு விண்மீன்! அதன் மங்காத கவிதை ஒளியைப் போற்றுவோமாக!

*– டாக்டர் மு. வரதராசனார்.*

"தமிழ்ஒளி" ஒளியோங்கித் திகழ்க! என வாழ்த்துகிறேன்.

*– அ. சிதம்பரநாதன்*

"சிலம்புக் கவிஞன் இளங்கோ, சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்க தேவர் ஆகியோருடைய கவிதை மாயங்களை (அதிசயங்களை) இன்றைய தமிழகத்திற்கு, தமிழ்ஒளியின் கவிதைகள் மூலமாக மீட்டுக் கொணர்கின்றன.

*– பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார்.*

"இக்கவிஞர் புரிந்த தமிழ்த் தொண்டை நினைத்து தமிழ் மக்கள் இக்கவிஞருக்கு வணக்கம் செய்வார்களாக"

*– பேராசிரியர் ரா.ஸ்ரீ. தேசிகன்.*

"கவிஞர் தமிழ் ஒளியுடன் சில காலம் நேரில் பழகும் பேறு எனக்குக் கிட்டியது. அவர் பண்பிலே சிறந்தவர். சித்த உறுதி கொண்டவர். உருவிலே அடக்கமானவர். நெஞ்சிலே உரம் மிக்கவர், அவருடைய இந்தச் சிறப்புக்களெல்லாம் அவருடைய கவிதைகளில் பிரதிபலிக்கின்றன.

*– முதுபெரும் எழுத்தாளர் தி.ஜ.ர.*

''வேகமும் கனிவும் ஒருங்கே கொண்ட அவருடைய கவிதையிலும், வறுமையையும் சிறுமையையும் கண்டு சீறிய அவருடைய பாங்கிலும் மிகுந்த மதிப்பு எனக்கு உண்டு".

*– பேராசிரியர் அ. சீனிவாசராகவன்.*

"வாள் போன்று கூரிய வார்த்தைகள், பொருள் பொதிந்த சொற்கள், உணர்வைத் தூண்டும் உத்வேகம், புதுமை நிறைந்த கருத்து ஆகிய சர்வ லட்சணங்களும் பொருந்திய அரிய கவிதைகளை அவர் இயற்றியிருக்கிறார்"

*– "தாமரை" ஆசிரியர் கே. ராமநாதன்.*

"தமிழிற்காக தாய் தந்தையரை - உற்றார் உறவினரை - ஏன், பிறந்த ஊரையும் கூடத் துறந்து துறவிபோன்று தனி வாழ்க்கை வாழ்ந்தார் கவிஞர் தமிழ்ஒளி".

*– கவி. கா.மு.ஷெரிப்.*

"கவிஞர் தமிழ்ஒளி என் நண்பர். பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர். பாரதிதாசனால் பாராட்டப் பெற்றவர். அவருடைய கவிதைகள் முன்னோடியாகத் திகழ்பவை."

*– உவமைக்கவிஞர் "சுரதா".*

மான உணர்வுடையான்; மாத்தமிழைக் காதலித்தான்
தானெவர்க்கும் அஞ்சித் தலைபணியான் - கோனெனவே
பாப்பாடி வீற்றிருந்தான், பண்ணெழுப்பும் கோகிலமாய்க்
கூப்பாடு போட்டான் குழைந்து.

*– கவிஞர் தே.ப. பெருமாள்.*

ஞாலம் நமக்கென்றே நம்பிக்கை யூட்டிடவே
காலம் கனிய கனிந்து வந்த மாக்கவிஞன்!
எதுவும் எவர்க்கும் என்றென்றும் வேண்டுமெனும்
பொதுவுடைமைச் சிந்தனையில் போயமுந்தி மிக்குவந்தோன்!

பிற்பட்ட மக்கள் பெருவாழ்வில் பங்கேற்றான்.
சிற்ப நலத்தையெலாம் செந்தமிழில் காட்டியவன்
பூவாய் மணக்கும் புதிய தமிழ்ச் சொல்லெடுத்தே
நாவாரப் பாடி நலம் சேர்த்த விற்பண்ணன்!

*– கவிஞர் இளங்கம்பன்.*

A Poetic instinct is required to appreciate genuine Poetry and get at the Viewpoint of the Poet. Sound echoes to the sense in emotional outpourings and any prosaic or dilatory reading of the same will have a deleterious effect.

Tamiloli is a brilliant product of Tamil Renaissance of the twentieth century which dates from Amarakavi Bharathi. We have in this book the Poet''s sincere tributes to many a poet and hero of Tamil Nadu.

**THE HINDU**

*Dated, 19th Feb. 1967.*



## கவிஞர் தமிழ்ஒளி

| தோற்றம் |  | மறைவு |
|---|---|---|
| 21-09-1924 | | 29-03-1965 |

"தமிழுக்கு வளம் சேர்த்த மா கவிஞன். தன் வாழ்வை பாலைவனமாக்கிக் கொண்ட தவயோகி. அமரராகி விட்ட அப் பெருமகனாரின் கவிதை படைப்புகள் யாவும் அமர இலக்கியங்களாக என்றும் நிலைத்திருக்கும். வெல்க, தமிழ் ஒளி!"

– செ.து. சஞ்சீவி

# 1. மடலவிழ் மலராக...

மொட்டு அவிழ்ந்த மலர் மணங்கமழ்வது போல, மனம் கனிந்த நிலையில் கவி பாடத் தொடங்கியவர் கவிஞர் தமிழ்ஒளி.

கவிமனம் கனிய வயது வரம்பு உண்டா, என்ன?

பார்க்கும் பொருள்களிலெல்லாம், பாடு பொருளைக் காணும் கவிநோக்கு, இளமையிலேயே அவர் பால் அமைந்திருந்தது.

அவருடைய தந்தையார் கூறுவதைக் கேளுங்கள்:

"விஜயரங்கம் அழகாயிருப்பான். அழகாயிருக்கிற எதையும் பிரியமா பார்ப்பான். எங்கள் தோட்டத்து நாவல் மரத்தில் ஏறிக்கொண்டு, தினமும் சூரிய உதயத்தைப் பார்த்து ரசிப்பது அவனது வழக்கம்.

வீட்டைச் சுற்றிலும் தென்னை மரங்களும், வேறு மரஞ்செடிகளும் நிறைய உண்டு. அங்கே பூக்கள் பூத்திருப்பதை பார்த்துச் சிரிப்பான். குயில்கள் கூவுவதும், குருவிகள் குரல் எழுப்புவதும் கேட்டு சந்தோஷப்படுவான். குளிர்ச்சியான காற்று உடம்பில் பட்டால் துள்ளிக் குதிப்பான்.

அவனுக்குப் புத்தி கூர்மை அதிகம். கண்ணால் பார்ப்பதும், காதால் கேட்பதும் மனதில் பதிந்து விடும். நான் தினமும் பாடுகிற தேவாரப் பாட்டுக்களைச் சுவடி எடுத்துப் படிக்காமலே பாடிக் காட்டுவான்.

வைத்திய தொழிலுக்காக, நாங்கள் சொல்லிப் பழகும் திருமந்திரப் பாடல்களும், மூலிகைகள் பற்றிய விவரங்களும் அவன் தெரிந்து வைத்திருந்தான்.

அவன் நோட்டு புத்தகங்களில் எழுதி வைத்திருக்கும் பாடல்களை நான் படிப்பதுண்டு. வார்த்தைகள் சுத்தமாக இருக்கும்; கருத்துக்களும் புதுசா தோணும்; விஜயரங்கம் "கவி" ஆவான்னு அப்பவே நான் நினைத்தது உண்டு."

தந்தையின் கணிப்பு சரியானதுதான். விளையும் பயிரை அவர் முளையிலே தெரிந்து கொண்டார்.

விஜயரங்கம் எழுதிய முதல் கவிதை எது என்று கூறும் வாய்ப்பில்லை. அப்போது அவருக்கு வயது **பன்னிரண்டு** எனச் சொல்லப்படுகிறது. அந்தக் கவிதைகளில் சில, அச்சாகி, ஏடுகளில் வெளிவந்தபோது அவருக்கு வயது **பதினெட்டு** என அறிய முடிகிறது.

புதுவைக்காரரான விஜயரங்கம், தமது பள்ளிப் படிப்பை முழுமை யாக முடித்த நிலையில், **புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரைச்** சந்தித்துள்ளார். நண்பர்கள் ஆனந்தன் - **மன்னர் மன்னன்** அதற்கு உதவியுள்ளனர்.

"பாரதிதாசன் மாணவர்கள்" என உரிமை பாராட்டிக் கொள்ளும் சில நண்பர்கள், "விஜயரங்கம் எங்களைப்போல, பாரதிதாசனாரிடம் முறையாகப் பாடம் கேட்டவர் அல்ல;" என மொழிகின்றனர்.

அதனாலென்ன, மகாகவி பாரதியாரிடம் முறையாகப் பாடம் கேட்ட பிறகா, பாரதிதாசன் கவிதை எழுதினார்?

புரட்சிக் கவிஞருடன் தமிழ் ஒளிக்கு ஏற்பட்ட தொடர்பு உணர்வு பூர்வமானது. நாட்டு நடப்பிலும், சமூகப் பார்வையிலும் தெளிவு பெற்றிருந்த விஜயரங்கம், சமூகச் சீர்கேடுகளைச் சாடவும், புரட்சி கரமான எண்ணங்களை முரசொலித்துக் கூறவும் பாரதிதாசனாரை ஒரு முன் மாதிரியாக ஏற்றுக் கொண்டார் என்பதே நாம் தெரிந்து கொள்ள வேண்டிய உண்மையாகும்.

இத்தொடர்பு உருவான சூழலில் பாரதிதாசனார் எழுதிவந்த **"பாண்டியன் பரிசு"** காவியத்தின் கையெழுத்துப் படியினை நகல் எடுத்துத் தரும் நல்வாய்ப்பினையும் அவர் பெற்றுள்ளார்.

விஜயரங்கம், **"தமிழ்ஒளி"** ஆனது எந்த காலகட்டத்தில் என அறிய முடியவில்லை. திராவிடர் கழக ஏடுகளில், "தமிழ்ஒளி (விஜயரங்கம்) புதுவை" என்ற குறிப்புடன் அவருடைய கவிதைகள் வெளியிடப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

தமிழ்ஒளி எளிய குடும்பத்தில் பிறந்தவர். எளிய தோற்ற முடையவர். அதனால், பிறருடைய ஏளனப் பார்வைக்கும் இலக்கானவர்.

உணர்வுள்ள மனிதர்களுக்குத் தன்னம்பிக்கை அதிகமுண்டு. அதிலும் ஒரு கவிஞன் தன் குறைபாடுகளை எப்போதும் எண்ணுவ தில்லை. நிறைவான ஆற்றலையே முன்னிறுத்திக் காண்பான்.

தமிழ்ஒளி, கவிதையை ஒரு தொழிலாக மட்டும் அல்லாமல், இலட்சியமாகவும் ஏற்றுக் கொண்டவர். அந்த இலட்சியத்தில்

வெற்றிபெறவும், கவிதைக் கலையில் முழுமையாகத் தேர்ச்சி பெறவும் அர்ப்பணித்துக் கொண்டவர்.

அதன் பொருட்டு வேறு தொழிலை நாடாமலும், தனக்கென குடும்பம் அமைத்துக் கொள்ள விரும்பாமலும், தனிமனிதராக வாழ் நாட்களைக் கடத்திச் சென்றவர்.

அந்த மாகவிஞரின் கவிதை படைப்புகளை மூன்று கால கட்டங்களில் எழுந்தவை எனக் கூறலாம்.

தொடக்கம் முதல் 1947 வரை, போர்க்குணத்துடன் 1952 வரை, புத்திலக்கியம் படைக்கும் நோக்கில் 1964 வரை என வரையறுத்துக் கூறுவது பொருந்தும்.

தன்னையொரு இலட்சியவாதியாக உருவாக்கிக் கொண்ட தமிழ்ஒளியின் கவிதை படைப்புகள், தமிழ் மொழிக்கும், தமிழ்க் கவிதைக்கும் மட்டும் அல்லாமல், மனிதகுல மேம்பாட்டிற்கும் பெருமை சேர்த்துள்ளதை அவருடைய கவிதைகள் வாயிலாகவே நாம் அறிந்து கொள்ளலாம்.

# 2. கவிதைப் பயணம்

தமிழ்ஒளியின் கவிதைப் பயணம் அகவை பன்னிரண்டில் தொடங்கியதாக அறிகின்றோம். எனினும் அன்றுதொட்டு அகவை இருபது வரை அவர் எழுதியுள்ள கவிதைகள் எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை.

நாமும் இதுபற்றிக் கவிஞரிடம் பேசியுள்ளோம். அவர், "மறந்து விடுங்கள்" என்பார். மீண்டும் மீண்டும் வினவியபோது அவர் சொன்னார்.

"நான் புதுவையில் இருந்தபோது, பழைய கவிதைகளையெல்லாம் தொகுத்து இரண்டு தொகுதிகளாக ஒரு பதிப்பாளரிடம் கொடுத் திருந்தேன். அவர் அதனை அச்சிட்டு வெளியிடும் முன்னரே, யாரோ தலையிட்டு, தடுத்துவிட்டனர். அவரும் கவிதைத் தொகுதிகள் தொலைந்து போனதாகப் பொய்சொல்லி விட்டார்".

கவிஞர் வருத்தத்தை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. இந்த இழப்பினை தமிழ்க் கவிதைக்கு நேர்ந்த இழப்பாக நாம் கருதினோம். **"வானத்து விண்மீனை இருள் அழித்தல் இல்லை"** என்ற அவருடைய கவிதை வரிகளை நினைத்து ஆறுதல் அடைந்தோம்.

1944ல் நடந்து விட்ட இந்த விபத்து குறித்துப் பேசிக் கொண்டிருந்தபோது பேராசிரியர் **தி.வ.மெய்கண்டார்** அவர்கள் இரண்டு கவிதைகளை நமக்கு அளித்து ஆறுதல் கூறினர்.

அவையிரண்டும் "திராவிடநாடு", "குடியரசு" ஏடுகளில் இடம் பெற்றவை. இப்போது நம்மிடமுள்ள ஆதாரங்களின் அடிப்படையில், அவ்விரு கவிதைகளையே தொடக்கக்கால படைப்புகளாகக் கருதி ஏற்கலாம்.

இனி, தமிழ்ஒளியின் கவிதைப் பயணத்தில் நிகழ்ந்துள்ள சாதனைப் படைப்புகள் அனைத்தையும் நிரல்படத் தொகுத்து நேர்படக் காண்போம்.

ஒரு செய்தி : நாம் தமிழ் ஆர்வலர் என்ற முறையில் இப்பணியில் ஈடுபட்டோம். இங்கே, புலவர்கள் பாணியில் கவித்திறன், கற்பனை வளம், உவமை அழகு, உருவகச் சிறப்பு, கருத்துச் செழுமை எனப் பண்பு வாரியாகப் பகுத்துக் கூறும் பணியில் நாம் ஈடுபடப் போவதில்லை. உணர்வு பூர்வமாக உள்ளத்தில் இடம்பெற்ற கவிதைகளை மட்டும் முன்னெடுத்துப் பேசுவோம்.

இதோ. முதற்பாடல் இசைப்பாடலாக வருகிறது. படியுங்கள் : தலைப்பு : **"எழுச்சி வேண்டும்"**

"எழுச்சி இளைஞர்க்கு வேண்டும் - தட்டி
எழுப்பத் தாய் நாட்டினை மீண்டும்

அடிமையும் மிடிமையும்
பகையும் பதைத்தே
அடியற்ற மரம்போல
விழவிக், கணத்தே!

முடியாத தில்லையே, ஆமை - போல
மெதுவாக நகருதல் தீமை!
துடிதுடித் தெழுவீரே நாட்டை - வீழ்த்தத்
தோது செய்வாரையே ஓட்ட - எழுச்சி

தமிழனுக்கே தமிழ்நாடு - இதைத்
தடுக்க யார் செய்தாலும் கேடு
சமர்செய்து வீழ்த்துவீ ரின்றே - மேலும்
சாடுந் திறல் கொண்டு நின்றே! " - ஏழுச்சி

*- "திராவிட நாடு" 23-7-1944*

-அடுத்து வருவது விருத்தப்பா, தலைப்பு : "மாணவர் எழுச்சி"

"என்சொல்வேன் அடடா! என் ஆவி பற்றி
ஏறிவரும் உணர்ச்சியை, நன் மகிழ்ச்சி யைத்தான்!
பொன்போன்ற காலத்தைப் பொன்னாய்ச் செய்யும்
புகழ்வாய்ந்த மாணவர்கள் என்இ னத்தின்
நன்செய்யில் விளைந்திட்ட நற்ப யிர்கள்!
நாட்டுநிலை உணர்ந்திட்டார்! துடித்தெ ழுந்தார்!
கொன்றுகுவிப் போம்இழிவை எனச்சூள் செய்தே
கூடிவிட்டார் ஒன்றாய்! நான் கண்டு விட்டேன்!

பொங்குகின்ற மகிழ்ச்சிக்கோர் எல்லை யில்லை!
பூரிப்பால் என்தோள்கள் உயர்ந்து விம்மும்!
எங்குளது பகை? எங்கே? எனஎன் கண்கள்
எட்டியதொ லைகடந்தும் எட்டிப் பார்க்கும்!
சிங்கங்கள் ஒன்றாகச் சேர்ந்து விட்டால்
சிறுநரிகள் சூழ்ச்சிஎதும் செய்தல் இல்லை!

இங்கந்த நிலைகண்டேன் திராவி டத்தின்
எதிர்காலம் அதோ! அவர்கள் கையில் தானே!

புறமுதுகு காட்டாப்போர் மறவர் என்ற
புதுமலர்கள் அதோ, பாரீர்! வாழ்த்துக் கூறீர்!
திறமில்லார் யாமோ? என் றதட்டும் அந்தச்
சேய்கள்முன் பகைவர்வாய் திறக்க வில்லை!
பிறநாட்டார் "எமைப்பேண் நாட்டார்" என்னும்
பெரும்பழிக்கு வகைதேடும் ஆரி யத்தை
அறவேஇந் நாள்அதுவும் இன்றே பாய்ந்தே
அழித்திடுவோம்! ஆம்! இதிலே ஐயமில்லை!

செழுந்தேனை யொத்ததமிழ் உணர்ச்சி யாலே
திறல்பெற்றார் மாணவர்கள்! திராவி டத்தின்
முழுப்பொறுப்பும் அவர்ஏற்றுக் கொண்டார்! போரின்
முன்னணியை வன்மையுற அமைத்து விட்டார்!
எழில்வாய்ந்த பருவத்தார், தூய்மை மிக்கார்,
எழுச்சிதனை யுற்றார்!பின் இந்த நாட்டில்
அழுந்தமிழர் துயர்தீர்வார்! அவரை இன்பம்
அண்டிவிடும்! தண்டமிழ்த்தாய் சிறப்பாள், நன்றே!"

*– "குடியரசு" 30–12–1944*

கவிஞர் தமிழ்ஒளி, திராவிடர் கழக அணியில் இருந்துள்ளார் என்பதற்கு இவ்விருகவிதைகளும் எப்போதும் சான்றாக இருந்துவரும்.

**கவிஞர் "குயிலன்" அவர்கள் தமிழ்ஒளியின் கெழுதகை நண்பர்.** கம்யூனிஸ்ட் கட்சியில் இருவரும் இரட்டைக் கவிஞர்களாக விளங்கியவர்கள். 1946ல் குயிலன் வெளியிட்டு வந்த ஏடு "கவிமலர்". அதில் இடம் பெற்றுள்ள கவிதை இது. **விண்மீன்கள்** மின்னுவதைக் காணுங்கள்.

"வான்கடல் தோன்றிடும் முத்துக்களோ – ஏழை
வாழும் குடிசையின் பொத்தல்களோ?
மானிலமீதில் உழைப்பவர்கள் – உடல்
வாய்ந்த தழும்புகளோ அவைகள்!"

தொடக்க வரிகளில், விண்மீன்கள், தழும்புகளாகத் தெரிகின்றன.

இறுதியில்–

"வெய்யில் அரசாங்கம் வாட்டிடினும் – இருள்
வேலிகட்டி யிங்கு வைத்திடினும்,

பொய்யில் தொழிலாளர் எண்ணமெலாம் - அங்குப்
பொங்கிக் குமுறி இறைத்தனவோ?"

– *"கவிமலர்" 1946*

தொழிலாளர்களின் மனக்குமுறலை. விண்மீன்கள் வெளிப்படுத்துவதாகக் கூறுகிறார்.

தனிக்கவிதைகள். மூன்றினை முன்னிறுத்தியதுபோல. அந்தக் கால கட்டத்தில் வெளிவந்துள்ள மூன்று குறுங்காப்பியங்களிலிருந்தும் சில கவிதைகளை முன்னெடுத்து வைப்போம்.

"கவிஞனின் காதல்" - காவியப் படைப்புக்கு முன்மாதிரியாக எழுதப்பட்ட நூல். உருவான காலம் 1945. அனைத்தும் எண்சீர் விருத்தங்கள். துள்ளும் நடை. நெஞ்சை அள்ளும் பாக்கள். சோழ நாட்டின் பெருமை பேசும் கற்பனைக் காவியம். பக்கம் 8ல் வரும் பாடல் வரிகள் இவை:

"ஓடுகின்ற வெள்ளத்தை மறித்தாற் போலும்
உயர்ந்துவளர் மரநுனியைத் தறித்தாற் போலும்
பாடுகின்ற தமிழ்ப்பாட்டைத் தடுத்தாற் போலும்
பழந்தமிழைச் சிலரிடையே அடைத்தாற் போலும்
கூடுகின்ற காதலரைப் "பழக்கம்" என்னும்
கூர்வாளால் மன்னர்குலம் வெட்டிப் போட
நாடுகின்ற தீமையினை நல்ல தென்று
நச்சுப்பல் கொண்டோர்கள் சொல்லி விட்டார்!"

ஓடிவரும் உவமையுடன் நம்மை நாடிவரும் கவிதை இது.

பக்கம் 31ல் மற்றொரு பாடல்:

"நாடுவிட்டுக் கடத்துமொரு கொடுமை தன்னை
நாவாலே சொல்லவெனிற் கூடு தில்லை!
பாடுபட்ட தொழிலாளர் கூலி தன்னை
பறித்தவரை வதைப்பதுவும், ஏழை மக்கள்
தேடுகின்ற செல்வத்தைத் திருடிக் கொண்டு
திண்டாட வைப்பதுவும், கொடுமை! ஆனால்,
வீடுவிட்டு வாசல்விட்டு கடத்து கின்ற
வெங்கொடுமைக் கீடில்லை அவைக ளெல்லாம்!"

பாதிக்கப்பட்டவர்களுக்கு நியாயம் கேட்கிறது இப்பாடல்.

"நிலை பெற்ற சிலை" - இரண்டாவது காப்பியம். சமூக சீர்திருத்தம் - தொழிலாளர் பிரச்சினை இரண்டும் இணைந்து உருவான

கதை. முதற்படைப்பில் உள்ளதைவிட, உணர்ச்சிவேகமும் உவமைச் சிறப்புகளும் சிறந்து விளங்கும் நூல். இதனை 1946ல் எழுதியுள்ளார் கவிஞர்.

பக்கம் 4ல் இடம்பெற்றுள்ள கவிதை வரிகள் இவை :

"தாவிவரும் வண்டுக்குத் தேனை அள்ளித்
தரசெந்தா மரைதானும் மறுப்ப துண்டோ?
கூவிவரும் குயிலுக்குக் கனிகொ டுக்கக்
குளிர்பொழிலும் மறுத்திடுமோ? சோலை தன்னில்
மேவிவரும் தென்றலினைப் "போ போ" என்று
மென்மலரும் சொல்லிடுமோ? தங்கள் காதல்
ஏவிவரும் உணர்ச்சியினை என்ற னுள்ளம்
எட்டிஅணைக் காமலிருந் திடுமோ அத்தான்!"

சோலையில் சந்தித்த காதலர்கள் உள்ளத்தால் மட்டுமின்றி உடலாலும் ஒன்றிணைவதைத் தடுக்க முடியுமா?

பக்கம் 12ல் வரும் பாடலில், சமூக ஏற்றத் தாழ்வினைச் சித்தரிக்கிறார்.

"ஏழையர்என் றொருசாரார் இருப்ப தற்கும்
இருநிதியம் படைத்தோர்கள் என்ற தங்கப்
பேழையர்என் றொருசாரார் இருப்ப தற்கும்
பிறப்பாலே தாழ்வேற்றங் கருது தற்கும்
கோழையர்என் றொருகும்பல் இருப்ப தற்கும்
கொடுஞ்சூழ்ச்சி யாலுமே ஆகும்; காட்டுத்
தாழையிலே வாழ்கின்ற பாம்பு போன்ற
தன்மையரை விட்டிடுதல் நன்மை யல்ல!"

தாழையிலே வாழும் பாம்பாக ஏழைகளின் எதிரிகளை இனம் காட்டுகிறார்.

பக்கம் 53ல் உள்ள கவிதை, கவிஞர்தம் மனக்குமுறலை எதிரொலிப்பதைக் காணலாம். படியுங்கள்:

"ஒளியாலே விளங்கிற்று வையம்; எங்கும்
ஒளிந்திருந்த தெல்லாமும் வெளிப்படும்; பின்
களியாலே மலர்பூத்துக் குலுங்கும்; தென்றற்
காற்றாலே மகரந்தம் சிந்தும்; கூட்ட
அளியாலே இசைதோன்றும்; பறவை பாடும்!
அங்கங்கே இன்புடனே துன்பம் கூடும்!
எளியோரின் வாழ்க்கையிலே எப்போ துந்தான்
இன்பமெனும் ஒருபொருளே இல்லை யன்றோ?"

தெளிவான உண்மைதான். பூ பூத்தாலென்ன, பறவை பாடினாலென்ன, ஒளிவெள்ளத்தில் தென்றல் உலாவந்தால்தான் என்ன? ஏழை மக்கள் இன்பத்தை எதிர் கொள்ள முடியுமா?

"வீராயி" - காவியம் மூன்றாவது படைப்பு. உருவான வேகத்தில் அச்சாகி வெளிவந்த நூல். ஆண்டு 1947. கவிஞர்கள் மத்தியில் இளம்புயலாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டார் தமிழ்ஒளி. அந்நேரம், கம்யூனிஸ்ட் கட்சியில் அவர் காலூன்றியிருந்தார்.

இந்திய அடிமைகளைக் கப்பலில் ஏற்றிச்சென்று, ஆப்ரிக்கக் காடுகளில் கொடுமைப் படுத்திய வரலாற்றுப் பின்னணி கொண்ட கதை. **பாரதியாரின், "கரும்புத் தோட்டத்திலே"** என்ற பாடல் இதற்கு முன்மாதிரியாக அமைந்துள்ளது.

கதை மாந்தர்கள் : வீராயி, வீரண்ணன், மாரிக்கிழவன், ஆனந்தன் ஆகியோர் மானத்துடன் வாழ முயன்று போராடி மடிவதைச் சித்திரிக்கும் நூல். கதையின் போக்கினை உணர்த்தும் வகையில் தொடக்கச் செய்யுள்கள் அமைந்துள்ளதைப் படியுங்கள்.

**"மழைபிடித்துப் பெய்கிறது ஐப்பசியில், ஏழை
மனங்குமுறும் விதம்போலும் இடிக்கிறது வானில்!
தழைபிடித்த மரமெல்லாம் குளிர்பிடித்துக் கொள்ள
தலைநீட்ட முடியாமல் பறவையெலாம் அங்கு
விழிமூடித் துணைகளுடன் சிறகணைத்துக் கொண்டு
வேடன்போல் தாக்குகின்ற ஊதலிடைத் துஞ்சும்!
கிழித்தெறிந்து முகில்தன்னை புரட்சியுள வேகம்
கீழ்த்திசையும் மேற்றிசையும் காட்டிவிடும் மின்னல்!"**

**"நீரோடு நிலம்மோதக் குளமெல்லாம் வழியும்
நெடுந்தூர வாய்க்காலில் பெருகிவரும் வெள்ளம்!
வேரோடு செடிகொடிகள் அள்ளிவந்து சேர்க்கும்
விதிநம்பிக் கத்துகிற வெறுங்கூச்சல் காரர்
ஊரோடு சேர்ந்தூளை யிடுவதனைப் போலே
ஒருபெரிய ஒலிக்கோவை யிடுந்தவளைக் கூட்டம்!
போரோடும் எரிகின்ற வைக்கோலின் புகைபோல்
புதுமுகில்கள் கூடாரம் அடித்துவிடும் வானில்!"**

**"தரையெல்லாம் புரையோடிச் சில்லிட்டுப் போகும்
தாழ்வார மூலையிலே ஆடுடனே மாடும்**

**ஒருசாணின் அளவினிலே உடல் ஒடுங்கி நிற்கும்**
**ஒண்டஇடம் இல்லாமல் ஊரெல்லாம் சுற்றித்**
**தெருவினிலே கையேந்திச் சிறுபிச்சை வாங்கித்**
**திரிவோர்கள் குறட்டோரம் போய்நின்று மெய்யை**
**இருகையின் ஆதரவால் காப்பாற்ற முயல்வார்!**
**எதிர்த்தடிக்கும் சாரலிலே என்செய்வார் பாவம்!"**

பாவப்பட்ட மக்களின் பரிதாப நிலையினை நூல் முழுவதும் உணர்ச்சி ததும்பப் பாடியுள்ளார் கவிஞர். கதைமுடிவில்;

**"குருதியிலே காதலர்கள் குளிக்கின்றா ரந்தோ!**
**கொடுமையிலே இதுபோன்ற கொடுமையுமே உண்டோ?**
**ஒருவாறு வெறிதீர்ந்தே ஊரார்கள் சென்றார்**
**உடல்சோர்ந்து காதலர்கள் தரைசாய்ந்து விட்டார்!**
**திருந்தாத தமிழ்நாடே நீசெய்த தீமை**
**தீ,மண்,நீர், காற்று,வெளி உள்ளளவும் மக்கள்**
**ஒருபோதும் மறவார்கள் உண்மையிது சொன்னேன்!**
**உயர்காதல் கொன்றாய்நீ, வாழுதியே நன்றே!"**

மேலும்,

**"வானத்து விண்மீனை இருள் அழித்தல் இல்லை!**
**மாக்கொடுமைத் தமிழ்ப்பண்பு தனையழித்த லுண்டோ?**
**ஈனசெயல் அழியுங்காண், அவரழிய மாட்டார்!**
**என்றைக்கும் இங்கவர்கள் நாமமது வாழும்!"**

செத்து மடிந்த காதலர்களுக்கு வாழ்த்துக்கூறி, காவியத்தைத் துன்பியலாய் முடிக்கிறார் கவிஞர்.

மேலே எடுத்துக் காட்டிய காவியங்கள் மூன்றும் துன்பியல் சார்ந்தவையே. கவிஞருக்குப் பிடித்த சுவையும் அவலச்சுவையே!

இனி, கவிதைப் பயணத்தின் **இரண்டாம் கட்ட படைப்புகளைக்** காண்போம்.

நாடு சுதந்திரம் பெற்ற சூழலில், காங்கிரஸ் கட்சி ஆட்சியைக் கைப்பற்றியது.

சுதந்திர இந்தியாவில் பொதுவுடைமை அரசமைக்க ஆர்வமாக இருந்து வந்த கம்யூனிட் கட்சி, காங்கிரஸை வீழ்த்துவதில் தீவிரம் காட்டியது. பிரச்சார அளவில் மட்டுமின்றி, தீவிரவாத செயல்பாடுகளிலும் இறங்கியது. அந்தக் கால கட்டத்தில் கம்யூனிஸ்டுகள் தீப்பிழம்புகளாக நடமாடி வந்தனர்.

இருபத்து மூன்று வயதினரான நம் கவிஞரும் அத்தகைய உணர்வுகளுக்கு ஆட்பட்டிருந்ததை அவருடைய கவிதைப் படைப்புகள் நமக்கு உணர்த்துகின்றன. களம்பாட வந்த கவிஞருக்கு இயற்கைச் சீற்றம் பாடு பொருளாக அமைகிறது.

இதோ, இயற்கையன்னையின் கோபத்தைப் பாடுகிறார் கவிஞர். அந்தக் கவிதையை நீங்களும் படியுங்களேன்.

"கொட்டிடி கொட்டி எழுந்தாள் - அன்னை
கோபத்தி லேமின்னல் தீயை யுமிழ்ந்தாள்!
கட்டிக் கிடந்திடும் மேகம் - எனும்
கார்மலை யாம்குடம் எற்றிப் புரட்டிக்
கொட்டினள் காலவெள் ளத்தை - அவள்
கொக்கரித் தாள்திசை எட்டும் நடுங்க
தட்டி யெழுப்பினள் காற்றை - அது
தாவி யுருட்டுது மாமரக் காட்டை!"

"கட்டறுத் தோம்என வீழும் - மரம்
கால்கள் புரண்டு தலைதடு மாறும்!
மட்டைக் கிளைமுறிந் தோடும் - இலை
வாரி யடித்துமண் மேட்டினை மூடும்
ஒட்டுச் சுவர்விழும் காட்சி - தென்னை
ஒவ்வொன்றும் மண்ணிடை யுற்றிடும் வீழ்ச்சி!
மட்டற்றுப் போயிற்று நாசம் - இந்த
மண்ணிடை யேசூறை கொண்டது வாசம்!"

"ஆள்எனும் மத்த கஜத்தை - மிகும்
ஆத்திரத் தோடொரு சிங்கத்தைப் போலே
வேலெனப் பாய்ந்து கிழிக்கும் - தரை
மேற்சிறு புற்களைக் கிள்ளி எடுக்கும்
கால்எடுத் தூன்றினாள் அன்னை - அங்குக்
காண்இடி, மின்னல், அதிர்ந்திடும் அண்டம்!
மால்வரை பேர்த்திடும் சப்தம் - "மட
மட்"கென வீறிட்டுக் கத்திடும் யுத்தம்!"

"மக்கள் தொடுத்திடும் யுத்தம் - என
வானமும் மண்ணும் இருண்டு நடுங்கச்
செக்கென ஆட்டுது காற்று - பெருஞ்
செல்வர், மணிமுடி, சட்டம், சிறைகள்
பொக்கென வீழ்வது போலே - யாவும்

**போயின பொட்டென்று விட்டது காற்று!**
**செக்கச் சிவந்தது வானம் - அன்னை**
**சேல்விழி காட்டினள் வந்தது காலை!"**

இந்தக் கவிதை, பேராசிரியர் ***சீனிவாச ராகவன்*** அவர்கள் நடத்தி வந்த **"சிந்தனை"** ஏட்டில் 1947ல் வெளிவந்தது. பின்னர், **"தாமரை"** ஏட்டிலும் (1960) மறு பிரசுரமானது.

மழைக்கால நிகழ்வுகளை மக்கள் புரட்சியாகச் சித்திரித்த கவிஞருக்கு, நிஜமாகவே, சீன மண்ணில் செஞ்சேனை நிகழ்த்திய மக்கள் புரட்சியைப் பாடும் நல்வாய்ப்பும் கிடைத்தது. நான்கு கவிதைகள் பாடியுள்ளார் கவிஞர். ஒன்றை மட்டும் இங்கே காண்போம்.

தலைப்பு : **"நான்கிங்" எல்லையில்...**

**"சீனம் கிடுகிடென் றாடுது - புதுச்**
**செய்தியை வையகம் கேட்குது!**
**போன யுகத்துப் பழமைகள் - பொடு**
**பொட்டென வீழ்ந்து நொறுங்குது!**
**வானம் இடித்த இடியென - புயல்**
**வாரி அடிக்கும் கடல்என**
**சீனம் அதிரசெஞ் சேனையும் - பகைச்**
**சிந்தை நடுங்கமுன் னேறுது!"**

செஞ்சேனையின் முன்னேற்றத்தை முதல் அடியில் குறித்தவர், மூன்றாம் அடியில்:

**"சீனம் நமக்கொரு நம்பிக்கை - அதன்**
**செஞ்சேனை வெற்றிகளால், புது**
**ஞானம் பிறக்குது மண்ணிலே - இந்த**
**ஞானத்தை அன்று விதைத்தது!**
**வானரசாகிய சோவியத் - அது**
**வாழ்த்தி மகிழுது தாயென!**
**ஈனர்கள் ஓட்டம் பிடிக்கிறார் - நான்கிங்**
**எல்லை பரிசுத்தம் ஆகுது!"**

எனப் பெருமிதம் கொள்ளுகிறார். சீனப் புரட்சி, இந்திய மண்ணிலும் எழுச்சியை விதைக்கும் என நம்புகிறார்.

இறுதியில்-

**"யுகங்கள் பிரிவினி இல்லைகாண் - தர்மம்**
**ஒன்று புதுயுகம் ஆகுமே!**

**நகமும் சதையும்போல் மானிடர் - எந்த**
**நாட்டினர், தீவினர் ஆயினும்**
**சகத்தினில் ஒற்றைக் குடும்பமாய் - உயர்**
**சாந்தம் நிலவிட வாழ்ந்திடும்**
**புகழுறு தர்மம் வருகுது - நகை**
**பூத்த முகத்துடன் சீனத்தில்!"**

மேலும்,

**"மங்கள வாழ்த்துக்கள் பாடுவோம் - அறம்**
**வாழ்க எனக்களி கூறுவோம்**
**செங்கமல ஒளி மேவிடும் - செஞ்**
**சீன விழாவினைக் கொண்டா டுவோம்!"**

***- "முன்னணி" டிசம்பர் 19-1948.***

நீண்ட பாடலின் சில பகுதிகளை மட்டும் எடுத்துக் காட்டினோம். இதனைத் தொடர்ந்து, இந்திய மண்ணில் மக்கள் புரட்சிகான வித்தூன்றும் வாய்ப்பினை அவர் எதிர்பார்த்தார் போலும், அதுவும் கிட்டியது.

எட்டு மணி நேர வேலைத் திட்டத்தை இந்திய நாட்டில் நடைமுறைப் படுத்தக் கோரி, முதன் முதலில் புதுவை மண்ணில்தான் போராட்டம் வெடித்தது! அந்தப் புதுவையில் 1947 ஜனவரியில் மற்றொரு போராட்டம் ஆலைத் தொழிலாளர்களால் நடத்தப்பட்டு வந்தது. அப்போது, கோவைத் தொழிலாளர்கள் புதுவைத் தொழிலாளர்களை ஊக்கப்படுத்தி எழுதும் கடிதமாக உயிர்த்துடிப்புள்ள கவிதை ஒன்றினை தமிழ்ஒளி படைத்துள்ளார். அக் கவிதையின் தலைப்பு:

**புதுவைத் தொழிலாளருக்கு**
**கோவைத் தொழிலாளியின் கடிதம்**

**"தோழனே, 1939 ஜூலையில்-**
**கார்கடலும் வாயடங்கக் காற்றும் விசைகுறைய**
**ஊர்முழுதும் உன்னுடைய உத்வேகப் போராட்டம்!**
**அன்று,**
**சங்காரம் செய்திடுவேன் என்றெழுந்த சர்க்காரை**
**சிங்கப் படைபோலே சீறிஎதிர்த் தடித்து**
**ரத்தப்புனல் சிந்தி நாளெல்லாம் போர் செய்தாய்**
**யுத்தக் கடைசியிலே உன்னுடைய வெற்றி யொலி!"**

எனக் கடந்தகால நிகழ்வை நினைவூட்டிக் களப்போரில் இறங்கத் தூண்டுகிறார்; போர்க்குரலை ஓங்கி ஒலிக்கச் செய்கிறார். முடிவில்,

**"புதுவை பாட்டாளி வர்க்கமே!**
**உன்னுடைய கைகளிலே எஃகின் உரமுண்டு!**
**மன்னர்களை ஓட்டும் மகத்தான சக்தியுண்டு!**
**சோஷலிசம் பேசிச் சுரண்டலுக்குக் கால்பிடிப்போர்**
**வேஷங் கிழித்தெறியும் வீரமுண்டு; வன்மையுண்டு!**
**அன்று புரிந்த சமர் ஆற்றல் உணர்ந்திடுக!**
**இன்றைக்கே போர் முரசம் எண்டிசையும் கேட்கட்டும்!"**

நாங்கள்,

இங்கு வருகின்ற எண்ணற்ற தாக்குதலை
சங்காரம் செய்வோம்! ஜெயங்கொண்டார் ஆகிடுவோம்!
ஆகையால் நீ தளர்வுறாதே!

**முன்கை எடுத்திடுவாய்! முன்னேறித் தாக்கிடுவாய்!**
**நின்பெருமை வாழ்க! நிலைபெறுக சோஷலிசம்!**

***– "முன்னணி" ஜனவரி 2–1949.***

கவிதையின் சிலபகுதிகளைப் படிக்கும் போதே உத்வேகம் எழுகிறதல்லவா?

புறநானூறும், கலிங்கத்துப் பரணியும் பயின்ற தமிழ் நெஞ்சங்களில் தான் இதுபோன்ற கனல்தெறிக்கும் கவிதைகள் பிறக்க முடியும்!

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி முன்னெடுத்து நடத்திய வரலாற்றுச் சிறப்பு மிக்க தொழிற்சங்கப் போராட்டங்கள் பலவற்றையும் பாடியுள்ளார் தமிழ்ஒளி. அவை எப்போதும் வாடா மலர்களாகவே இருந்து வரும்.

இன்று மேதினம், சம்பிரதாயச் சடங்கு போன்ற ஒரு நிகழ்ச்சியாகி விட்டதைக் காணுகிறோம். 1940-50களில், மேதினம் பொருள் பொதிந்த வீரத்திருவிழாவாகக் கொண்டாடப்பட்டது உண்மை. அந்த விழாக்களில், **"உலகத் தொழிலாளர்களே ஒன்று படுங்கள்!"** என்ற முழக்கம் விண்ணதிர ஒலிப்பதைக் கேட்க முடிந்தது. சர்வதேச அரங்கில் ஏகாதிபத்திய சக்திகளைக் கண்டனம் செய்தும், விடுதலை இயக்கங்களை ஆதரித்தும் முழக்கமிடுவதே மேதினத்தின் குறிக்கோளாக நம்பப்பட்டு வந்தது. அந்தக் காலகட்டத்தில், நம் கவிஞர் அவர்கள் ஓர் அற்புதமான பாடலை, **"மேதினமே நீ வருக!"** என்ற தலைப்பில் பாடினார். அந்தப் பாடலை இப்போது படித்தாலும் உத்வேகம் எழும். இதோ சில பகுதிகளை உங்கள் முன் வைக்கிறேன் படியுங்கள்.

**"கோழிக்கு முன்னெழுந்து கொத்தடிமை போலுழைத்து**
**பாடுபட்ட ஏழைமுகம் பார்த்துப் பதைப்பதைத்துக்**
**கண்ணீர் துடைக்க வந்த காலமே நீவருக!**

மண்ணை இரும்பை மரத்தைப் பொருளாக்கி
விண்ணில் மழையிறக்கி மேதினிக்கு நீர்பாய்ச்சி
வாழ்க்கைப் பயிரிட்டு வாழ்ந்த தொழிலாளி
கையில் விலங்கிட்டுக் காலமெல்லாம் கொள்ளையிட்ட
பொய்யர் குலம்நடுங்கப் பொங்கிவந்த மேதினமே!

............ ............ ............ ............ ............ ............

நீல நெடுந்திரையாய் நீள்கின்ற கைகளினால்
ஞாலத் தொழிலாளர் நல்லரசைத் தோற்றுவிப்போம்
என்ற சபதமொடும் எண்ணரிய வேகமொடும்
குன்றா உறுதியொடும் கொள்கையோடும் நீ வருக!

............ ............ ............ ............ ............ ............

தொடுகின்றாய் நின்கையால் தொட்டதெலாம் பூக்காதோ
பொந்தில் உயிர்வாழ்ந்தார் போக்கற்றார்; இன்பமிலார்
கந்தல் மனிதரவர் கையில் அதிகாரம்
ஏற்றிவைத்த நின்பெருமை என்னுயிர்க்கும் மேலன்றோ?

............ ............ ............ .,........... ............ ............

அமெரிக்க மாநகரில் அன்றொருநாள் மக்கள்
குமுறி எழுந்து குருதியெலாம் சிதறியதால்
வான்சிவந்து மண்சிவந்து மாகடலும் தான்சிவந்து
ஊன்சிவந்து வந்தாய் உயிர்சிவந்த மேதினமே!

............ ............ ............ ............ ............ ............

உலகத் தொழிலாளர் ஒற்றுமையே நல்லுணர்வே!
அன்பே இருட்கடலின் ஆழத்திருந்து வந்த
முத்தே முழுநிலவே மேதினமே வாராய்நீ!
வாராய் உனக்கென்றன் வாழ்த்தை யிசைக்கின்றேன்!

– *"முன்னணி" மே இதழ் 1949.*

மேதினத்தின் மேன்மையினை சர்வதேச சங்கீதமாக இசை பரப்புகிறார் கவிஞர்.

என்னே வியப்பு! இதுவல்லவா, **எழுச்சிக்கவிதை!** இதுவல்லவா, **மக்கள் கவிதை!**

சிறப்புக்குரிய இக்கவிதையைத் தொழிலாளர் வர்க்கத்தின் முன் வைத்துப் பேசும் ஆர்வம், பொதுவுடைமை இயக்கத்தினர்க்கு அன்றும் இருக்கவில்லை. இன்றும் அதுதான் நிலை!

மக்கள் இயக்கங்கள், என்னதான் சக்தி வாய்ந்த மனிதர்களால் நடத்தப்பட்டபோதிலும், அந்த இயக்கங்கள், மக்களிடம் ஆழமாக வேரூன்றுவதற்கு, கலைசார்ந்த - இலக்கியம் சார்ந்த அணுகுமுறையைக் கடைபிடிப்பதும் அவசியமாகும். அப்போதுதான், மக்களை அணி திரட்டுவது எளிதாக அமையும்.

தமிழ்நாடு பொதுவுடைமை இயக்கத்தைப் பொறுத்தவரை, கவிஞர் தமிழ்ஒளி ஒரு பொக்கிஷமாக விளங்கியவர். அந்தப் பொக்கிஷத்தை புறக்கணிப்பதிலும், புழுதியில் கிடத்துவதிலும்தான் இங்கே பலருக்கும் நாட்டம் பிறந்தது.

தமிழ்ஒளி சோர்ந்து போனார். கழகம் சார்ந்திருந்த காலத்தில் தன்னுடைய கவிதைத் தொகுதிகள் வெளிவராமல் தடுப்பதற்கு எந்த "சக்தி" முன்னின்றதோ, அதே "சக்தி"தான், இங்கேயும் புறந்தள்ளுவதாகப் புரிந்து கொண்டார். இனி, இயக்கச் சார்புகளை கடந்து தனித்திருக்க விரும்பினார். 1954ல் இயக்கத்தைவிட்டு விலகி வந்தவர், சிறிது கால இடைவெளிக்குப் பின்னர் கவிதைப் பயணத்தின் **மூன்றாம் கட்டப் பணியைத்** தொடங்கினார்.

பொதுவாக, "மண்ணின் மைந்தர்கள்" என்ற சொல்லுக்கு முன்னுரிமை படைத்தவர்கள் கவிஞர்களே. மொழிப்பற்றும், இனப்பற்றும், நாட்டுப் பற்றும் எப்போதும் விலக்க முடியாத கவசங்களாகவே அவர்களுடன் இருந்துவரும். நம் கவிஞரும் அத்தகைய உணர்வுடன் வாழ்ந்தவர்தாம்.

இப்போது கவிஞரின் கவனம், தமிழ் இலக்கியத்தின்பால் திசை திரும்பியது. பழந்தமிழ் இலக்கியங்களை மீண்டும் பயிலத் தொடங்கினார்.

இளங்கோவின் சிலம்பும், திருத்தக்க தேவரின் சிந்தாமணியும் அவரைப் பா வண்ணங்களில் நாட்டம் கொள்ளச் செய்தன. கம்பன் கவிதைகள் ஓசை நயங்களை உணர்த்தின. பரணிப் பாட்டும், குறவஞ்சிக் கூத்தும் தாளம் போட வைத்தன. தேவாரமும், திவ்விய பிரபந்தமும் தமிழ்த் தேனாற்றில் திளைக்கச் செய்தன.

தமிழ்ஒளி புத்தொளி பெற்ற கவிஞராகத் தலைநிமிர்ந்தார். நெஞ்சத் தடாகத்தில் நித்தம் நித்தம் புதுமலர்கள் பூத்தன. முதல் மலரைத் தன் காதலிக்கு மடலாக அனுப்பி வைத்தார். ஏனைய மலர்களை மாலையாகத் தொடுத்து மாதவிக்கு அர்ப்பணிக்க முன் வந்தார்.

சிலப்பதிகாரத்தில், மாதவிக்கு இளங்கோவடிகள் அளிக்காத ஒரு சிறப்பினைத் தாமே அளித்திட முடிவு செய்தார். அதன் பொருட்டு வேனிற்காதை நிகழ்ச்சியை இசை நாடகமாக இயற்றக் கருதினார்.

கானல் வரிப் பாடலால், கோவலனைப் பிரிந்த மாதவி வேனிற் காதையில் காதலன் வருகையை எதிர்பார்க்கிறாள் அல்லவா? அதனை, இளங்கோவடிகள்-

**"மாலை வாரா ராயினும் மாணிழை**
**காலை காண்குவமெனக் கையுறு நெஞ்சமொடு**
**பூமலர் அமளிமிசை பொருந்தாது வதிந்த"**

எனச்சிலவரிகளால் குறிப்பிட்டார். அந்த மாதவி நல்லாளை, மீண்டும் யாழ்மீட்டிப் பாட வைத்தும், மனத்திடை உறங்கிய எண்ண அலைகளை எழுப்பி, பாத்தொடுக்கச் செய்தும் இனிய சந்தங்களில் இசைத் தமிழைப் பொழிந்தார். அதையே இசை நாடகம் எனவும் மொழிந்தார்.

பூப்போல் பொலிந்து, புகழுருவமாய் எழுந்த "**விதியோ வீணையோ?**" இசை நாடகம், எழுதி முடித்த பிறகு பல ஆண்டுகாலம், அச்சாக முடியாத சூழலை நண்பர்களே உருவாக்கிவிட்டனர். மாதவி நல்லாளின் மலர் அமளியைச் சிதைத்த ஊழ்போன்று, நம் கவிஞர் வாழ்க்கையிலும் ஊழ், பாழ் செய்ய வந்தது. நடக்கக் கூடாததெல்லாம் நடந்தன. நண்பர்கள், துரோகிகளாக மாறித் தங்களின் மெய்யுருவை வெளிப்படுத்திக் கொண்டனர்.

கவிஞருடன் நம்மால் தொடர்பு கொள்ள முடியாத ஒரு காலகட்டம். ஓர் ஓட்டல் தொழிலாளியின் வாயிலாகத் தகவல் அறிந்து பேரிடரிலிருந்து அவரை மீட்டோம். பின்னர், திருவொற்றியூர் தோழர்களின் உதவியுடன் புனர்வாழ்வு பெற்றார் கவிஞர்.

மீண்டும் ஓர் இடைவெளி. பிறகு 1956ல் கவிஞர் நம்மைக் காண வந்தார். நட்பு இறுகியது. நம் இருப்பிடமே அவருக்குப் புகலிடமானது. மாதவியின் வரலாற்றுச் செய்திகளை இணைத்து "மாதவிகாவியம்" பாடத் தொடங்கினார். புகார்க் காண்டம், பட்டினக்காண்டம் என இரண்டு காண்டங்களை எழுதி முடித்த நிலையில், "கண்ணப்பன் கிளிகள்" கருக்கொண்டது. அதையும் எழுதி முடித்தார். மூன்றாவது காண்டத்தை எழுதலாமே எனத் தூண்டினோம். "இதோ, அதுவும் முடிந்துவிட்டது" என்றார். நாம் வியப்புற்றோம்.

"விதியோ, வீணையோ?" இசை நாடகத்திலிருந்து நாடகக் கூறுகளை விலக்கிவிட்டு பிறவற்றை காவியப் பகுதிகளாக எடுத்தும், புதிதாக இரு காதைகளை எழுதியும் "இதுதான் மூன்றாவது துறவுக் காண்டம்" என மொழிந்தார்.

நாம் எதிர்பார்த்தது அதிகம். மூன்றாவது காண்டத்தில் "மணிமேகலை" பிறந்ததைக் கூறி, அவளுக்குப் பிள்ளைத் தமிழ் பாடப் போவதாகச் சொன்னார். அதன் பொருட்டு, "மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்" நூலினை நாம் வாங்கிக் கொடுத்திருந்தோம். அது பற்றி வினவிய போது கவிஞர் சொன்னார்:

"மாதவி காவியம் அச்சாகி வெளிவரட்டும். பிறகு மணிமேகலை காதையை தனிக் காவியமாகப் பாடலாம்."

அப்படி ஒரு சூழ்நிலை உருவாகவில்லை. கவிஞரும் பல பதிப்பகங்களை நாடிச் சென்று **"மாதவி காவியத்தை"**ப் படித்துக் காட்டினார். மனம் திறந்து பாராட்டியவர்கள், வாய்திறந்து நூலை வெளியிடுவதாகச் சொல்லவில்லை.

நாம் ஆறுதல் கூறினோம். ஒருநாள் கவிஞருடன் "பாரி நிலையம்" சென்றோம். அப்போது வெளிவந்திருந்த **அறிஞர் ப. ராமசாமியின் "போதி மாதவன்", "தம்மபதம்"** நூல்களை வாங்கி வந்தோம்.

அறைக்குத் திரும்பியதும் கவிஞர் தம்மபத நூலை படிக்கத் தொடங்கினார். இருதினங்களில் **புத்தர் குறள்** உருவானது. அதனை மாதவி காவியத்தில் அறவண வடிகள் மாதவிக்கு அறங்கூறும் கூற்றாக அமைத்தார்.

பின்னர், "போதி மாதவன்" நூலினை வெகு நிதானமாகப் படித்தார். மனம் அமைதி கண்டது. ஒருநாள், "புத்த காவியம்" பாடத் தோன்றுகிறது என்றார். நாம் மகிழ்ச்சி யடைந்தோம். அறையில் தமிழ்த் தென்றல் வீசத் தொடங்கியது. கவிமலர்கள் பூத்துக் கமழ்ந்தன. புத்தம்புது சந்தங்கள் நாவில் நடமாடி வெளிவருவதைக் கேட்டு மகிழ்ந்தோம்.

அறம்பாடி அமைந்த புத்தபகவானின், திறம்பாட எழுந்த கவிஞர், தொடக்கத்தில் கபிலை நகரின் சிறப்பைக் கூறி, உரோகிணி ஆற்றின் அழகைப் பாடினார். தொடர்ந்து, சுத்தோதனர் பெருமைபேசி, மாயாதேவியின் மாதவத்தைப் பாடினார். பின்னர் போதிமாதவரின் ஜனனத்தைப் புகழ்ந்து பாடினார். அவ்வளவில் எழுத்துப்பணி தடைபட்டது.

நூலில் இயன்றுள்ள பாக்கள் அத்தனையும் அழகு தமிழ்ப்பாக்கள். அள்ளிப் பருகும் தெள்ளமுதாய் அமைந்தவை. மேலும் மேலும் சுவை கூடி வரும் என எதிர்பார்த்தோம். பறிக்காத மலர்கள் சருகாவது போல கவிஞர் உள்ளம் சோர்ந்து போயிற்று.

இது குறித்து டாக்டர் மு. வரதராசனார் அவர்கள், "புத்தர் பிறந்தார்" என்ற அருமையான காவியம் முடிக்கப்படாமலே குறையாக நின்று

விட்டது. தமிழிலக்கியத்தின் குறையாகவே ஆகிவிட்டது எனக் கூறியுள்ளது தமிழ் மக்கள், மனங் கொள்ள வேண்டிய உண்மையாம்.

மேற்குறிப்பிட்ட காவியப் படைப்புகளை எழுதி முடிக்கும் வரை கவிஞர் நம்முடன் இருந்தார். சில நண்பர்கள் வருந்தி அழைக்கவும் இடம்மாறிச் சென்றார். இது அவருடைய இயல்பான செயல் எனத் தெரிந்து அமைதி கொண்டோம்.

அந்தக் கால கட்டத்தில், அவருடைய காவியப் படைப்புகளை ஏற்காத பதிப்பகங்கள் உரைநடை நூல்களை எழுதி வாங்கி வெளியிட்டன. சிறுகதைகள், குட்டிக்கதைகள், தனிக்கவிதைகள், கட்டுரைகள் என பலதிறப்பட்ட படைப்புகள் வெளிவந்தன. அவற்றின் ஊடே, **"கோசலைக்குமரி"** என்ற தலைப்பில் ஒரு உன்னதமான குறுங்காப்பியத்தையும் கவிஞர் படைத்தது நமக்கு ஆறுதலாய் இருந்தது.

தமிழ்ஒளியின் கவிதைப் பயணத்தில் இக்காவியம் இறுதிப் படைப்பாகும். முதல் இரண்டு கால கட்டங்களில் எழுந்த கவிதை படைப்புகளிலிருந்தும் முற்றிலும் மாறுபட்ட **மூன்றாவது கட்டப் படைப்புகளிலிருந்து** இனிய கவிதைகள் சிலவற்றை உங்கள்முன் வைக்கிறோம் சுவைத்து மகிழுங்கள்.

காதலிக்கு அனுப்பிய கவிதை மடலில் இருந்து ஐந்து அடிகள் மட்டும்:

**"சென்று மறைந்தன நாட்களும் மாதமும்
தேய்ந்தது திங்களும் ஓர் பிறையாய்!
என்று வருவைநீ என்னுயிர்க் காதலி
ஏங்கும் அழுகுரல் கேட்டிலையோ?"**

**"பூத்த மலர்மிசை உன்முகம் காண்பதும்
புன்னகை காண்பதும் தாரகையில்
நாத்தமும் பேறவுன் நாமம் ஜபிப்பதும்
நாளை யுகம்என எண்ணுவதும்"**

**"பஞ்சணை மீது தணற்புழு வாய்இப்
பாவி துடிப்பதும் பார்க்கிலையோ?
நெஞ்சணை மீது துயிலுற என்றுநீ
நீந்தி வருவை என் கைகளிடை!"**

**"வந்தது தென்றலும் வண்ண மலரொடு
வார்த்தைகள் பேசின வண்டுகளும்
வந்தது செங்கதிர் வையக மங்கையின்
வாச மலரிதழ் முத்தமிட!"**

எனத் தொடரும் கவிதை மடலின் முடிவில்:

"சென்று மறைந்தன நாட்களும் மாதமும்
தேய்ந்திடும் திங்களும் ஓர்பிறையாய்!
என்று வருவைநீ என்னுயிர்க் காதலி
ஏங்கும் அழுகுரல் கேட்டிலையோ?

இந்த மடலை அனுப்பிய கவிஞருக்கு மறுமொழி கிடைத்ததா என்ற தகவல் நம்மிடமில்லை. பின்னாளில், தன் காதலியைக் காணச்சென்ற கவிஞருக்கு ஏற்பட்ட பாதிப்பு என்ன என்பதை மட்டும் வரலாற்றில் பதிவு செய்துள்ளோம்.

அதனாலென்ன நடந்தவற்றை மறப்போம். கவிதையைக் காண்போம். "விதியோ வீணையோ?" நூலில் மாதவிக்குச் சாற்றிய மலர் மாலைகளில் மணங்கமழும் முதல் பாடல் இது. படியுங்கள்:

"காவிரி மங்கை நடந்து கடற்கரை
கண்டு குளிக்கு மிடம்
பூவிரி தாழைக ளென்றவள் ஆடை
களைந்து புனைந்த இடம்
நீவு நெடுந்திரை யோடு கடல்விளை
யாடிய நெய்தல் இடம்
யாவும் விதிக்கிரை யாகுமெனக் கடல்
ஆடிய கானல் இடம்!"

இந்த இடத்தில்தான் கானல்வரிப் பாடல் பாடப்படுகிறது. விளைவு கோவலன் பிரிவு அல்லவா. அதனை-

"யாழ் உருக்கொண்டு கிடந்திட்ட ஊழினால்
அதுதரும் போதை யென்னும்
ஏழ்இசைக் கானல் மூட்டிய வெம்மையால்
இணைந்து வாழ்கின்ற ஆண், பெண்
வாழ்வினால் வந்த வலுவற்ற தன்மையால்
வளர்கின்ற ஐயங்களால்
தாழிருங் கூந்தல் தையலாள் மாதவி
தனித்துளம் உருகு கின்றாள்!"

உருகிய மனத்தால் பெருகிய துயரமே கதையல்லவா? அந்தக் கதையும் நீங்கள் அறிந்ததுதானே; அந்தக்கதை நிகழ்ந்த காலத்தில் நிலா உலா வரும் நேர்த்தியைக் காணுங்கள்.

"குயில் கூவித் துயிலெழுப்பும்
கொம்புமலர் கண்விழிக்கும்
குளிர்ந்த தென்றல்

வெயில் வருத்தம் நீங்கிடவே
வீசவரும்; நிலாவந்து
விருந்து நல்கும்!
பயில்கின்ற கடலலைகள்
பாட்டுக்கு முத்தங்கள்
பரிச ளிக்கும்!
உயிர்களெல்லாம் இன்பத்தால்
உளந்தழுவும் புகார்ப்பதியில்
ஊடல் ஏது?"

"மீன் உலரு முன்றிலிலே
மேல் பறந்து வருகின்ற
பறவை தன்னை
மான் கொம்பு போன்ற மலர்க்
கொம்பாலே மடவார்கள்
மறித்த வாறு
தான் என்ற அகங்காரம்
தலைதூக்கி நல்லன்பைத்
தடுத்த போதும்
வான்பறவை யெனத்துள்ளி
வருங்காதல் நினைவை வழி
மறிப்ப தேது?"

தடைகளைக் கடந்து வரும் காதலை வழிமறிக்க முடியுமா? இங்கே அது நிகழ்கிறது. நாளும் நாளும் கோவலனை நினைந்து நினைந்து வருந்திய மாதவி, அவனைக் காணாமலே கண் சோர்வதும், பின்னர் துறவு நோற்பதும் நிகழ்ந்த கதையல்லவா? இந்நூலில், சினமுற்ற மாதவி, தான் மீட்டிய யாழினை உடைப்பதாகக் கூறுகிறார் கவிஞர். அதனை, வீணையின் நரம்பு அறுந்து அதிர்வது போன்ற சந்தங்களில் ஒலி யெழுப்பி மெய்சிலிர்க்க வைக்கிறார்.

பாடல் இதுதான் படியுங்கள்...

"விதியை உடைத்திட ஓடி
வீணை உடைத்திடு கின்றாள்!
சதியை உடைத்திட எண்ணித்
தலையை உடைத்திடு கின்றாள்!

கலையை உடைத்திடு கின்றாள்!
கனக மணிக்குரல் சிந்தும்
சிலையை உடைத்திடு கின்றாள்!
திண்மை படைத்திட நின்றாள்!"

**(வேறு)**

**"ஒடித்தனள் இடர்,**
**உடைத்திடத் தரை,**
**உருட்டினள் யாழை!**
**அடித்தனள் அலை**
**அடித்திடல் என**
**அரற்றினள் ஏழை!"**

**(வேறு)**

**"புனலிற் குமிழ்போல் உடைந்தது!**
**புயலிற் படகாய் உடைந்தது!**
**கனவிற் கனவாய் உடைந்தது!**
**கண்மணி வீணை உடைந்தது!"**

மலை யருவி, பாறையில் சிதறித் தெறிப்பது போன்ற இன்னோசை படித்து மகிழவும், பாடிக் களிக்கவும், உகந்த சந்தங்கள்.

இதனைத் தொடர்ந்து இரண்டாண்டு இடைவெளிக்குப் பின்னர் **"மாதவி காவியம்"** படைக்கப்பட்டது. அதில் பயின்று வரும் சந்தங்கள் அனைத்தும் புத்தம் புதியன. பொலிவு மிக்கன.

அங்கே, ஊர்வசியின் பரம்பரை வாரிசாக மாதவி பிறப் பெடுக்கிறாள். ஆடல் பயின்று அரங்கேறுகிறாள். கோவலனோடு கூடிக்களித்து மணிமேகலைக்குத் தாயாகிறாள். பின்னர், ஐயம் எழுந்து, பாட்டின் பதப்பொருள் மாறி ஊடல் நிகழ்ந்திட, பலகாலம் பிரிவுத் துயரால் வருந்தி வருந்தி சோர்ந்து போகிறாள். மதுரையில் கோவலன் மாண்ட செய்தியைகேட்டு மனம் குமுறுகிறாள். அறவணவடிகள் போதித்த அறிவுரை அப்போது உதவுகிறது. அதன் வழிசார்ந்து துறவு நோற்கிறாள்.

இக்கதைக்கான குறிப்புகளை - சிலப்பதிகாரம் - மணிமேகலை நூல்களிலிருந்து திரட்டியுள்ளார் கவிஞர்.

தற்கால நிகழ்வுகளைக் காவியமாக்குவதைவிட, மக்கள் மனதில் பதிந்துவிட்ட, வழிவழியாகப் பேசப்பட்டுவரும் கதைகளை மீண்டும் கவனத்திற்குக் கொண்டு செல்வதே ஏற்புடையதாக அமைகிறது. உலகில் புகழ்மிக்க இலக்கியங்கள் பலவும், புலவன், வாழ்ந்த காலத்திற்கு முற்பட்ட நிகழ்வுகளைப் பறைசாற்றுவனவாகவே உள்ளன என்றும் அவர் கூறுவார்.

தாம்படைத்த தற்கால சமூக வாழ்க்கையைச் சித்திரிக்கும் "நிலை பெற்ற சிலை" "வீராயி" "மேதின ரோஜா" போன்ற குறுங்காப்பியங்களை யாரும் பொருட்படுத்தவில்லை என்ற மனக்குறை அவருக்கு இருந்து வந்தது. அதனைக் களைந்திடும் முகத்தான். "சிலம்"பின் வழிநூலாக இதனை எழுதத் தொடங்கினார் நம் கவிஞர்.

நூல் எழக் காரணம் யாதெனக் கூறிவிட்டோம். இனி, காவியத்தில் இயன்றுள்ள கவிதைகள் சிலவற்றைக் கூறுவோம். மூல நூலாம் சிலப்பதிகாரத்தின் தொடக்கச் செய்யுளாக வரும் "மங்கல வாழ்த்துப் பாடல்" போன்று, வழிநூலாம் "மாதவி காவியத்திலும்" "ஞாயிறு வணக்கம்" இடம் பெற்றுள்ளது. அதிலிருந்து ஓரடி மட்டும்:

**"நீலமாய்க் கவிந்து வெள்ள**
**நீரெனப் பொலிந்து தோன்றும்**
**கோலமாய் வளைந்த கடல்மேலே - ஒளி**
**கொண்டுவரு கின்றகதிர் வேலே!"**

என ஞாயிற்றின் தோற்றத்தை நயம்படக் கூறுவார். அடுத்து வரும் பூர்வ கதையில்-

ஆடல் பயின்று வரும் அணங்கின் அழகு, ஆடவர்கண்களைப் பறிக்கிறதாம். அந்த அழகின் தன்மையைக் கவிஞர் வியப்புடன் பாடுகிறார்.

**"காதளவாய் வரும்விழியும்**
**கண்டளவாய் வருமொழியும்**
**சூதளவாய் வருமுலையும்**
**சொல்லளவாய் வருங்கலையும்**

**போதளவாய் வருமுகமும்**
**புகழளவாய் வரும் அகமும்**
**யாதளவாய் கூறுவனோ**
**அவளழகின் அளவெல்லாம்!**

**மின்னளவாய் வரும் இடையும்**
**வீழ்தளவாய் வருஞ்சடையும்**
**பொன்னளவாய் வருநிறமும்**
**பூணளவாய் வருந்திறமும்**

**இன்னளவாய் வரும் இயலும்**
**இவள் அளவாய் வரு மயலும்**
**என்னளவாய்ச் சொல்லுகெனோ**
**இயல்எழிலின் இசைவெல்லாம்?"**

அளவிட்டுக் கூற இயலாத அழகு படைத்த ஆடல் பயின்ற அணங்கின் அரங்கேற்றம் ஒருநாள் நிகழ்கிறது. அந்த அரங்கின் அமைதி என்ன?

"சிற்ப முறைப்படி செய்து
சித்திர வர்ணமும் பெய்து
விற்பன ரின்தொழில் மேவ
விந்தை நிறைந்துகு லாவக்
கற்பனை யாவும் உயிர்த்துக்
கண்ணெதிர் நின்றதை யொத்துப்
பொற்புது மன்றம் அமைத்தார்
பொன்னுல கத்தும் வியக்க!"

வியக்கத்தக்க அரங்கின் சிறப்பினை மேலும் விரிவாக விவரிக்கிறார். பின்னர் அங்கே ஊர்வசியின் சாப வரலாறு நாடகமாக அரங்கேறுகிறது. நிகழ்ச்சி முழுவதும் இசையும் அபிநயமும் தாளக் கட்டுடன் அலைமோதுகிறது. சான்றுக்கு ஒரு பாட்டினைக் கேளுங்கள்.

"மயில் எனப் புள்ளிப்புள்ளி
மான் எனத் துள்ளித்துள்ளி
குயில் எனக் கிள்ளிக் கிள்ளி
குரல் இசைத்தாள் - ஒரு
குழல் இசைத்தாள் - தமிழ்ப்
பதம் படித்தாள் - அபி
நயம் பிடித்தாள் - நீல் - மயில்

அலையெனப் பொங்கிப் பொங்கி
அமிழ்தெனத் தங்கித் தங்கி
கலைதரும் சிங்கிச் சிங்கி
கைமடுத்தாள் - மலர்க்
கணை எடுத்தாள் - விழி
இணை தொடுத்தாள் - மொழி
எனவிடுத்தாள்! வேல் - மயில்

கிளி எனக் கொஞ்சிக் கொஞ்சி
கிளர்மொழி வஞ்சி வஞ்சி
அளி தரும் பஞ்சிப் பஞ்சி
அடி அசைத்தாள் - மலர்
முடி அசைத்தாள் - வரும்
படி அசைத்தாள் - பெரும்
பயன் இழைத்தாள் - பார் - மயில்"

அரங்கேற்றம் முடிந்து இல்லம் திரும்பிய மாதவியின் மனநிலையைக் கவிஞர் பாடுகிறார்:

"முதல் வசந்தம் வரக்கண்டு
மோகிக்கும் கன்னிமரம்
மதுகொண்டு பூப்பெய்தி
மலர்கொண்டு நின்றதுபோல்

கண்வண்டு துள்ளக்
கவிதை உயிர்கொள்ளப்
பண்கொண்ட யாழ்கொண்டு
பாடுவள், மாதவியே!"

- என்ன பாடுகிறாள், கேளுங்கள் :

"தென்றல் காற்றே என்னுள்ளந்
திருடிச் சென்ற ஒரு கள்வன்
மன்றல் கொண்டு வாரானோ?
மாலை கொண்டு வாரானோ?

பொன்னிப் புனலே என்னுள்ளம்
புகுந்து கொண்ட ஒரு கள்வன்
மின்னி வெளியில் வாரானோ?
மிதந்து வளியில் வாரானோ?

அரங்கில் நோக்கி என்னுள்ளத்
தரங்கில் புக்க ஒரு கள்வன்
வரங்கொண் டின்று வாரானோ?
வாழ்வு நல்க வாரானோ?"

அவள் நினைத்தபடியே அரங்கில் கண்ட அந்த ஆணழகனே அவளை நாடி வருகிறான். உள்ளம் பூரிக்க மகிழ்ச்சி பொங்குகிறது. வார்த்தை வரத் தயங்குகிறது. வரவேற்க வேண்டுமே - (மணம் புணர் காதையில்) மாதவியின் நிலையிது :

"பார்த்தாள்! எழுந்தாள்!
பணிந்தாள்! பணிமொழி!
வேர்த்தாள் அவளை
விழுங்கிற்று வெட்கம்!

காற்றிற் கொடிபோல்
கலங்கினாள் உள்ளெழுந்த

ஊற்றாற் குளித்தாள்
உணர்ச்சிக் கடலானாள்!

'ஐய அமர்க' என்றாள்
அப்புறம் என்சொல்வாள்
மையல் அலையில்
மாழ்கினாள் மூழ்கினாள்!"

நிகழ்ச்சியை உயிர்ச்சித்திரமாக நம் முன்னிறுத்துகிறது கவிதை. இதனை தொடர்ந்து வரும் பாடல்களும் இனியன. அடுத்து-

"அந்திமாலை சிறப்புச் செய்காதையில்" வரும் கலிவெண்பா, வெகு அற்புதமான செய்யுள். தொடர்ந்து வரும், "அறவண வடிகள் அறங்கூறும் காதையில்" இடம் பெற்றுள்ள குறட்பாக்கள் முழுவதும் புத்த பகவர் மொழிந்த "தம்மபத" தத்துவங்கள். படித்து மனதில் இறுத்த வேண்டிய மெய்ஞ்ஞான மொழிகள்.

கதை முடிவில் வரும் "கோசிகமாணி காதையில்" மாதவி, கோவலனுக்கு வரைந்த மடலில்

"பெற்றவர் பெரிதும் இன்னல்
உற்றவர் தமைப் பிரிந்து
நற்றவத் துறவி போன்று
நலிந்துநீர் சென்ற ஆறும்
கற்புடை மகளை அந்தக்
கண்ணகி தெய்வத் தைநீர்
பிற்பட இட்டுச் சென்ற
பெருந்துயர்க் கதையும் கேட்டுத்
துன்பத்துள் வீழ்ந்த தன்றி
தொல்லையுள் ஆழ்ந்த தன்றி
இன்பத்தை அன்றி வேறே
எதனையும் தராத நான்றான்
முன்பென குற்றம் செய்தேன்?
முறை எதும் பிறழ்ந்த துண்டோ?
அன்புநீர் எனைமன் னித்தே
அடைகநும் இல்லம்!"

என ஓலையை வரைந்து மூடி கோசிகமாணி மூலம் கொடுத்தனுப்பினாள்.

கோசிகமாணி மதுரை சென்று கோவலனைக் கண்டு மடலைக் கொடுக்கவும், அதனைப் படித்த கோவலன்:

**"கள்ளத்தால் அல்ல,**
**கருத்தாள் அவள் உயர்ந்தாள்"**

என உணர்ந்து இம்மடலைத் தன் பெற்றோரிடம் அளிக்குமாறு கூறி வழியனுப்புகிறான்.

நூல் முடிவில் வெண்பாக்கள் மாதவியின் புகழ் பேசுவதைக் கேளுங்கள்.

## வெண்பா

**"பூம்புகார் பெற்ற புதல்வி புவனங்கள்**
**தேம்பப் பிரிந்த திருச்செல்வி - மேம்பட்ட**
**நூலோர்கள் ஏற்று நுவன்ற துறவேற்றாள்**
**மேலோர்கள் மேற்றே புகழ்!"**

**"சின்னக் கணிகை எனத்தோன்றிக் கோவலன்**
**சொன்ன கருத்தில் துயரெய்தி - அன்னந்தன்**
**காதலன் வீழக் கடுந்துறவை மேற்கொண்டாள்**
**மாதவியும் மாதவமும் காண்!"**

மாதவி காவியம், மாதவப் பயனாய் விளைந்த புகழ் ஓவியம். நம் கவிஞர் தன் படைப்புகளில் மன நிறைவுக் கண்ட காவியப் பெட்டகம். இதனை அழியாப் புகழ்தரு அமர காவியம் என்றும் கூறலாம்.

இனி, **"கண்ணப்பன் கிளிகளைக்"** காண்போம். மாதவி காவியத்தில், கோவலன் கூற்றாக வரும் ஒரு வெண்பா, இக்கதைக்குக் கருவாக அமைகிறது.

## வெண்பா

**"குற்றம் குணமிரண்டும் கூட்டிற் கிளிகளென**
**சுற்றம் படநின்ற தொல்லுலகில் - பெற்றம்**
**பெரிதுண்டு மன்னிக்கும் பேர்க்கென் றறிந்தால்**
**அரிதுண்டோ ஆற்றும் அறம்?"**

கதையில், கண்ணப்பன் இரண்டு கிளிகளை ஒரு கூட்டில் வைத்து வளர்க்கிறான். ஆண்கிளியின் பெயர் 'குணம்'? பெண் கிளியின் பெயர் 'குற்றம்'. கண்ணப்பன் ஆண்கிளியுடன் கொஞ்சுவதைப் பொறாமல் பெண்கிளி அவனைக் கொத்தி விடுகிறது. கோபத்தால் அக்கிளியைத் தனிக்கூண்டில் அடைக்கிறான் கண்ணப்பன். பெண் கிளியைப் பிரிந்த துயரத்தால் வாடி வருந்திய ஆண்கிளி இறந்து விடுகிறது. அதனைப் புதரில் எறிந்துவிட்டு, பெண்கிளியை விடுதலை செய்கிறான். ஆண்கிளியைத் தேடி ஆகாயத்தில் பறந்த பெண்கிளி, ஆவிசோர்ந்து

கீழே விழுகிறது. அது விழுந்த இடம், ஆண்கிளி கிடந்த புதர். மறுநாள் இதனைக் கண்ணப்பன் கண்டு, வருந்தி அடக்கம் செய்கிறான்.

சேர்ந்து வாழ்ந்த காதலரைப் பிரித்ததன் விளைவைச் சுட்டிக்காட்டி குற்றம் எதுவென உணர்த்துகிறார் கவிஞர்.

இனி, கவிதைகளைக் காண்போம்:

பெண்கிளியைப் பிரித்த கண்ணப்பன், ஆண்கிளியிடம் அன்பு காட்டுகிறான்.

"உண்ணப் பழம் எண்ணிக் கொடுத்தான் - பால்
ஊற்றிக் கொஞ்சம் ஆற்றிக் கொடுத்தான்
வண்ணப்பழம் பாலை அருந்தி - நீ
வளர்கையில் என்னகுறை? என்று விளித்தான்!"

- இதற்கு மறுமொழியாக ஆண்கிளி கூறுவது:

"பால் எனக் கெதற்குக் கண்ணப்பா! - பெண்
பாலெங்கே சொல்லுநீ கண்ணப்பா!
கூடெனக் கெதற்குக் கண்ணப்பா - கண்
கூடங்கே சொல்லுநீ கண்ணப்பா!"

## (வேறு)

"வயிறு பசிக்குதில்லை கண்ணப்பா - உடல்
வசத்தில் இருக்குதில்லை கண்ணப்பா
கயிறுபோட்டுக் கட்டினாற் கண்ணப்பா - மனம்
கட்டுக் கடங்குதில்லை கண்ணப்பா!"

- ஆண்கிளியின் நிலை இதுவென்றால், பெண்கிளியின் நிலை என்ன?

"சின்னஞ் சிறு கூட்டில் - எழிற்
சித்திரப் பெண்கிளியும்
தன்னந் தனிமையிலே - துயர்
தாங்கிக் கிடக்கையிலே

பாலை அருந்த வில்லை - முப்
பழமும் அருந்தவில்லை!
காலை அருந்த வில்லை - இருட்
கண்டும் அருந்த வில்லை!"

பிரிவுத் துயரத்தில் ஆழ்ந்த கிளிகள் இரண்டும் கனவுகாண்கின்றன. அக்கனவில் பெண்கிளி காண்பது: என்ன?

"தத்தையும் தானும் பறந்தன - அத்
தாழ்வரை நோக்கிப் பறந்தன!
முத்தையும் பொன்னையும் சேர்த்தன - பின்
மோகச் சரம் ஒன்றைக் கோத்தன!"

"மேகச் சரிவிற் பறந்தன - அம்
மின்னலைக் கன்னலைச் சேர்த்தன!
மோகச்சரம் ஒன்றைக் கோத்தன - பின்
முத்துச் சரம் ஒன்றை யாத்தன"

ஆண்கிளியின் புலம்பலைக் கேளுங்கள்.

"தத்தை யம்மா தத்தை யம்மா
ஓடிச் சென்றாயோ? - கடல்
முத்தை யம்மா முத்தை யம்மா
தேடிச் சென்றாயோ?"

(வேறு)

"ஊழி பிறந்தது தத்தையம்மா! - உயிர்
ஓடம் பிழைக்குமோ தத்தையம்மா!
ஆழி கவிழ்ந்தது தத்தையம்மா - இனி
ஆவி பிழைக்குமோ தத்தையம்மா!"

காலை விடிந்ததும் கண்ணப்பன் கண் விழித்துப் பார்க்கிறான். கிளிகளின் மிழற்றல் கேட்கவில்லை. அந்தக் கூட்டினில்...

"கொத்தாக ஒடிந்தஇலை
கூட்டிற்குள் இருந்ததுபோல்
பித்தாக இருந்தகிளி
பிணமாகக் கிடக்கிறது!"

"வக்கனைகள் பேசிவந்த
வண்ணக் கிளி எமனின்
கைக்கணைகள் பட்டுக்
கரிந்து கிடக்கிறது!"

"மனிதன் துரத்திவிட
மரணம் அணைத்த
புனித உடலம்
புழுங்கிக் கிடக்கிறது!"

- கண்ணப்பன் வருந்திப் புலம்புகிறான்:

"அஞ்சுகத்தை நான் பிரித்த
அழிவுக்கு நீ வருந்தி
நெஞ்சுடைந்தாய்! இஃதுன்றன்
நெறிமுறை என்குறை"

"தத்தையை நான் பிரித்த
தவறுக்கு நீ வருந்தி
செத்துவிட்டாய்! இஃதுன்றன்
திருவுள்ளம்! என்கள்ளம்!"

செத்துவிட்ட கிளியைப் புதரில் எறிகிறான். பின்னர், பெண்கிளியை விடுதலை செய்கிறான். அது புதருக்குச் சென்று இறந்த கிளியின் உடலைக் கண்டு,

"தத்தை கொதித்துத்
தரையில் தணல் மிதித்துப்
பித்துப் பிடித்ததுபோல்
பிதற்றத் தொடங்கியது!"

அந்தப் பிதற்றல்.....

"பேசுவதும் அன்பைப்
பிதற்றுவதும் பைஞ்சிறகு
வீசுவதும் என்றைக்கு
வீழ்ந்தாயோ இன்றைக்கு?"

"கூடுவதும் கொஞ்சிக்
குழறுவதும் என்மேனி
மூடுவதும் என்றைக்கு
முடிந்தாயோ இன்றைக்கு?"

தத்தைக்கிளி பலவாறாகப் புலம்பி ஓய்ந்த. பிறகு கண்ணப்பனை நோக்கிக் கூறுகிறது.

"பிறர் இறந்தால் எமக்கென்ன
பெயர் எடுப்போம் என்றெண்ணும்
நரர்உலகப் போக்குக்கு
நாயகன் நீ கண்ணப்பா!"

தத்தை பசியினால் பிதற்றுகிறது என்று கருதிய கண்ணப்பன் அதற்கு பழங்களைக் கொடுக்க முன் வருகிறான். அதை ஏற்கவில்லை தத்தை.

"எட்டிக்கனி தந்தான் அதை
எவ்வா றுணமுடியும்?

கொட்டிக்கனி தந்தான் அவன்
கொள்கை மரம் எட்டி!"

"கையோ இவன் கொண்டான் அவை
கண்கொத்திடும் நாகம்!
ஐயோஇவன் உறவில் இனி
யார் வாழ்குவர் அம்மா!"

தத்தை மேலும் சிந்தித்த நிலையில், வானில் பிறை வந்தது. அது கண்டு ஐயுற்ற தத்தை; இறந்துவிட்ட ஆண்கிளிதான் பிறையாய்த் தென்படுகிறதோ வெனக்கருதி விண்நோக்கிப் பறக்கிறது. எப்படி?

"மாந்தத்தை தத்தையது
மகிதலத்தை வெறுக்கின்ற
பூந்தத்தை பறக்கிறது
புதுவுலக வாழ்வுக்கு!"

இங்கே, மேகங்களின் ஊடே விண்ணில் பறக்கும் காட்சியினை வெகு அற்புதமாகப் பாடுகிறார் கவிஞர்.

"உருள்கின்றன முகில்வண்டிகள்
உயர்கின்றன மலையாய்!
இருள்கின்றன இழைகின்றன
இவர்கின்றன பலவாய்!"

"மழையென்பது கவிதைப் புனல்
மலிந்துள்ளது நெஞ்சில்!
பிழையென்பது சற்றும் இலை
பிழிந்தூற்றிட ஓடும்!"

நூல் முழுவதும் வளமான கற்பனைகள், வாசகரின் கருத்தினை மயங்கச் செய்வது ஒரு சிறப்பு.

- விண்ணில் பறந்த தத்தை மழையிடைச் சிக்கித்

"தறியிடை ஆடிடு தக்கை
தன்னிலை யுற்றது தத்தை
வெறியிடை ஆடுது மேகம்
வெட்டுது மின்னலின் வேகம்!"

"வானெனும் வேடன் விரிக்கும்
மழையெனும் இடர்வலை சிக்கி
கூடினெனும் சிற்றுரு வத்தைக்
கொண்டுருள் கின்றது தத்தை!"

"மேல் எடுத்" தெற்றிய பந்து
மெலமெலக் கீழ்விழல் என்று
வால்இற கனைத்தும் ஒடுங்கி
வந்தது தத்தை இறங்கி!"

"சற்றுத் தணிந்தது கோபம்
சாரல் விடுத்தது மேகம்!
கற்றுத் தணிந்தவர் போலக்
கவிழ்ந்து விழுந்தது தத்தை!"

- தத்தை விழுந்த இடம் புதர். மழைவிட்ட பின்னர், கண்ணப்பன் அவ்விடத்தைக் காணுகிறான்.

"இறப்பிலும் பிரியாத் தத்தை
எழுதெழிற் கிள்ளை பக்கல்
சிறப்பினும் சிறப்பாய்ச் செத்துத்
தென்மகன் கிடந்த தேபோல்

மறப்பினும் முடியா மாட்சி
மலர்ந்திடக் கிடந்த தாங்கே
துறப்பினும் துயரந் தன்னைத்
துறந்திட இயலா தன்றோ?"

- மழைத்துளிகளும் கண்ணீர் உகுப்பதாக உணரும் கண்ணப்பன், கிளிகள் இரண்டினையும் ஒரே இடத்தில் அடக்கம் செய்து அமைதி யடைகிறான் கதை முடிகிறது. அடுத்து-

"புத்தர் காவியம்" வளராமல் புத்தர் பிறந்தார் என்ற அளவில் நின்றது பற்றி மேலே குறிப்பிட்டுள்ளோம். இங்கே அதில் இயன்றுள்ள சிறப்பான கவிதைகளைக் காண்போம்.

**கபிலை நகர்**

"சந்தனத் தேக்கு மரங்கள்
வந்தனஞ் செய்து வணங்கி
சாக்கியர் புகழெனதின் றாடுமே - ஆடுந்
தாளத்தைக் கற்கும் பறவை பாடுமே!"

"ஆறுகள் பெருக வயற்
கூறுகள் பெருகி மணி
ஆக்கிய விளைவு மலைபோலுமே - மயில்
அகவி வயல்களிடை ஆலுமே!"

"நாடுயர் கோசலந்தனிற்
பீடுடன் இருந்த தலை
நகரம் "கபிலை" என்ற பேருடன் - புகழ்
நட்பில் வளர்ந்தது நல்லோருடன்"

கபிலை நகரின் சிறப்பினை மேலும் கூறியுள்ளார்கள். இங்கே சான்றுக்காக மூன்று அடிகளை வைத்தோம். இனி **உரோகிணி** ஆறுபற்றி சிலவரிகள்.

"காட்டிடை ஒருமகள்
மீட்டிய யாழ்போல்
"கலகல"என் றோடும் - உரோகிணி
காற்றோடு பண்பாடும்!"

"மலைகளின் மறைபொருள்
அலைகளிற் கொஞ்சிட
"மடமட"என்றோடும் - நெறி
"நடநட" என் றோடும்!"

"முதன் முதற் கனவினிற்
புதல்வனை ஈன்றவள்
முகமென மகிழ்ந்தோடும் - அன்
பகமென நெகிழ்ந்தோடும்!"

- கதையின் கருப்பொருளைப் பறைசாற்றுவது போல பாக்கள் அமைந்துள்ளன.

புத்த பகவானின் தந்தை சுத்தோதனர் பற்றிச் சில........

"சுத்தோ தனர்புகழைச்
சுருக்கி உரைப்பதெனிற்
சொற்கள் அடங்குவதில்லை!
பித்தோ டுரைக்கமனம்
பெரிதும் விரைந்து செலப்
பேச்சை அடக்குவ தெவன்?"

"அறமென் கின்றகொடி
அந்நகர்க் கோட்டையில் ஏறி
அசைந்து பறக்கக் கண்டதும்
புறங்கொடுத்துப் பகைமை
போனது மிகப் பழமை!
புதுமை அதனின் உண்டுகொல்!"

- சுத்தோதனர் மாயாதேவியைக் காணுகிறார்.

"ஓவியம் என்ன ஆங்கே
ஒளியுடன் இருந்த மாயா
தேவியைப் பார்க்க மன்னர்
திடுமென வந்து சேர்ந்தார்!"

"உயிர்க்கெலாம்" அன்னை போன்ற
ஒளியுடன் திகழும் இந்த
மயிலினை மலடி என்றல்
மாண்பிலார் உரையை ஒக்கும்!"

"மன்னரின் மனத்தினுள்ளே
மலர்ந்திடும் எண்ணம் என்ன
அன்னமும் கண்விழித்தாள்
அவளெதிர் அரசர் நின்றார்!"

மாயாதேவி, மகப்பேறு எய்திடவேண்டி நோன்பு நோற்பதும், கனவுகள் தொடர்வதும், நிகழ்ந்த நிலையில், தான் சூலுற்றிருப்பதை உணர்ந்து தேவதாக நகருக்குப் பயணமாகிறார். வழியில் உலும்பினி வனத்தை அடைவதை எழிலுறப் பாடுகிறார் கவிஞர்.

"உலும்பினி வனத்தைக் கண்டாள்
ஒருபது கற்கள் நீங்கி!
எலும்பிலும் இனிமை பாய
இவண் சற்று நில்லும் என்றாள்!"

"சிவிகையைத் தாழ்த்த லோடும்
சித்திரம் நிகர்த்த மாயை
புவிமகிழ்ந் தேற்கும் ஞானப்
புகழ்என இறங்கி நின்றாள்!"

- உலும்பினி வனத்தின் எழில்...

"மேகத்தை நோக்கி வளர்ந்த
மரங்கள் விழைந்தன - அவை
தாகத்தைத் தீர்க்கும்படி தண்ணீர்
கேட்டுத் தழைந்தன!"

"கொண்டல் முழங்கி முழங்கி
மலைச்சலங் கொட்டின - அதை

உண்டு வளர்ந்த மரந் தலையால்
விண்ணை முட்டின!"

"மாயைக் கண்ட உலும்பினிக்
காடு மகிழ்ந்தது - தன்
தாயை எதிர்கொண்ட மைந்தன்என்
றுள்ளம் நெகிழ்ந்தது!"

ஆங்கே!

"கிள்ளைதனை நிகர்மகளிர்
கேண்மை சொல்லக்
கிளர்மரங்கள் மலர்வீசக்
"கீர்த்தி ஓங்கும்

பிள்ளைதனை நீமாயை
பெறுக!" என்றே
பேரோசை எழுந்ததவ்
வனத்தி னுள்ளே!"

- அப்போது மாயை பார்வையில் பலா மரம் தென்படுகிறது. அம்மரக்கிளைகள் தாழ்ந்து பணிகின்றன. அத்தருணத்தில்:

"தாயுடலுள் வீற்றிருந்த
சேயும் அங்கே
தன்னொளியை வீசஇது
தருணம் என்றே
நோயுடலின் விலாப்புறத்தை
நோக்க லானார்!
நொடியி லவர் ஒளி எங்கும்
நுழைந்த தம்மா!"

"சற்றேனுந் துயரின்றி
விலாப் புறத்தால்
சங்கம்போல் சிங்கம்போல்
தருமம் போலே
பற்றேதும் இன்றி ஒரு
பாலன் தோன்ற
"பார் இவனே புத்தன்" எனப்
பாடும் காடு!"

- பிறந்த குழந்தை புத்தன் ஆவான் எனக்காடு கணித்துக் கூறிவிட்டது. இனி, நாடு முழுவதும் செய்தி பரவுகிறது. அந்தச் செய்தி...

"யார் பிறந்தது பார் எனப் புவி
யெங்கும் - சுடர்
தங்கும்! - பெரும்
சீர் பிறந்தது கேள்ளன்த் திசை
தோறும் - இதை
சேரும்!

போர் பிறந்திடும் மண்ணில் இனிசமா
தானம் - நல்
ஞானம்! - கதிர்த்
தேர்மிசை ஒரு பாலகன் அவன்
தெய்வம் - நாம்
உய்வம்!

புத்தன் எனப் பெயர் பெற்றவனின் கழல்,
வணங்கு - நீ
இணங்கு - அவன்
சித்திரம் போல்ஒரு சின்னக் குழந்தைபோல்
வந்தான் - களி
தந்தான்!
ஆளும் அரசர்க் கரசன் எனப்புவி
போற்றும்! - புகழ்
சாற்றும்! - இனி
நாளும் அவன் பெயர் நம்செவி ஏற்றிடும்
நாதம் - உயர்
கீதம்!"

- புத்தர் பிறப்பினைக் கூறி, எதிர்கால நிகழ்வுகளையும் குறிப்புணர்த்தி காவியத்தை முடிக்கிறார் கவிஞர்.

அடுத்து, காவியப் படைப்பு வரிசையில் கவிஞர் இறுதியாக இயற்றியது "கோசலைக் குமரி". அறிஞர் ராகுல் சாங்கிருத்தியாயனின் "வால்காவிலிருந்து கங்கைவரை" நூலில், வரலாறு தழுவிய கதையாக அமைந்துள்ள "பிரபா" இக்காவியத்திற்கு அடிப்படை.

ஆரிய குலத்தில் பிறந்த அதுவகோஷ் கவிஞன். கிரேக்க இனப் பெண் ஊர்வசி. பேரழகி. இருவரும் சரயூ நதிக்கரையில் நடைபெறும்

நீந்தும் பந்தயப் போட்டியில் பங்கேற்று வெற்றிபெறுகின்றனர். ஒருவரையொருவர் கண்ணுற்றுக் காதலிக்கின்றனர். இருவரும் நாடகங்களில் நடித்து நட்பை வளர்க்கின்றனர். இந்த நட்புறவை ஆரிய குலத்தவர் விரும்பவில்லை. "பேர்வழி பார்ப்பான்" என்பவர் சூழ்ச்சி செய்து அவர்களைப் பிரித்து விடுகிறார். ஊர்வசி, நதியில் விழுந்து உயிர்துறக்கிறாள். அசுவகோஷ் துறவு பூண்டு பெருங் கவிஞனாய் புகழ் பெறுகிறான். இது கதை. இங்கே கவிதைகளை காண்போம்

**சரயூ நதியின் எழில்...**

"மண்ணில் விழுந்து
கிடந்தபட் டாடைபோல்
மாண்பு பெறும் சரயூ!
விண்ணில் விழுந்து
கிடந்தவில் என்றிட
விந்தைதரும் சரயூ!
பண்ணில் விழுந்து
பரவிய பாடலாய்ப்
பாய்ந்து செலும் சரயூ!
எண்ணில் விழுந்த
கணக்கைக் கடந்துபோய்
ஏற்றம் பெறும் சரயூ!"

**சாகேத நகர்...**

"சரயூ எனும் பெண்
தன்கரம் நீட்டித்
தருமணி யாரம்போல்
இரவியை மதியை
முடிமிசை சூட
எழும் ஒரு மாடம்போல்,
பரவிய புகழால்
நிலைபெறு கின்றது
பார் நகர் சாகேதம்!
விரவிய கலையும்
செல்வமும் ஒன்றாய்
மேவிய சாகேதம்!"

அந்நகரில்...

(வேறு)

"கல்வியும் செல்வமும் இரு
கண்களாய் இணைந்து நின்ற
கற்பனை நகரம் அல்லவோ? - கவி
சொல்வது கேட்டு மலர்கள்
சொட்டிய மதுவை யுண்டு
சொக்கிய நகரம் அல்லவோ?"

(வேறு)

"வேதியர் ஓதிய வேதங்களில்
- அவர் வேள்விகளில்
சாதிகள் பற்பல தோன்றின
- பொய் மதந்
தன்றலை தூக்கித் திரிந்த தம்மா!"

(வேறு)

**தருமசேனர்**

தான்பெற்ற மக்களையே
தாழ்த்துகின்ற சாகேதம்
"ஏன்பெற்றோம், இவ்விழிவை?"
என்றெண்ணி ஏங்கியபின்
பொற்சுடர் போல் வந்துற்ற
புத்தரின் ஞானத்தை
நற்றுணையாய்க் கொண்டுய்ய
நாடித் தவஞ்செய்யும்!
.......... .......... .......... .......... ..........

"ஈனப் பறையர் என்
றேசுவார் பொய்மதத்தார்!
ஞானப் பறையராம்
நற்றரும சேனர்தனைத்
தந்தலைவர் என்றாங்கே
சாற்றினார் புத்தரெலாம்!
நிந்தை தொலைய
நிலைநிறுத்தினார் அன்பை!"

**புத்தமடத்தில் தருமசேனர் உரை :**

"பிறப்பினால் யாரும்
பிராமணன் ஆவதில்லை!
சிறப்பினால் ஆகின்றான்!
செய்கையால் ஆகின்றான்!"

......... ......... ......... ......... .........

"அந்தணர் தம்பெண்டிர்
ஆணைப் புணர்கின்றார்
முந்திக் கருவடைதல்
முன்வயிற்றிற் பார்க்கின்றோம்!
பிள்ளை பெறுகின்றார்
பெற்று வளர்க்கின்றார்
வெள்ளையாய் வீட்டில்
விளங்குகின்ற உண்மையன்றோ?"

அசுவகோஷ் அறத்துக்குப் புறம்பாக வாழும் பிராமணர்களுக்கு எதிராகச் செயல்பட எண்ணுகிறான். அதன் பொருட்டுத் தருமசேனரைச் சந்தித்து ஞானம் பெறுகிறான். பின்னர் தன் கருத்தினை அன்னையிடம் கூறுகிறான்.

"புண்ணிடையே வாழ்கின்றேன்!
பார்ப்பனர் செய்
பொய்யிடையே வாழ்கின்றேன்!
ஐயகோ நான்,
மண்ணிடையே வாழ்கின்ற
மனிதர் தம்மை
மாசற்ற மாந்தர்களாய்
மாற்ற வேண்டும்!

......... ......... ......... ......... .........

ஆட்சி செயும் சூதர்க்கே
பதிகம் பாடி
அடிமைகளாய் ஏழைகளை
மடியச் செய்தார்!
சூழ்ச்சி பொய், கொலை, களவு
காமம் எல்லாம்
சூழ்ந்தனவாம் சாகேதந்
துன்பம் எய்த!

பாழ்செயல்கள் செய்வோரே
பார்ப்பா ரானார்!
பாரம்மா, நம்குடும்ப
நிலைமை தன்னை
வீழ்ச்சியுற்ற என் தந்தை
எதற்குச் செத்தார்?
வேறென்ன சான்றிங்கே
வேண்டும் அம்மா?

- அசுவகோஷ் கூறுவது கேட்டு, அவன் விரும்பியவாறு வாழ்ந்திட அனுமதிக்கிறாள் அன்னை.

சரயூ நதிக்கரையில் வேனில் விழா நடைபெறுகிறது. ஆடவரும், பெண்டிரும் உள்ளக்களிப்போடு உலா வருகின்றனர். அந்தக் குதூகல கொண்டாட்டத்தைப் பாடுகிறார் கவிஞர்.

"சரயூ நதியின் அலையில் - வளர் கலையில்
பரவிய இன்பம் இன்னிள வேனில்
பார்நகர் எழிலைப் போய் - நீ
பார்நகர் தொழிலைப் போய்!"

"சரயூ ஆற்றங் கரையில் - கவி உரையில்
பரவிய இன்பம் இன்னிள வேனில்
பார் நகர் வேடிக்கை - புலர்
பார்ப்பதும் வாடிக்கை!"

(வேறு)

**நீந்தும் போட்டி**

"சிற்பம் எனத்தகும் பெண்களும் - இளஞ்
சிங்கம் எனத்தகும் ஆண்களும்
பற்பலர் வந்து நிறைந்தனர் - ஒரு
பாய்ச்சலில் நீந்திக் கடந்திட!

.......... .......... .......... .......... ..........

நண்பர்களோடு குதித்தனர் - திறன்
நாடும் கிரேக்கத்து நங்கையர்!
வெண்முடி நீரில் மிதந்திட - அவர்
வெற்றியை நோக்கி விரைந்தனர்!

மின்னிய நீலக் குழலுடன் - சுடர்
மின்னற் கொடியெனப் பார்ப்புனக்

கன்னியர் பாய்ந்தனர் அங்ஙனே - பலர்
கைகளைக் கொட்டி முழக்கினர்!

......... ......... ......... ......... .........

கைகளும் கைகளும் நீந்தின - மலர்க்
கண்களை நீரலை ஏந்தின!
எய்கணை என்னப் பிளந்தனர் - திரை
என்ற நெடுந்திரை தன்னையே!

போரலை போன்று கிளம்புவர் - அவர்
பொங்கிய வுள்ளம் விளம்புவர்
நீரலை தாவுமுன் தாவுவர் - எதிர்
நிற்பவர் அக்கரை கூவுவர்!

- நீந்தும் போட்டி நிகழ்ச்சி வெகு நேர்த்தியாக நிகழ்கிறது. அந்தக் காட்சியினை நம் கண்முன் நிறுத்துகிறது கவிதை.

போட்டி முடிவில் ஆரிய இளைஞன் அசுவகோஷ் - கிரேக்கப் பெண் ஊர்வசி இருவரும் வெற்றிபெறுகின்றனர். விழாக் குழுவினர் அவர்களைப் பல்லக்கில் ஏற்றிப் பவனி வரச் செய்கின்றனர்.

இதனைத் தொடர்ந்து அவர்கள் சந்திப்பதும், காதல் மலர்வதும் பிறர் கண்ணை உறுத்துகின்றது "பேர்வழிப் பார்ப்பான்" என்பவரின் சதியால் காதல் உடைபடும் படகானது. காதலனாய் இருப்பதைவிட, கவிஞனாகப் புகழ் பெறுவதே அசுவகோஷுக்குப் பெருமை என்றெண்ணிய கிரேக்கப் பெண் ஊர்வசி, ஆற்றில் மூழ்கி இறக்கிறாள். அதனை-

"கன்றைப் பிரிந்ததோர் தாய்ப்பசு - நெடுங்
காற்றைப் பிளக்கும் குரலிலே
முன்றிலில் நின்று கதறிட - நகர்
முற்றும் துயரம் முளைத்தது!"

"கீழ்த்திசை முற்றும் நடுக்குறும் - குரல்
கேட்டிட மக்கள் விரைந்தனர்!
தாழ்த்தித் தலையைக் குனிந்தனர் - அதோ
தையல் பிணமாய்க் கிடக்கிறாள்!"

"நஞ்சை அருந்திய நங்கையாள் - உயர்
நாடகராணி நம் ஊர்வசி
கொஞ்சிய கோகிலம் போன்றவள் - இடர்
கொண்டு மடிந்து கிடந்தனள்!"

கரையில் ஒதுங்கிய உடல் அருகே ஒரு கடிதம் காணப்படுகிறது. அதில்: அசுவகோஷுக்கும் சாகேத நகர மக்களுக்கும் வணக்கம் கூறி, தன் செய்தியினையும் குறிப்பிட்டுள்ளாள் - ஊர்வசி.

"சிறிய என் உறவால் உங்கள்
சிந்தனை மழுங்கும் என்றே
அறிந்தவர் கூற யானும்
அவ்வுரை ஏற்றுக் கொண்டேன்!

பொறிகளாற் புகழும் நாமம்
புத்தரின் நாமம் அன்றித்
தறிகளாற் பயனொன் றில்லை!
தளையெலாம் அறுத்தல் வேண்டும்!

உலகெலாம் புகழுமாறே
ஒருபெருங் கவிஞனாகி
இலகிய அறங்கள் போற்றி
இப்பெரும் சாகேதத்தைத்

திலகமாய் மாற்ற வேண்டும்!
திருமணம் காதல் எல்லாம்
கலகமாம் பாமரர்க்குக்
கதைகளாம் பிதற்றி வாழ!"

கடித வாசகங்கள் உணர்த்திய உண்மைகளை அசுவகோஷ் ஏற்றனன். சதிகாரர்களைச் சபித்தனன். துறவை நோற்றனன். கவிதைப் பணியில் முனைந்து காவியங்களைப் படைத்தனன். அதனை-

"சிங்கம் போல் புறப்பட்டான்
அசுவகோஷே!
திசையெல்லாம் அவன் குரலே
தெளிவு காட்டும்!
வங்கத்தார், மகதத்தார்,
கோசலத்தார்
வணங்க அவன் வான்போலே
வருகை தந்தான்!
தங்கத்தாற் பல்லக்கும்
வைரத்தாலே
சாற்றுகின்ற மணிமுடியும்
சார்பாய்க் கொண்ட

துங்கத்தார் மன்னர்களும்
துணுக்கம் எய்தத்
தொகை கொள்வார் சூழ்ந்து வரத்
தொடர லானான்!

**முடிவில் வரும் வெண்பா-**

வேதம் பெயர் மழுங்கி வெற்றுடல் ஆகிடவே
போதம் புரிந்தார் புகழ்புத்தர் - ஆதலால்,
ஆன்ற கவிஞன் அசுவகோஷ் மெய்ந்நெறியைச்
சான்றோர் புகழ்தல் தலை!

தமிழ்ஒளியின் கவிதைப் பயணம் 1944ல் தொடங்கி 1964 முடிய இருபதாண்டுக் காலத்தில், இயன்றுள்ள கவிதை படைப்புகளை, நூல் அறிமுகமாகவும், கவிதைச் சிறப்பு கூறும் முகமாகவும் இயன்ற அளவு கவிதைகளை மேற்கோள்களாக முன்னெடுத்து வைத்தும், தமிழ் ஒளியின் பீடுதுலங்குமாறும் செய்துள்ளேன். இனி அம்மாபெரும் கவிஞரை மொழிப்போர்க் கவிஞராகவும், மக்கள் கவிஞராகவும், களப்போர்க் கவிஞராகவும் மற்றும் குழந்தைக் கவிஞராகவும் அடையாளம் காட்டுவது என் கடமை.

# மொழிப்போர்க் கவிஞர்

மொழிவழி தேசிய இன அடிப்படையில் மாநிலங்கள் பிரிக்கப்பட்டு, தனித்தனி அரசுகள் அமைக்கப்பட்டுள்ள நிலையில், "பொது மொழி" என்ற பேரால், "இந்தி" மொழியினைப் பிறமொழி தேசிய இனத்தவரின் அனுமதியின்றித் திணிக்க முற்படுவது ஏகாதிபத்திய நடைமுறை என்றுதான் கூற முடியும்.

இந்திய மண்ணை ஆண்டு வந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் வெளியேற்றப்பட்ட நிலையில், மற்றுமொரு ஏகாதிபத்தியம் இந்த மண்ணில் வேரூன்ற அனுமதிக்க மாட்டோம் என்ற கொள்கை நோக்கில், இந்தி எதிர்ப்பு இயக்கம் தமிழ் நாட்டில் எழுந்தது.

இந்தி எதிர்ப்புப் போர், ஜனநாயக அடிப்படையில், சட்ட மறுப்புப் போராகவே நடத்தப்பட்டு வந்தது. இந்தப் போராட்டத்தைத் திராவிட இயக்கம் முன்னின்று நடத்திய போதிலும் அனைத்து அரசியல் சார்பினரும் இதனை வரவேற்று ஆதரித்து வந்தனர்.

இந்தப் பின்னணியில், மண்ணின் மைந்தர்களாக விளங்கும் கவிஞர்களும் பங்களிப்புச் செலுத்தினர். ஒரு தோழர் நம் கவிஞரை அணுகி, **"இந்தி எதிர்ப்புப் பாடல்கள்"** எழுதுமாறு கேட்டனர்.

கவிஞர், "புதிதாக என்ன எழுதுவது; பாரதிதாசன் பாடியுள்ளதே போது"மென்றனர். மேலும், **"எப்பக்கம் வந்து புகுந்துவிடும் இந்தி? எத்தனை பட்டாளம் கூட்டி** வரும்? என்ற வரிகளுக்கு நிகராக என்ன தான் எழுதிவிட முடியும்" என்றனர்.

தோழருக்கு ஏமாற்றம் ஏற்பட்டது. அவர், "நீங்களும் பாரதி தாசனைப் போலவே வலிமையான குரலில் இந்தி எதிர்ப்புப் பாடலைப் பாடவேண்டுமென வலியுறுத்தினார்". கவிஞர் இசைவு தெரிவித்து அவரை வழியனுப்பி வைத்தனர். அன்றிரவு எழுதப்பட்ட இந்தி எதிர்ப்புப் பாடல்கள், **"தமிழர்நாடு"** ஏட்டில் பக்கங்கள் முழுவதும் கவிதைகளாக நிரம்பி வீர முழக்கமிட்டன. அவற்றிலிருந்து சில பாடல்களை இங்கே காண்போம்.

## இந்தி எதிர்ப்புப் போர்

**"சிந்திய இரத்தம் உலரவில்லை - எங்கள்**
**செந்தமிழ் வாழ்வு மலரவில்லை!**
**இந்தியை இங்கே அழைக்கின்றீர்கள் - கூர்**
**ஈட்டியை நெஞ்சில் நுழைக்கின்றீர்கள்!**

தொளைபட்ட புண்கள் மறையவில்லை - எங்கள்
சுதந்திர எண்ணம் நிறையவில்லை!
நுளைபட்ட இந்திக்குப் பூமாலையா? - நாங்கள்
நோற்ற தவத்திற்குச் சாவோலையா?

கார்இருள் இன்றும் விடியவில்லை - எம்
காற்றளை இன்றும் ஒடியவில்லை!
தேர்மிசை இந்தி உயர்குவதோ - எங்கள்
செந்தமிழ் அன்னை அயர்குவதோ?

- எனத் தொடர்ந்து வரும் பாடலின் இறுதி வரிகள்....

"ஓடும் குருதியில் கொப்புளிக்கும் - அணு
ஒவ்வொன்றும் தமிழென்று தான்ஒலிக்கும்!
ஏடு திறந்திடும் பார், தரணி! - இதோ
எழுதுவீர் இன்றைக்கே போர்ப்பரணி!"

அடுத்து ஒரு பாடல். இது மிக நீண்ட பரணிப் பாடல். சிலபகுதிகளை மட்டும் தருகிறேன் படியுங்கள்.

## இந்தி எதிர்ப்புப் பரணி

"புறப்படு புறப்படு பகைமேலே
புலியென நரியினத் தொகைமேலே!
திறப்படும் நின்கொடி மலைமேலே
சிரிப்புடன் நடநட அலைபோலே!

தரைப்படை கடற்படை எதுவானால்
தமிழ்ப்படை நடைபெறத் தூள்! தூளே
திரைப்படை புனற்படை அதுபோலே
செறிபட நெறிபட விரைவாயே!

எலிஎலி யெனவரும் பகைமீது
எதிரிடி படும்படி நீமோது!
புலிபுலி யெனத்தமிழ் மகன்சென்றால்
புவிபுவி அதுதரும் புகழ்ஒன்றே!"

(வேறு)

"அலையணி வகுத்த படைபோல்
அடலினர் வகுத்த அணியாய்
மலையென நிறைந்த தொகையாய்
மறிகடல் விரைந்த தெனவே!"

(வேறு)

"பொன்னி வைகை பொங்கு வெள்ளம்
போற் புகுந்து செந்தமிழ்க்
கன்னி யானை என்று காதற்
காளை ஆணை இட்டிட

அண்ணன் ஆணை இட்ட போதில்
ஆழி மீதும் மோதுதல்
திண்ணம் என்று வீரரானோர்
திக்கை யும்இடித் திடக்

குண்டு மாரி கண்டு நெஞ்சம்
கொஞ்ச மேனும் அஞ்சிடார்!
தொண்டு செய்து சாத லன்றிச்
சூதர் முன்பு கெஞ்சிடார்!"

(வேறு)

"குண்டுகள் வெடிக்கும் அளவில்!
கொம்புகள் ஒலிக்கும் அளவில்!
தண்டுகள் எடுத்த தமிழர்
தம்முயிர் விடுக்கும் அளவில்!"

(வேறு)

**பொங்கும் குருதி:**

"இந்தி வரும் எனவே
எண்ணி இருந்த வர்தம்
புந்தி நடுக் குறவே
பொங்கி வரும் குருதி!"

(வேறு)

**போர்க்களத்தில் செந்தமிழ்**

"பொங்குகின்ற குருதி பொங்கும்
போர்க்களத்திற் செந்தமிழ்!
தங்குகின்ற காட்சி கண்டு
தாளங் கொட்டி ஆடுவீர்!

காளம் ஊது போர்க் களத்திற்
கால் பதித்த செந்தமிழ்

தாளமிட்ட வாறுகண்டு
தாளமிட்டே ஆடுவீர்!

சுற்றி நின்ற போர்க்க ளத்திற்
சுற்றுகின்ற செந்தமிழ்
வெற்றி கொண்ட வாறுகண்டு
வீரராகி ஆடுவீர்!"

இன்னுமொரு பாடல், சிலவரிகள் மட்டும்

### எதிர்த்து நில்

"இந்தியை எதிர்த்து நில்!
எவர்வரின் எதிர்த்து நில்!
நந்திபோல் மறிக்கும் மூட
நாய்களை எதிர்த்து நில்!

நேரிலே எதிர்த்து நில்! உன்
நீர்மையால் எதிர்த்து நில்!
போரிலே புறங்கொடாமுற்
போக்கினால் எதிர்த்து நில்!"

- மொழிப்போராட்டத்தில் தமிழ்க்கவிஞர்களின் பங்களிப்பு மகத்தானது. இது வரலாற்றில் பதிவான செய்தியும் கூட! அந்தப் பதிவேட்டில் தமிழ்ஒளியின் பரணிப் பாடல்களும் இடம் பெறுகின்றன!

# மக்கள் கவிஞர்

"மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகு" எனப் பேசப்பட்ட காலத்தில், சமூக அமைப்பில், மன்னன் முன்னிலை பெற்றிருந்ததை இலக்கியங்கள் பதிவு செய்து உள்ளன.

வரலாற்று ரீதியாக, பிரெஞ்சு புரட்சிக்குப் பிறகு, சமூக வாழ்க்கையில் பாதிப்படைந்த மக்களை முன்னிறுத்திப் பேசும் மாற்றம் நடைமுறைக்கு வந்தது.

பிரெஞ்சு நாட்டில் தோன்றிய **வால்டேர், ரூசோ, ஜெர்மனியில்** பிறந்த **கார்ல் மார்க்ஸ், பிரெடரிக் ஏங்கல்ஸ்** போன்ற பெருமக்கள் வெளிப்படுத்திய எண்ணங்கள், புரட்சிகரமான சிந்தனைகளாகப் போற்றப்பட்டன.

இந்திய மண்ணில் கம்யூனிஸ்ட் கட்சி தோற்றுவிக்கப்படும் முன்னரே, மேற்சொன்ன பெருமக்களின் சிந்தனைகள் பெரும்பான்மை மக்களின் உள்ளங்களில் இடம்பிடித்து விட்டன.

அதன் வழி இந்திய மொழிகளிலும், புரட்சிகரமான சிந்தனைகள், இலக்கியங்களில் இடம்பெறத் தொடங்கின. அவற்றை உருவாக்கிய அறிஞர்களும் கவிஞர்களும் மதிக்கப்பட்டனர்.

நற்றமிழ் நாட்டில் **இராமலிங்க அடிகளின்** மனிதாபிமானச் சிந்தனைகளும், **சுப்பிரமணிய பாரதியின்** சுதந்திர வேட்கையைத் தூண்டும் எழுச்சிக் கவிதைகளும் மக்களின் புரிந்து கொள்ளும் திறனால் பரவலாக வரவேற்கப்பட்டன.

இந்த அடித்தளத்தில்தான் **புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின்** கம்பீரமான தோற்றமும், தமிழ்ச் சமுதாயத்தில் நிலைத்து நின்றது.

கவிஞர் தமிழ்ஒளி புதுவைக்காரர் ஆனதால் பாரதி - பாரதிதாசன் சிந்தனைகளைத் தன்வயப்படுத்திக் கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றிருந்தார். அதுவே அவரை மக்கள் கவிஞராக உயர்த்துவதற்கு ஏதுவாயமைந்தது.

கழகம் சார்ந்திருந்த நிலையில், சாதிமதப் பிரச்சினைகளிலும், தனித்தமிழ்நாடு பிரச்சினையிலும் அக்கறை கொண்டிருந்த தமிழ்ஒளி, கம்யூனிஸ்டு கட்சியில் இணைந்த பின்பு, பாட்டாளி மக்களின் வாழ்க்கை அவலங்களை பாடுவதில் ஆர்வம் காட்டினார். அந்த மக்களின் நலன் காக்க கட்சி நடத்திய இயக்கங்களை வரவேற்று எழுச்சிக் கவிதைகளை இயற்றினார்.

அப்போது அவருக்கு வயது இருபத்து நான்கு. துடிப்பான பருவம். துணிவான சிந்தனை. சமூகப் பாதிப்புகளைச் சீர் செய்யும் எண்ணமே குறிக்கோளாய் எழுந்தது.

அந்த நிலையில் தன்னுடைய காதலிக்கு ஒரு கடிதம் எழுதுகிறார் கவிஞர். அந்தக் கவிதை மடலை நீங்களும் படியுங்கள்.

"யாரடி காதலி கேளடி - உன்றன்
ஆசைக் குரியவன் சொல்கிறேன்
பாரடி மானிடச் சாதியை - அவர்
பட்டிடுந் துன்பத்தைப் பாரடி!
மாரடித் தேழைகள் மாய்கிறார் - சிலர்
மஞ்சத்தில் உண்டுமே சாய்கிறார்!
தேரடி பட்டிடுந் தூளென - தொழில்
செய்பவர் நாளும் துடிக்கிறார்!"

"அந்தி சிரித்திடும் போதிலே - உன்றன்
ஆசை பிறந்திடும் ஆயினும்
சந்தியில் வீதியின் ஓரத்தில் - ஒரு
சாக்கடை யின்புழுப் போலவே
நொந்து நெளிந்திடும் ஏழைகள் - என்னை
நோக்கி அழுதனர் காணடி!
எந்தவிதம் இதைச் செல்லுவேன் - அடி
எவ்விதம் துன்பத்தை ஆற்றுவேன்?"

.......... .......... .......... .......... .......... ..........

"மக்கள் மடிந்திடும் போதிலே - அவர்
மானங் குலைந்திடும் போதிலே
கெக்கலி கொட்டியும் ஆடியும் - பல
கேளிக்கை பேசியும் பாடியும்
பக்கமிருப்பவன் பாதகன் - அவன்
பாலையில் வேடரைப் போன்றவன்
செக்கடி மாடுபோல் வாழ்வதோ - என்றன்
சிந்தைக் கினியளே சொல்லடி!"

முடிவில்-

"இக்கருத் தோடுளைக் கேட்கிறேன் - உன்றன்
இன்பம் எதிலுண்டு சொல்லடி?
இக்கணந் தொட்டுநம் ஆசையும் - காதல்
இன்பமும் மக்களின் தொண்டடி!"

மக்கள் தொண்டே மகிழ்ச்சி தரும்பணி எனக் காதலிக்கு உணர்த்திய கவிஞர், "முன்னணி" ஏட்டில் உணர்ச்சிமயமான கவிதைகள் பலவற்றைப் படைத்தார். அவையனைத்தும், நாம் வெளியிட்டுள்ள **மக்கள் கவிதைகள்** நூலில் இடம் பெற்றுள்ளன.

முதற்கட்டமாகத் தனிச் சிறப்புக்குரிய கவிதை ஒன்றை முன்னெடுத்துப் பேசுவோம்.

கட்சி தடை செய்யப்பட்ட கால கட்டத்தில, தலை மறைவு வாழ்க்கையை மேற்கொண்ட ஒரு தோழர் தன் தாயைக் காண வருகிறார். சில நாட்கள் தங்கியிருக்கிறார். செய்தி கேட்டுக் காவலர்கள் அவரைத் தேடி வருகின்றனர். அவரும் வெளியேறி விடுகிறார். ஆயினும், காவலர் மிரட்டலும் தாயின் மறுமொழியும் கவிதை வடிவம் பெற்றுள்ளதைக் காணுங்கள்.

**காவலர் :**

**"இங்குன் மகனும் ஒளிந்திருந்தான், எமை**
**ஏமாற்றி நீயிங் கொளித்து வைத்தாய்;**
**அந்தப் பயலுக்குச் சோறு மிட்டாய், மிக**
**ஆபத்தான குற்றம் செய்துவிட்டாய்!"**

**தாயின் மறுமொழி :**

**"கோடைப் பகல்வெய்யில் சுட்டதுபோல் - நெஞ்சில்**
**கோபம் கொதித்தது சாபமிட்டாள்"**

**"மூச்சும் பேச்சும்அவன் எய்துமுனம், ஒரு**
**முந்நூறு நாளாக நான் அவனை**
**பத்திரமாக ஒளித்து வைத்தேன் - மண்ணைப்**
**பார்க்க அவன்ஒரு நாள் பிறந்தான்!"**

**"பாம்புக்குப் பாலிடும் மாந்தரையும், இங்குப்**
**பாதகர் என்பவர் யாருமில்லை!**
**பாம்பல்ல என்னுடைய அன்புமகன்; அவன்**
**பாயும் விலங்கல்ல ஆசைமகன்!"**

**"பெற்று வளர்த்திட்ட இன்மகனை, இங்குப்**
**பேணி வளர்ப்பது குற்ற மென்றால்**
**தாய்க்குலம் மாண்டு மடிவதுவோ? அன்றி**
**தர்மம் தலை சாய்த்து வீழ்வதுவோ?"**

"என்னுடை பிள்ளைக்குச் சோறிடவும், அவன்
இளைப்பாறி நிற்க இடந்தரவும்
அன்னை யெனக்கிங் குரிமையுண்டாம்; இதை
ஆண்டவன் வந்தாலும் விட்டுக் கொடேன்!"

மேலும், "தாய் தன் மகனுக்குக் காட்டும் பரிவு தொன்றுதொட்டு இருந்து வரும் வழக்கம். நானும் அப்படித்தான் வளர்ந்தேன். அதனால்; இது பாராட்டுக்குரிய செயலே தவிர, பழியாகாது" என இடித்துரைப்பதும், காவலர்கள் திகைத்து நிற்பதும் உணர்ச்சிபூர்வமாகச் சித்திரிக்கப்பட்டுள்ள கவிதை ஓவியம் இது. இக்கவிதை "அமுதசுரபி" - 1949 மே இதழில் வெளிவந்துள்ளது.

இனி இயக்கம் சாராத மனித நேயம் பற்றிப் பேசும் தனிக்கவிதைகள் சிலவற்றைக் காண்போம்.

முதலில், ஒரு கழைக்கூத்தாடியின் நிலை பற்றிப் பேசும் கவிதை:

"தோளில் அமர்ந்திடும் உங்கள் பிள்ளை - நல்ல
தொட்டிலில் ஆடிடும் உங்கள் பிள்ளை
காளியை நம்பிஎன் பிள்ளையதோ - அந்தக்
கம்பத்தின் உச்சியில் தொங்குதையா!

திண்ணையின் ஓரத்தில் உம்குழந்தை - தன்னைச்
செல்லவிடுதற்கும் அஞ்சிடுவிர்!
அண்ணாந்து பாருங்கள்! ஆகாசத்தில் - என்றன்
ஆசைக் குழந்தையும் சுற்றுவதை!"

உருக்கமான காட்சியைக் கண்முன் நிறுத்தி, கூடியுள்ளவர்களிடம் பிச்சை கேட்கிறான் கழைக் கூத்தாடி. அடுத்து நிகழ்வது நம்மை அதிரச் செய்கிறது - என்ன?

கம்பத்தின் உச்சியில் இருந்த குழந்தை வலிபொறுக்காமல் கீச்சிட்டு அலறுகிறது. சரிந்து கீழே விழுகிறது. தாவி அணைக்கிறான். மூச்சில்லை. முகத்தோடு முகம் ஒற்றிச் சாய்கிறான். கூட்டம் கலைகிறது. கவிஞர் கூறுகிறார்.

"காளியும் கூளியும் காக்கவில்லை - மூடக்
கட்டுக் கதைகளை நம்பியதால்!
தேளையும் பாம்பையும் கும்பிடுவார் - இவர்
தீமை அடைந்துமே செத்திடுவார்!

வேடிக்கை பார்த்தவர் ஓடிவிட்டார் - அங்கு
வீழ்ந்த இரண்டுடல் வேதனையில்!

கூடிக்கிடந்தது, குள்ளத் தமிழர்போல்
குருடாகி நின்றதக் கம்பமுமே!"

– "குயில்" 1947 மார்ச் இதழ்.

அடுத்து வரும் கவிதை நெசவுத் தொழிலாளியின் துயர வாழ்க்கையைச் சித்திரிப்பது.-"மனிதன்" ஏட்டில் 1954 அக்டோபர் இதழில் வெளிவந்தவை.

தீபாவளித் திருநாளில், வண்ண வண்ண மத்தாப்புகள் வானில் ஒளிர்கின்றன. ஒரு தீப்பொறி கவிஞர் முன் நின்று செய்தி சொல்லுகிறது. அவ்வமையம் மனைவி, நீராட அழைக்கிறாள். கவிதை பிறக்கிறது.

"ஐயா வரகவியே அண்டபகி ரண்டமெலாம்
நெய்யாய் உருக, மிக நெக்குருகப் பாடுவீரே!
வண்ணத் தெருவிடையே வந்த நிலவாக,
எண்ணச் சுடராக ஏற்றிவைத்த தீபத்தைப்
பாடவந்த பாடகரே, பாட்டை நிறுத்தய்யா!
தேடவந்த நல்லுவமை சீரழிந்து போச்சய்யா!
நிலவற்ற வானம் நிழலற்ற கானல்
இலகும் சுடரற்ற இல்லமிது காண், ஐயா!

......... ......... ......... ......... ......... ......... .........

ஆடும் தறிகளுயிர் அல்லாடிப் போயிற்று!
பாடுகின்ற பாடல் பதங்கெட்டுப் போயிற்று!
சுற்றுகின்ற ராட்டினங்கள் சுற்றும் கிராமங்கள்
அற்ற குளம்போல் அழிந்தவாழ் வாயிற்று!
தத்துகின்ற நாடா தறிகெட்ட தாயிற்று!
புத்தாடை எங்கே, புகழ்ந்த நூல் பாட்டெங்கே?
பிசகுத் தொழில் செய்து பேதுற்றோம்! என்றின்று
நெசவுத் தொழில்செய்தோர் நெஞ்சொடிந்து போயிற்று!
"சா"வென்ற ஆடை தனைப்போர்த்து நிற்கின்றார்,
"போ"வென்றவரைநாம் போகவிட்டோம் அவ்வழியே!"

மத்தாப்புப் பொறி சொன்ன செய்தி கவிஞரை வெகுவாகப் பாதித்தது அதனால்,

"நீந்தும் குளிர்காற்றில் நீரலைகள் பாட்டிசைக்க
தீந்தேன் இதழ்சிவந்து சேர்ந்தமனத் தூதனுப்பி
எண்ணெயிட்டு நீராட என்னை அழைக்குமலர்ப்
பெண்ணே விலகிப்போ! பேசமனம் நாணுதடி!"

என்று மறுமொழிகூறிக் கவிதையை முடிக்கிறார் கவிஞர்.

மற்றொரு கவிதை "**மனிதன்**" ஏட்டில் அக்டோபர் 1954 இதழில் வெளிவந்தது. தலைப்பு : "**மாசற்ற தியாகம்**". இது சேரிவாழ் மக்களின் அவல நிலையைச் சித்திரிப்பது; படியுங்கள்:

**"போற்றுவார் உன்னைப் புரட்சிமலர்த் தோட்டமென**
**ஏற்றுவார் உன்னை இமவானின் உச்சியிலே!**
**சாற்றுவார் கீர்த்தனங்கள், தட்டுவார் மேளங்கள்!**
**ஆற்றல் உடையவர்கள் ஆதித் திராவிடராம்**
**காற்றைப்போல் வீசுவாராம், காட்டைத் திருத்துவராம்**
**சோற்றைச் சமைப்பவராம் தூய சகோதரராம்"**
**என்றென்று பாராட்டி எத்தனைபேர் ஏப்பமிட்டார்!**
**ஒன்றொன்றாய்ப் பேசியவர் உன்மடியில் கைவைத்தார்!"**

விளைவு? பணம் திரட்டி, புகழ் பரப்பி, பதவி பெற்று உயர்வு கண்டவர்கள் அவர்கள் மட்டுமே அல்லவா?

**"உன்பேர் உரைத்தே உயர்ந்தார் ஒருசில பேர்!**
**துன்பக் கொடுஞ்சேற்றில் தூர்ந்தாய் துயருற்றாய்!**
**அன்றிருந்த மேனி அழியா திருக்கின்றாய்!**
**தொன்று தொட்டு வந்த சுமை தூக்கி மடிகின்றாய்!**
**மண்ணில் மடிகின்ற மாசற்ற தியாகத்தை**
**எண்ண, எழுத எவருள்ளார், இந்நாட்டில்!"**

இக்கவிதை நாற்பத்து ஐந்தாண்டுகளின் முன்னர் எழுதப்பட்ட தாயினும் இன்றளவும் சேரிப்பகுதிகளில் ஆரவாரம் உள்ள அளவிற்கு, அபிவிருத்திகள் காணப்படாததும் நம் சிந்தனைக்கு உரியதல்லவா?

மேலும் ஒரு கவிதை. இதுவும் "மனிதன்" ஏட்டில் 1955 ஜனவரி இதழில் வெளிவந்தது: தலைப்பு "**தியாகச்சுடர்!**"

விதவைப் பெண்டிரை மறுமணம் செய்தல் வேண்டும் என்ற கொள்கை, **இராஜாராம் மோகன்** ராய் காலந்தொட்டு பேசப்படுவது வரலாற்று உண்மை. இன்று வரை அக்கொள்கை முழுவெற்றி காணாதது மெய்யே என்றாலும், அவர்களை மதிப்புடன் நடத்தும் வழக்கமும் நடைமுறைக்கு வரவில்லையே! இதனைப் "பா" வகையில் உயர்வுடைய "வெண்பா"வினால் சுட்டுகிறார் கவிஞர்.

**"சிந்தை குலைந்து திகைத்தழுத உன்னுருவைச்**
**சந்தையிலே விற்றார் சகாயமாய் - வந்த பணம்**
**வட்டிக்கு விட்டு வருமானம் பெற்று நிதம்**
**மொட்டை யடித்தார் முதல்!"**

"நாளும் அழுதழுது நைந்தவுனை முன்னேற்றத்
தாளும் எழுத்தும் சதமென்றார் - "ஆளும்
உல"கென்றார், "ஊ" என்றார்; அன்னார் உனது
தலை யெழுத்தை மாற்றாதவர்!"

"மண்ணில் உருண்டெழுது மாரடித்தார்; நீ அழுத
கண்ணீர் இஃதென்று கடலலையை - எண்ணியவர்
பேசினார் நல்லபெயரெடுத்தார்; உன்பெயரை
ஏசினார் இன்னும் பலர்!"

"கதவற்ற வீடாகக் காட்சிதரக் கண்டார்
"விதவை யென்றார்" இருண்ட வீடென்றார் - கதறினார்
ஏற்றும் சுடரை இவரணைத்தார் அல்லாது
காற்றின் கரம்அன்று காண்!"

"குங்குமமும் சவ்வாதும் கொத்து மலர்குழலும்
தங்கத் தமிழும் தனமாச்சு - மங்களமாய்
வாழ்கின்றார் உன்னுருவ வணக்கம் நடத்தியிவர்
வாழ்கஉன் தியாகச் சுடர்?"

"தலையெழுத்தை" மாற்றும் துணிவில்லாத மனிதர்களிடையே அவர்கள் என்றும் தியாகச் சுடர்களாகவே இருந்து வருவர். விடிவு தோன்ற வாய்ப்பேயில்லை. அது தானே உண்மை!

கவிஞர் தமிழ்ஒளி அவர்களை "மக்கள் கவிஞர்" எனப் போற்றுதற்கு இங்கே முன்வைத்துப் பேசிய கவிதைகள் மட்டுமன்றி பாட்டாளி மக்களின் துயரங்களைச் சித்திரிக்கும் மேலும் பலகவிதைகளும் சான்றாக உள்ளன. அவற்றுடன், அவர் படைத்த குறுங்காப்பியங்கள், "நிலைபெற்றசிலை" "வீராயி" "மேதின ரோஜா" போன்றவையும் அதற்குத் துணை நிற்கும்!

# களப்போர் கவிஞர்

"உலகத் தொழிலாளிகளின் இயக்கமாகிய பொதுவுடைமைப் போர்க்களத்தில் களப்போர் வீரக்கவிஞராக விளங்கியுள்ளார் தமிழ்ஒளி" எனப் புகழுரை சாற்றியுள்ளார் பன்மொழிப் புலவர் அப்பாத்துரையார்.

அந்த மாகவிஞர் வெளியிட்டுள்ள கவிதைப் பிரகடனத்தை முதலில் காண்போம்.

**"தமிழனே நான் உலகின் சொந்தக் காரன்**
**தனிமுறையில் நான் உனக்குப் புதிய சொத்து!**
**அமிழ்தான கவிதைபல அளிக்க வந்தேன்**
**அவ்வழியில் உனைத்திருத்த ஓடி வந்தேன்**
**இமைதிறந்து பார்! விழியை அகல மாக்கு!**
**என்கவிதைப் பிரகடனம் உலக மெங்கும்**
**திமுதிமென எழுகின்ற புரட்சி காட்டும்!**
**சிந்தனைக்கு விருந்தாகும் உண்ண வாநீ!"**

வர்க்கப் புரட்சியைப் பாட வந்த கவிஞன் என்பதை உணர்த்திவிட்டு, அந்நாளில் இந்திய மண்ணில் நடைபெற்று வந்த "தெலிங்கானா" மக்களின் வீரஞ்செறிந்த பேராட்டத்தையும், சீனாவில் நடந்துவரும் மக்கள் யுத்தத்தையும் கோடிட்டுக்காட்டி, பாரதியின் சகாப்தத்தில் புதிய சமுதாயம் மலரும் என உறுதி மொழிந்து,

**"ஆளவந்தோம் உலகத்தை ஏழை மக்கள்**
**அடிபணியோம் எனச் சொல்லி கொடி உயர்த்து!"**

என ஆணை பிறப்பிக்கிறார் கவிஞர்.

இதனைத் தொடர்ந்து 14.5.48ல் "ஒளி" ஏட்டில் வெளிவந்துள்ள ஒரு கவிதை "பெரு" நாட்டின் விடுதலையைப் பேசுகிறது.

அமெரிக்காவின் காலனியாகக் கருதப்படும் "பெரு" நாட்டின் பெரும்பான்மை மக்களை ஆதிக்க சக்திகள் கொடுமைப்படுத்தி வந்தன. அதனை எதிர்த்து அங்கே நடந்த போராட்டம் பற்றி.........

**"அடங்குதலும் பிறர்தம்மை அடக்குதலும் அற்ற**
**அறமொன்றே விடுதலையின் உறவென்று கொள்வோம்!**
**திடங்கொண்ட ஒரு மனிதன் மெலியோரைத் தாக்கித்**
**தீரன்எனப் புகழ்பெறுதல் சிறுமையினுஞ் சிறுமை!**
**கடமையெண்ணித் தாய்நாட்டை உயர்த்துகின்ற செயலால்**
**காசினியிற் பிறருரிமை பறிப்பதுதான் அறமோ?**

**அடல்கொள்நெப் போலியனும் ஹிட்லரும்இச் செயலால்**
**அழிந்துபழி யேற்றதனைப் புவியறிந்த தன்றோ?**

- என. ஆதிக்கம் செலுத்துவோர்க்கு அறிவுறுத்தியும்.

**"பிற்போக்குச் சக்திகளை முறியடிக்க இன்றே**
**பெருங்கடலாம் தொழிலாளர் புரட்சி எனும் புயலைத்**
**தற்போதே எழுப்பிடுக! தவறிவிட வேண்டாம்**
**தரைமீதில் சுமையாக உள்ள முதலாளி**
**கற்பாறை என்றேநீர் கருதற்க! உமது**
**கைஓங்கிக் கொடுக்கின்ற அறைபட்டுப் பொடியாய்ப்**
**புற்பனிபோல் பொலபொலென உதிர்ந்திடுவான்; இன்றே**
**புறப்படுவீர்! நானுங்கள் புகழ்பாடு கின்றேன்!**

- அமெரிக்க முதலாளிகளை எதிர்க்கத் தூண்டியும் போராட்ட வெற்றிக்கு வாழ்த்துரைக்கிறார் கவிஞர். இதனைத் தொடர்ந்து, 1949 களில் சீன நாட்டில் மக்கள் யுத்தம் வெற்றி வாகை சூடிய நிலையில், புரட்சியை வரவேற்றும், வெற்றிக்கு வாழ்த்துக் கூறியும் நான்கு கவிதைகளைப் படைத்துள்ளார் நம் கவிஞர்.

இங்கே-

சுதந்திரம் வந்த தொடக்கக் காலத்தில், குடந்தை மண்ணில் நகர்சுத்தித் தொழிலாளிகள் கூலி உயர்வு கேட்டுப் போராட்டம் நடத்தினர். அரசாங்கம், பிரச்சினைக்குத் தீர்வு காணாமல், போலிஸ் படையை ஏவித் தொழிலாளரை அடித்துத் துன்புறுத்தியது. சிறையில் அடைத்துச் சித்திரவதை செய்தது. இந்தப் போராட்டத்தில், பெண்களும் தங்கள் குழந்தைகளுடன் பங்கேற்றனர். அப்போது, போலிசார் மிரட்டலுக்குப் பணியாமல் பெண்கள் எதிர்க்குரல் எழுப்பியதைக் கவிஞர் சுவைபடச் சொல்லுகிறார்.

இருபத்து நான்கு பாக்களைக் கொண்ட கவிதையின் சில பகுதிகளை மட்டும் காண்போம்.

**"வாந்தி வரும் சாக்கடையின் துர்நாற் றத்தில்**
**மலம்அள்ளிப் புழுநிறைந்த குப்பை வாரி**
**காந்தியைப்போல் பொறுமையினைக் கடைப்பிடித்துக்**
**கடமையெண்ணி தேசத்தின் நலத்தைக் காக்கும்"**

அவர்களைத் துன்புறுத்திய போலீசார், உங்களைத் தூண்டிவிட்டது யார்? எனக் கேட்கின்றனர். அதற்கு-

**"சுமையாகிப் பூமியிலே பிறந்து விட்ட**
**சூரர்களே, எமைத்தூண்டி விட்டோர் இங்கே**

எமதருகில் இருக்கின்றார்" என்றார் பெண்கள்!
எழுந்தனராம் செந்தலையர் கும்பலாக

"காட்டுங்கள் முரடர்களை உம்மைத் தூண்டும்
கயவர்களைக் காட்டுங்கள்! கணவன் மாரை
வீட்டுக்கு அனுப்புகிறோம்! ஒன்றும் செய்யோம்,
விட்டிடுவோம்!" எனச்சொல்லிக் கொக்கரித்தார்.
பாட்டுக்கு மழலைதருங் கிளியைப் போன்ற
பால்மணமும் மாறாத குழந்தை தன்னைக்
காட்டியொரு பெண் சொன்னாள்; இவன்தான் இந்தக்
கலகத்தைத் தூண்டியுமே விட்டான்! என்றே!

கோபத்தில் சிரிப்புவர மற்றப் பெண்கள்
"கொல்"லென்று நகைத்தார்கள் ஆமாம் எங்கள்
கோபத்தைத் தூண்டியது பால் இல்லாமல்
குமுறியழும் குழந்தைகளின் குரலே என்றார்!

முடிவில்-

" தொழிலாளர் உரிமையினைத் தகர்ப்ப தற்கும்
சுதந்திரத்தை ஒற்றுமையை உடைப்ப தற்கும்
இழிவான செயல் செய்து கருங்கா லிக்கு
எலும்பிட்டு நாய்போலே வேலை வாங்கி
அழிவுவழி நடந்து செல்ல எண்ணிடாதீர்!
அலையலையாய் எழுகின்ற முழக்கம் கேட்டீர்!
"ஒழிக முதலாளி" எனப்புரட்சி வீரர்
உலகமெங்கும் பொங்கியெழும் காட்சி காணீர்!

எனப் பாட்டாளி வர்க்கத்தின் எழுச்சியை நினைவூட்டிக் கவிதையை முடித்துள்ளார் கவிஞர்.

அடுத்து ஒரு கவிதை-

அந்நாளில், ஏழைகளின் வாகனமாய் "ட்ராம் வண்டி" சென்னை நகரில் ஓடிக் கொண்டிருந்தது. அந்த நிறுவனத்தின் முதலாளி ஒரு வெள்ளைக்காரர்

பிரிட்டிஷ் அரசின் பிடியில் இருந்து விடுதலை பெற்றுவிட்ட இந்த பூமியில் இனி நாம் இருக்கக் கூடாது என்று முடிவு செய்தார். "நஷ்டம்" எனக்கூறி "ட்ராம்வே கம்பெனியை" மூடப்போவதாக அறிவித்தார். அந்த நிலையில் தொழிலாளர் போராட்டம் எழுந்தது.

அந்தக் காலகட்டத்தில், மொழிவழி மாநிலம் அமைந்து கன்னியாகுமரியைத் தாய்த் தமிழகத்துடன் இணைக்கும் எல்லைப் போராட்டமும் நடைபெற்று வந்தது. இந்தப் பின்னணியில் கவிதை எழுகிறது.

"மண்ணிடையே நம்வாழ்க்கை வண்ண மலர்சூட
விண்ணிடையே நம்முடைய வெற்றிக் கொடியாட
கதிர்பாய்ந்த மாகடலாய்க் காட்சி வரைகின்ற
புதியதமிழ் நாட்டுப் பொற்சுடரை நாமடையப்
போராடும் நேரமிது! பொங்கும் புரட்சியலை
நீராடி மக்கள் நிமிர்கின்ற நேரமிது!"

........ ........ ........ ........ ........ ........ ........

"தன்குமரி எல்லை தனைச் சார்ந்த தமிழகத்தில்
எல்லாம் தமிழர்க்கே! என்றெழுந்த போர் முரசம்
எல்லோரும் கேட்டே எழுகின்ற நேரமிது!"

........ ........ ........ ........ ........ ........ ........

இங்கே-

"ஓடிவிட்ட வெள்ளையனின் ஒரு லட்சம் கொண்ட முதல்
கோடியாய் மேடிட்டுக் கோபுரமாய் ஓங்கியபின்,
லாபமில்லை என்றுரைக்கும் நாவையிரு துண்டாக்கக்
கோபமொடு செந்தமிழர் கொட்டுகின்றார் போர்முரசு!

நித்த நித்தம் "ட்ரா"மோடு நின்றுநின்று கால்கடுக்க,
சித்தம் தளராமல் செய்தொழிலில் ஊக்க மொடு
கண்கள் வழியோடக் கானலொடு "ட்ரா" மோட,
எண்ணற்ற இன்னலிலே தேகம் இளைத்தோட
சிந்தும் வியர்வையிலே தேச நலன்பெருக
அந்தத் தொழிலாளர் ஆண்டுதொறும் பாடுபட
ஒன்றுக்கு நூறாய் உயர்ந்ததொரு லாபமெனும்
குன்றுக்கும் மேலே குதித்தாடும் பேய்க்கழுகு!"

போட்ட முதலை விடக் கொள்ளை லாபம் ஈட்டியுள்ள முதலாளி "நஷ்டம்" எனப் பொய் சொல்லி நிறுவனத்தை மூட அனுமதிக்கக் கூடாது என்பதற்கே தொழிலாளர்கள் போராட்டம் நடத்துகின்றனர்.

அரசாங்கம், அந்த முதலாளிக்குப் பாதுகாப்பை அளித்துவிட்டு, தொழிலாளர் கைகளில் விலங்கைப் பூட்டுகிறது. இதனை-

**வெள்ளை வெறியர்தமை வெஞ்சிறையில் மாட்டாமல்**
**கள்ளமற்ற தோழருக்குக் கைவிலங்கு போட்டீரே!**
**நேரிட்ட உண்மை நிறைகாணக் கண்ணின்றி**
**யாரிட்ட கட்டளையால் யாரைச் சிறையிட்டீர்?**
**கங்குல் கிழித்துக் கதிரெழுந்த நேரத்துப்**
**பொங்கு கடலென்னப் போரலையாய்ப் பாய்கின்ற**
**பாட்டாளி வர்க்கப் படைதிரண்டால், மின்னலிடும்**
**ஈட்டிமுனை துப்பாக்கி எல்லாம் எதிர்த்திடுமோ?**

- கோபாவேசமாகக் குரல் எழுப்புகிறார். முடிவில்:

**கார்கடலின் மீது கதிர்எழுந்து நிற்பதுபோல்**
**போர்க்கொடியை ஏந்திப் புறப்படுக, செந்தமிழர்!**

போராட்டம் நடந்து முடிந்தது. "ட்ராம்வே" நிறுவனத்தை அரசு விலை கொடுத்து வாங்கியது. தொழிலாளர்களுக்கு நிவாரணம் வழங்கிய பின் நிறுவனத்தை அரசு மூடிவிட்டது.

வர்க்கப் போராட்டங்களை வரவேற்று வாழ்த்துரைப்பதே களப்போர்க் கவிஞர்பணி. அதனைச் செம்மையாகச் செய்துள்ளார் தமிழ்ஒளி

# குழந்தைக் கவிஞர்

"கவிதையின் ஆணிவேரே குழந்தை உள்ளந்தான். குழந்தையின் மாசற்ற உள்ளத்திலே பிறக்கும் வியப்பு, ஆர்வம், ஆத்திரம், கற்பனை, பொய், அறியாச் சொல் இவையெல்லாம் இணைந்த திரள்தான் கவிதையின் உயிர்க்கரு. ஒரு வகையில், கவிஞன் ஒரு குழந்தை. கவிஞர் தமிழ் ஒளி இத்தகைய "குழந்தை" - சிறந்த கவிஞர்".

- என முதுபெரும் எழுத்தாளரும் "மஞ்சரி" ஆசிரியருமான பெரியவர் தி.ஜ.ர. அவர்கள், "பாடு, பாப்பா!" நூலுக்கு வழங்கிய முன்னுரையில் குறிப்பிட்டுள்ளனர்.

அந்தக் குழந்தைக் கவிஞரின் பாடல்கள் சிலவற்றைக் காண்போம்.

இயற்கை அழகை குழந்தைகள் அறியச் செய்யும் பாடல் இது:

**"ஆற்றில் தண்ணீர் "சலசல" வென்றே ஓடும் - ஆ, ஆ!**
**அதுதான் நன்றாய் அழகாய் நாளும் பாடும்!**
**காற்றும் நன்றாய்க் "கலகல" வென்றே வீசும் - நம்**
**காதுகள் மகிழப் பறவைகள் கூடிப் பேசும்!**
**சேற்றில் மலர்ந்த தாமரை மலரும் ஆடும் - ஆ, ஆ!**
**தென்னையின் ஓலை மகிழ்ந்து தாளம் போடும்!**
**ஊற்றும் தண்ணீர் கால்வாய் நிறைந்து செல்லும் - ஆ, ஆ!**
**ஓடிடும் போதே ஒவ்வொரு கவிதை சொல்லும்!**

அடுத்து, உறங்கும் குழந்தையைத் தட்டி எழுப்பிக் "கண்விழி" எனக் கனிவாகக் கூறுகிறார். நீங்களும் கேளுங்கள்.

**"கொக்கரக்கோ" வெனச்**
**சேவல் கூவியது கண்விழி!**
**கோபுரம் பார்அதோ**
**மின்னி மினுக்குது கண்விழி!**

**சக்கரம் போல் அதோ**
**சூரியன் தோன்றினான் கண்விழி!**
**தட்டுகின் றார்அதோ**
**வாசல் கதவை நீ கண்விழி!**

வீதியில் பால், பசு
வந்து கறந்தது கண்விழி!
வீடுகள் தோறும்
விளக்கொளி கண்டுநீ கண்விழி!

நீதி தருகின்ற
கல்வியைக் கற்றிட கண்விழி!
நீயும் உலகில்
பெரியவன் ஆகவே கண்விழி!

- மேலும் ஒரு பாடல். குழந்தை கிளியை விளித்து கதை சொல்லுமாறு கேட்கிறது. நீங்களும் கேளுங்களேன்.

"சின்னக் கிளியே! கதை சொல்லு!
செல்லக் கிளியே! கதை சொல்லு!
தென்னங் கீற்றின் "சலசல" நடனம்
செய்திடு காற்றின் கதை சொல்லு!

கூட்டுக் கிளியே! கதை சொல்லு!
கொஞ்சுங் கிளியே! கதை சொல்லு!
மோட்டுக் கிளையிற் "கலகல" வென்று
மோதிய காற்றின் கதை சொல்லு!

பித்துக் கிளியே! கதை சொல்லு!
பேதைக் கிளியே! கதை சொல்லு!
முத்துச் சோளக் கதிர்களில் ஆடி
ஓடிய காற்றின் கதை சொல்லு!

வண்ணக் கிளியே! கதை சொல்லு!
வாசக் கிளியே! கதை சொல்லு!
சின்னக் குழலில் அழகிய பாடல்
செய்திடு காற்றின் கதை சொல்லு!

குழந்தைகள் பாடி மகிழ, படித்து சிந்திக்க, கேட்டு இன்புற இது போன்ற ஏராளமான பாடல்களை படைத்துள்ளார் தமிழ்ஒளி! இவையெல்லாம் தமிழ்க் குழந்தைகளின் பார்வைக்குச் செல்ல வேண்டும்.. அந்த வாய்ப்பு பெருமளவில் வாய்த்திடவில்லை யென்பதே நமக்குள்ள குறை!

# தத்துவ நோக்கில் முதிர்ந்த கனிகள்

இதுகாறும், மேற்கோள்களாக முன்னிறுத்திப் பேசப்பட்ட கவிதைகளின்றும் முற்றிலும் மாறுபட்ட இரண்டு கவிதைகளை இங்கே குறிப்பிட வேண்டும்.

அவையிரண்டும், தமிழ்ஒளியின் கவிதைப் படைப்புகளில் சிறந்தவற்றுள் சிறந்ததென சிந்தனையாளர்கள் தேர்ந்து சொன்னவை.

ஒன்று வாழ்வியலின் அடிநாதத்தை உணர்த்தும் **"பட்ட மரம்"** பாடல்.

மற்றொன்று வளரும் விஞ்ஞானம் வாழ்வியலை எவ்வகையில் மாற்றிவிடும் என்பதனைத் தெளிவுபடத் தெவிரிக்கும் **"அணுவின் ஆற்றல்"** கூறும் கவிதை.

ஒரு "மா கவிஞனை" அடையாளம் காண இவை துணைபுரியும் என்பது என் கருத்து. கவிதைகளைப் படியுங்கள்.

### பட்ட மரம்

**மொட்டைக் கிளையொடு**
**நின்று தினம்பெரு**
**மூச்சு விடும்மரமே!**
**வெட்டப் படும்ஒரு**
**நாள்வரு மென்று**
**விசனம் அடைந்தனையோ?**

**குந்த நிழல்தரக்**
**கந்த மலர்தரக்**
**கூரை விரித்தஇலை!**
**வெந்து கருகிட**
**இந்த நிறம்வர**
**வெம்பிக் குமைந்தனையோ?**

**கட்டை யெனும்பெயர்**
**உற்றுக் கொடுந்துயர்**
**பட்டுக் கருகினையே!**
**பட்டை யெனும்உடை**
**இற்றுக் கிழிந்தெழில்**
**முற்றும் இழந்தனையே!**

காலம் எனும்புயல்
சீறி எதிர்க்கக்
கலங்கும் ஒருமனிதன்
ஓலமி டக்கரம்
நீட்டிய போல்இடர்
எய்தி உழன்றனையே!

பாடும் பறவைகள்
கூடி உனக்கொரு
பாடல் புனைந்ததுவும்,
மூடு பனித்திரை
யூடு புவிக்கொரு
மோகங் கொடுத்ததுவும்,

ஆடுங் கிளைமிசை
ஏறிச் சிறுவர்
குதிரை விடுத்ததுவும்,
ஏடு தருங்கதை
யாக முடிந்தன!
இன்று வெறுங்கனவே!

— 'அமுத சுரபி' — 1955

## அணுவின் ஆற்றல்

காலம் நமக்குக் கதைசொல்லப் போகிறது!
ஓலம் இடாதீர்! உதயம் பிறக்கிறது!

சின்ன அணுவாற் செகத்தை மயக்கிடலாம்
என்ன புதுமை! எலாமும் இயற்றிடலாம்!

பாலை நிலத்தைப் பழனமாய் மாற்றிடலாம்!
சோலை மலர்போற் சுகங்கண்டு போற்றிடலாம்!

வானச் சுடர்போலும் வாழ்வை வனைந்திடலாம்!
ஞானச் சுடர்மேலும் நாமே புனைந்திடலாம்!

துயரச் சுமையைச் சுழற்றி எறிந்திடலாம்!
புயலை இடரைப் புடைத்து நொறுக்கிடலாம்!

குருட்டைக் கிழித்தெறிந்து கோலச் சுடரால்
இருட்டைக் கிழித்துநாம் இந்திரர் ஆகிடலாம்!

அளத்தற் கரிய அணுவாற்றல் நம்மால்
கிளத்தற் கரிதுகாண்! கீர்த்தி பெரிதுகாண்.

நோய்வென்று வாழ்வின் நொடிவென்று மண்ணுலகத்
தாய்வென்று வாழும் தருமம் அணுசக்தி!

புத்துலகப் பேராற்றல்! பொங்கும் புதுமைகள்!
அத்தனைக்கும் ஊற்றாய் அமைந்த அணுவாற்றல்!

பாசி படிந்த பழங்கருக்கல் பேர்ந்துவிழ
ஆசியா, ஐரோப்பா பேதம் அறுந்துவிட

இன்பம், இனிமை இகமே சுகமென்றும்
துன்பம் ஒழிந்து தொலைந்த யுகமென்றும்,

எல்லைப் பிரிவுகளோர் எள்ளூக்காய் மாறிவிட
இல்லை பிரிவினைகள் "யாதுமூர்; யாவருமே,

கேளிர்" என மாறக் கீழ்நாடும் மேல்நாடும்
தோளிணைந்து நிற்கத் தொழில்வளம் ஊற்றெடுக்க,

யந்திரம் கொக்கரிக்க ஆலைகள் தாம்சிரிக்க
எந்திரத் தாலே எலாம்நடக்க எங்கெங்கும்

பொய், மடமை, பூதம், புராணம் தலைகவிழ
எய்தஅம்பு போலே இலக்கை அவையெய்த,

காணும் இடமெலாம் கற்பனை ஊற்றெடுக்க
ஆணும் எழிற்பெண்ணும் அன்றே சமத்துவமாய்,

விஞ்ஞானப் பூங்கா விரித்த மலர்களாய்
அஞ்ஞானம் நீக்கி அடிமைத் தளைபோக்கி,

காணாப் புதுயுகத்தின் காதல் பிறப்பெடுக்க
நாணாப் பழங்கொடுமை, நஞ்சுண்டு தான்மரிக்க,

ஆலயம் ஆக அணுத்தொழிற் சாலைகள்
வாலைக் குமரிபோல் வாழ்க்கை நமைத்தழுவ,

கையுழைப்பும் கால்உழைப்பும் காட்டடிமை போல்உழைத்த
மெய்யுழைப்பும் போயொழிய விஞ்ஞானப் பேரொளியால்

வேலை குறைய விருப்பம் நிறைவெய்த
சாலைதொறும் மக்கட் சதிராடும் நூல்கற்க,

ஆழியைப் போய்நீந்த ஆகாயம் கையேந்த
'வாழிய வையம்! வளர்க அணுவாற்றல்!

சூழிய நன்மை! சுடர்க பொதுவுடைமை!
வீழிய பேதம்! விளைக விடுதலையே!'

என்றுமேல் அண்டங்கள் எல்லாம் முழக்கமிட
இன்றுநம் யாத்திரை இன்றே தொடங்கிவிட்டோம்!

'திங்களைப் பற்றினோம் செவ்வாயைச் சுற்றினோம்
பொங்கும் புதன்கண்டோம்! புகன்ற வியாழனொடு
எங்கும் சுடர்வெள்ளி ஏறும் சனிகண்டோம்!

ஞாயிற்றின் பேரொளியை நாட்கள் பிறக்கின்ற
வாயிலை நாம் கடந்து வான்கதவந் தான்திறப்போம்!'

என்றே அணுக்கள் இடிக்குரலில் கொக்கரிக்க
இன்றுநம் யாத்திரை இன்றே தொடங்கிற்று

பூதங்கள் யாவும் புவிப்பொருள் காட்டுகின்ற
நாதங்கள் ஆயின! நாம்மகிழ்ந் தாடுவமே!

*– 'ஜனசக்தி' – 1959.*

# இறுதிக் காலத்தில் இயற்றிய இரங்கற்பாக்கள்

அகவை பன்னிரண்டில் தமிழ்ஒளி படைத்த முதல் கவிதை எதுவென அறியப்படவில்லை. ஆயினும், இறுதிக்கவிதை எதுவென்று உறுதிபடக் கூறும் வாய்ப்பு நமக்கு உள்ளது.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் (1965) மறைந்த செய்தி புதுவையில் பரவியதும், அவரது உடல் எப்போது வருமென மக்கள் எதிர் பார்த்திருந்தனர். அப்போது தமிழ்ஒளி புதுவையில் இருந்தார். தனது ஆசான் மறைவு அவரைத் துயரத்தில் ஆழ்த்தியது. அங்கே, "காந்திவழி" ஆசிரியர் பெரியவர் எஸ்.ஆர். சுப்பிரமணியம் அவர்களைச் சந்தித்து பேசிக் கொண்டிருந்த போது இக்கவிதை பிறந்தது.

"பாரதிதாசன் உயிர்த்துறந் தார்எனப்
பக்கத்தி லுள்ளவர் பேசிநின்றார் - அவர்
சீரறி யாமல் பிதற்றுகின் றார்எனச்
சொல்லியே நானும் நடந்து சென்றேன்!

"சென்னையி லின்று பிணம்வரும்" என்கின்ற
செய்தியைச் சிற்சிலர் பேசிநின்றார் - அவர்
சொன்னது கேட்டுக் கொதிப்படைந்து, "வெறும்
சொத்தைகள்" என்று வழிதொடர்ந்தேன்!

உயிரில் உணர்வில் கலந்த கவிஞன்என்
உயிரில் உயிர்கொண் டுலவுகின்றான்! - வெறுந்
துயரில் நான்மூழ்கிக் கிடக்கவில்லை, அவன்
தொண்டு சிறந்திடத் தொண்டு செய்வேன்!"

இங்கே, சொல் அலங்காரமில்லை. துயரமும் தன்னம்பிக்கையும் கவிதை வடிவமாக ஒலிக்கிறது!

இதனை அடுத்து, சென்னை வந்த கவிஞர் நண்பர் ***சீனிவாச மூர்த்தியைக்*** காணச் சென்றார். இவரைக் கண்டதும், பாரதிதாசன் மறைந்த துயரத்தைச் சற்றே மறந்தவராய்த் தமிழ்ஒளியை வரவேற்றார் நண்பர்.

அப்போது, "சமநீதி" ஏடு அச்சாகிக் கொண்டிருந்தது. இரங்கற் செய்திகளுடன் தமிழ்ஒளியின் இரங்கற் பாவும் இடம் பெற்றால் சிறப்பாக இருக்கும் எனக்கருதி, ஒரு கவிதை எழுதித் தருமாறு கேட்டுக் கொண்டார் சீனிவாச மூர்த்தி.

தனது ஆசான் பாரதிதாசன் எதிர்கொண்ட தமிழ்ப்பகைமை, அதனை முறியடிக்க அவர் மேற்கொண்ட போராட்டம் எல்லாமே நினைவில் நிறைந்திருக்கத் தமிழ்ஒளி பாடத் தொடங்கினார். அந்தப் பாட்டே அவர் பாடிய இறுதிப்பாட்டு. பாரதிதாசனார்க்கும் அதுவே மிகச்சிறந்த பாராட்டு - புகழாரம். பொன்னாரம்! அந்தப் பொன்னான கவிதையை நீங்களும் படியுங்கள். தலைப்பு : **கவிஞர் கோமான்!**

"கொடியின்றி முடியின்றிக்
குலைகின்ற தமிழ்வாழ்வைக்
கொன்றதன் ஆணிவேரை,
அடியின்றிக் கெல்லிடச்
சூழ்ந்தவர் நெஞ்சினில்
ஆணிகொன் டறைந்து, சிங்கம்
அடியூன்றி நின்றுகண்
அழற்பொறி பறந்திட
ஆர்க்கின்ற அவ்வண்ணமாய்
இடிகொண்ட குரலினால்
எழுப்பினான் தமிழரை
எந்தை பாரதி தாசனே!

"அடிமைகொள், எனை!" என்று
புலவன்ஒவ் வொருவனும்
அயலவன் கால்பிடிக்க,
மிடிமைகொள் நிலையிலும்
'செந்தமிழ்க் கெதிரிஎன்
எதிரிதான்!' என்றுகூறிக்
குடிமையும் கொற்றமும்
ஏதடா தமிழன்னை
கொடியின்றி நிற்கும் நாளில்!
ஒடிகின்ற செடியல்ல
ஆலடா தமிழ்எ...
(ழு)ணர்த்தினான் கவிஞர் கோமான்!

செத்தவர் தம்மையே
எண்ணிநீர் நைவதேன்
கண்ணெதிர் சிற்பமாக
ஒத்ததோர் ஆற்றலால்
உயிருடன் வாழ்பவர்
உண்மையை நீர் உணர்ந்தால்,
பத்தல்ல ஆயிரம்
பாரதி தாசன்கள்
பைந்தமிழ் மண்ணிடத்து
முத்தல்ல; மணியல்ல
என்று முகிழ்ப்பரே
முத்தமிழ்க் கடல்முழங்கும்!

- எத்துணை கம்பீரமானகுரல்! உடல் தளர்ந்து தள்ளாடிய நிலையில், தடியூன்றி நடந்து வந்த கவிஞரின் நெஞ்சக்கனல் எத்துணை பிரகாசமாக ஒளி உமிழ்கிறது. இதுதான் தமிழ்ஒளி! இவர்தான் கவிஞர்.




1974 - தமிழ் ஒளியின் புகழ் ஒளி பரவ நாம் மேற் கொண்ட 'பொன் விழா' காணும் முயற்சித் தடைப்பட்ட நிலையில் அச்சாகி வெளிவராத 'பொன் விழா' நினைவு மலரின் முகப்போவியம்.

# அறிமுகம்

கவிஞர் தமிழ்ஒளி மறைந்த பத்தாண்டுகளின் பின், அவர் நினைவாக பொன்விழா நடத்தத் திட்டமிட்டோம். அதன்பொருட்டு **கவிஞர் குயிலன்** அவர்களைச் சந்திக்க நேர்ந்தது. அவர் என்னுடைய முயற்சிகளை வரவேற்றுப் பாராட்டியதுடன் ஒரு செய்தியும் சொன்னார்.

"பாரதிக்கும், வ.உ.சிக்கும் நண்பராய் விளங்கிய பரலி சு. நெல்லையப்பர் அவர்கள், சிந்தாதரிப்பேட்டையில் வசித்து வந்தார்கள். அந்நாளில் யுத்த நெருக்கடி தணிந்தும், உணவுத் தட்டுப்பாடு மிகுந்தும் இருந்தன. நெல்லையப்பரை வறுமை சூழ்ந்தது. ஒரு காங்கிரஸ் தொண்டர் வாரந்தோறும் உணவுப் பொருட்களும் மண்ணெண்ணையும் வாங்கி வந்து பரிவுடன் கொடுப்பதை நான் பார்த்திருக்கிறேன். அவரும் உங்களைப் போல அங்காடி வைத்திருந்தார். நீங்கள் தமிழ்ஒளிக்குச் செய்துள்ள உதவிகளை நினைத்துப் பார்த்த போது அந்தக் காங்கிரஸ் தொண்டர் நினைவு வந்தது. உங்களுக்கு அவரைத் தெரியுமா?

கவிஞர் குயிலன் அவர்கள் குறிப்பிட்டுச் சொன்ன காங்கிரஸ் தொண்டரை நான் அறிவேன். சமூக சேவையில் அவருடன் இணைந்து பணியாற்றிய நாட்கள் நினைவில் உள்ளன. அவருடைய திருப்பெயர் **தியாகி ஏ. கிருஷ்ணசாமி** இப்போது அவர் இல்லை. திரு.குயிலன் அவரை நினைவு கூர்ந்ததும் என்னை மெய்சிலிர்க்க வைத்தது.

என்னளவில் தொண்டுள்ளம் அமைவது, குடிப்பிறப்பினாலோ, செய்யும் தொழிலினாலோ அல்ல, சொந்த வாழ்க்கையில் ஏற்படும் பாதிப்புகளும், சூழ்நிலையின் தாக்கமும்தான் தொண்டுபணிகளில் ஈடுபடத் தூண்டுகிறது.

பச்சையப்பன் கல்லூரியை ஒட்டியிருந்த எங்கள் பேட்டையில், தமிழ்ப் பேராசிரியர்கள் பலரும் குடியிருந்தனர். அதனால் தமிழ்மணம் கமழ்ந்தது, கழக மனமாகவும் கிளைத்தது. இளைஞர்கள் தமிழ்ப் பற்றாளர் ஆனோம். பாரதிதாசன் கவிதைகளை வாங்கிப் படித்தோம். தொடர்ந்து, மறுமலர்ச்சி கவிதை நூல்களை விலை கொடுத்து வாங்கிச் சேகரிப்பதில் ஆர்வங்கொண்டோம். அந்த வரிசையில் **"வீராயி"** நூலும் ஒன்று.

கவிஞர் தமிழ்ஒளி "வீராயி" நூலுக்கு எழுதியிருந்த முன்னுரை என்னை சிந்திக்கத் தூண்டியது. "மக்களுக்காக இலக்கியம்" என்ற கொள்கையில் பிரசார நோக்கம் பெரிதாய் இருந்த போதிலும், அடிமைச் சகதியில் சிக்கித் தவிக்கும் பாட்டாளி மக்களைத் தலை நிமிரச் செய்து போராடத் தூண்டும் வீர இலக்கியம் "வீராயி" எனப் புரிந்து கொண்டேன். அந்நூலைப் பலமுறை படித்தேன். **தமிழ்ஒளி** மனதில் நிலைத்து விட்டார்.

பாரதியை நான் கண்டதில்லை. பாரதிதாசனாரின் தீட்சண்யமான பார்வையை நான் தரிசித்துள்ளேன். தோற்றம் எளிதாயினும், அதே சாயல் கொண்ட தமிழ் ஒளியுடன் பழகிய நாட்கள் பொன்னானவை என இப்போதும் போற்றி வருகிறேன்.

முற்போக்கு எழுத்தாளர் **திரு. விந்தன்** அவர்கள் **"மனிதன்"** ஏட்டைத் தொடங்கிய (1954) நாட்களில் எங்கள் பேட்டையில் தமிழ் ஒளியின் பிரவேசம் நிகழ்ந்தது.

அமைந்தகரையில் எனக்கொரு அங்காடி உண்டு. ஓய்ந்த நேரங்களில் படிப்பதற்கும், எழுதுவதற்குமாக, நானும் நண்பர் **சுப்பிரமணியமும் (தேவிதாசன்)** சேர்ந்து வாடகைக்கு ஓர் அறையை எடுத்திருந்தோம். எங்களுக்குப் பரிச்சயமான தோழர் **ரகுபதி** அவர்களுடன் ஒரு மாலைப் பொழுதில் எங்கள் அறைக்கு வந்தார் தமிழ் ஒளி. அறிமுகம் பெருமிதமாக நிகழ்ந்தது. அன்று தொடங்கிய நட்பு இறுதி நாட்கள் வரை நீடித்து வளர்ந்து வந்ததும் உண்மை.

இனி, முறைப்படி கவிஞருடைய வரலாற்றை நான் சொல்ல வேண்டும். முதற்கட்டமாக, அவர்தம் பிறப்பு, குடும்பம், கல்வி, கவிதைப்பணி குறித்து விவரிக்க வேண்டும். இங்கே, ஒரு குறிப்பு: தமிழ் ஒளி அவர்கள் தன்னைப் பற்றிய உண்மைகளை யாரிடத்தும் முழுமையாகச் சொன்னதில்லை. சந்தர்ப்பங்களில் அவராகச் சொன்ன சில செய்திகளும்; அவருடைய பெற்றோர் மற்றும், நண்பர்கள் சொன்ன நம்பகத் தகவல்களும், அனுபவ பூர்வமாக நானறிந்தவற்றையும் ஆரமாகத் தொகுத்து உங்கள் முன் வைக்கிறேன்.

# பட்டுப் பூவாய் மலர்ந்த பட்டுராசு

வரலாற்றுச் சிறப்பு மிக்க மக்கள் புரட்சியை வென்றெடுத்த பிரெஞ்சு நாட்டின் ஆளுமையில் இருந்தது புதுவை. அந்தப் புதுவை இந்தியப் புரட்சியாளர்களுக்குப் புகலிடமாய் விளங்கியதும் உண்மை.

மகாகவி **பாரதியும்**, மாவீரர் **வ.வே.சு. அய்யர்** அவர்களும் அங்கே புகல் நாடிச் சென்றதும், அதன் விளைவாக, **சுப்புரத்தின வாத்தியார், புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாகப்** பொலிவு பெற்றதும் நாமறிந்த செய்திகள்.

அந்தப் புதுவை நகரின் மருங்கில், சாமிப்பிள்ளை பேட்டையில், சித்த வைத்தியமும், கை நெசவும் தொழிலாய்க் கொண்ட, வள்ளுவர் மரபைச் சார்ந்த **திரு. பொ. சின்னையா - திருமதி செங்கேணியம்மாள்** தம்பதியர்க்குத் தலை மகனாகப் பிறந்தவர் தமிழ் ஒளி.

ஒரு குறிப்பு: தலைப் பிரவசம் தாய்வீட்டில் நிகழ்வதுதான் சம்பிரதாயம் என்ற அடிப்படையில், திருமதி செங்கேணியம்மாளின் தாய் வீடான **குறிஞ்சிப்பாடியை** அடுத்த **ஆடூரில்** நம் கவிஞனின் பிறப்பு நிகழ்ந்துள்ளது என்பதும் உண்மையாம்.

கவிஞர் பிறந்த நாள் : இரக்தாட்சி ஆண்டு, புரட்டாசித் திங்கள், ஆறாம் நாள், ஆங்கிலம் 21-9-1924.

கவிஞரின் இயற்பெயர் : **விஜயரங்கம்,** அவர்தம் பெற்றோர் செல்லமாக அழைத்த பெயர்: **பட்டு ராசு.** அவராகச் சூட்டிக்கொண்ட பெயர் : **தமிழ்ஒளி.**

தமிழ்ஒளி தனது. தொடக்கக் கல்வியைச் சாமிப்பிள்ளை பேட்டையில் உள்ள ஆரம்ப பாடசாலையிலும், உயர்நிலைக் கல்வியை **"கல்வே கலாசாலையிலும்"** கற்றார் எனத் தெரியவருகிறது.

மாணவப் பருவத்தில் பாரதி பாடல்களைப் பாடிப் பழகிய தமிழ்ஒளி, பாரதிதாசன் கவிதைகளையும் ஆர்வமுடன் கற்றவர்.

தம்மைச் சார்ந்த மக்களும், சுற்றுச் சூழலில் வசிப்பவர்களும் ஏழ்மையினாலும், இல்லாமையினாலும் துன்புறுவதை நேரிற்கண்டு மனம்

வெதும்பியவர்; இவற்றுக்குத் தீர்வு காணும் திசையில் தமது எண்ணங்களையும் இளமை தொட்டே வளர்த்து வந்தவர்.

மொழி அறிவும் சமூக உணர்வுகளும் இணைந்து அவரைக் கவிதை எழுதத் தூண்டியுள்ளன. **அகவை பன்னிரண்டில்,** நெஞ்சக் கனலோடு கவிதைகள் பிறந்தன. அந்தக் கவிதைகள் சக மாணவர்கள் இடையேயும் உறவினர் மத்தியிலும் அப்போதே பரவிவிட்டன.

பின்னாளில், திரு **ஆனந்தன்** வாயிலாக, திரு. **மன்னர் மன்னனுடன்** நட்பு உருவானது. அவருடன் இணைந்து **"முரசு"** என்ற பெயரில் கையெழுத்து ஏடு ஒன்றினையும் நடத்தியுள்ளார். அது தொடர்பாக அரசு தொடர்ந்த வழக்கினையும் சந்தித்துள்ளார் தமிழ்ஒளி.

இந்த கட்டத்தில்தான், தமிழ்ஒளியைத் தனது தந்தை பாரதிதாசனாரிடம் அறிமுகம் செய்து வைத்ததாக மன்னர் மன்னன் கூறுகிறார்.

கல்வே கலாசாலை பற்றி அவரிடம் கேட்டபோது, 'அங்கே, மாணவர்கள் பிரெஞ்சு மொழியில் பேசுவதையே பெருமையாகக் கருதுவார்கள். நான் தமிழில் பேசித் தாய்மொழியை நினைவூட்டி வந்தேன்'.

உயர்நிலைக் கல்வியை முடித்ததும் தமிழ் பயில விரும்பித் தஞ்சை சென்று, **கரந்தை செந்தமிழ்க்கல்லூரியில்** சேர்ந்ததாகவும், அதற்கு பாரதிதாசனார் பரிந்துரைக் கடிதம் பயன்பட்டதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

கரந்தைக் கல்லூரியில் தவழ்ந்த தமிழ் அவரை வரவேற்றதற்கு மாறாக, அங்கு நிலவிய **சாதிவெறி** அவரைச் சங்கடத்திற்குள்ளாக்கிய தாகவும் தமிழ்ஒளி வருந்தியுள்ளார்.

இந்த அவமானத்தைத் தாங்க மாட்டாமல், புதுவை சென்று பாரதி தாசனாரிடம் முறையிட்டார். அப்போது, "சேலம் மாடர்ன் தியேட்டர்" நிறுவனத்தார் பாரதிதாசனை அழைத்துப் போக "கார்" அனுப்பி யிருந்தனர். அந்த வண்டியில் தமிழ் ஒளியை ஏற்றிக் கொண்டு கரந்தை வந்தார் பாரதிதாசன்.

கல்லூரி வாசலில் கார் நின்றதும், வந்திருப்பது யார் என அறிந்து, கல்லூரி முதல்வரே நேரில் வந்து வரவேற்றார். அவருடன் தமிழ்ஒளி இருப்பதைக் கண்டதும், நிலைமை தெளிவாயிற்று. "இனி ஏதும் நேராதென" கல்லூரி முதல்வர் உறுதி மொழிந்தார்.

இந்த சம்பவம் பற்றி, பாரதிதாசன் அவர்களே தன்னிடம் கூறியதாக **கவிஞர் நாக.முத்தையா** அவர்கள் நம்மிடம் கூறியுள்ளார்.

இதன் பின்னர், முதலாமாண்டு தேர்வை எழுதி முடித்துவிட்டு புதுவை திரும்பியுள்ளார் தமிழ்ஒளி.

ஒரு செய்தி : முன்னர் எழுதியுள்ள குறிப்புகளில், கரந்தையில் மூன்றாண்டுகள் பயின்றதாக நாம் குறிப்பிட்டுள்ளோம். அது தவறு என்றும், தமிழ் ஒளியின் சக மாணவர் **புலவர் திரு. பாலசுந்தரம்** அவர்கள் சொன்ன தகவலை ஏற்றுக் கொண்டு இங்கே முதலாம் ஆண்டு முடிவில் என எழுதியுள்ளோம். இதுவே உண்மையாம்.

# 2. சிற்பியின் கனவும் சேரன் செங்குட்டுவனும்

கரந்தை கல்லூரிச் சூழல், கவிஞரின் கல்வியைப் பாதித்த அளவுக்கு, அவருடைய கற்பனைத் திறனைப் பாதிக்கவில்லை. உணர்ச்சி மிக்க கவிதைகள் பலவற்றை எழுதிக் கழக ஏடுகளுக்கு அனுப்பி வந்தார்.

**சக்தி நாடக சபா** தஞ்சையில் நாடகம் நடத்தி வந்தது. தமிழ்ஒளி சகமாணவர் ஒருவருடன் சென்று நாடகம் பார்த்தார். "கலை" அவரைக் கவர்ந்தது. கற்பனையை வளர்த்தது. ஒரு நாடகத்திற்கான கதைக் கருவும் அவர் உள்ளத்தில் உருவாகி வளர்ந்தது. விரைந்து எழுதி முடித்தார். அந்த நாடகக் கதையின் தலைப்பு **"சிற்பியின் கனவு"**

சகமாணவரிடம் நாடகத்தைப் படித்துக் காட்டினார். அவர் வியப்புடன் பாராட்டினார். "இந்த நாடகத்தை மேடையில் நடித்தால் பிரமாதமாக இருக்கும்" என உற்சாகத்துடன் கூறினார்.

இருவருமாகச் சேர்ந்து, நாடகசபா உரிமையாளர் **சக்தி கிருஷ்ண சாமி** அவர்களைச் சந்தித்து "சிற்பியின் கனவு" கையெழுத்துப் படியைக் கொடுத்தனர். அவர் அதனை ஆவலுடன் படித்துப் பார்த்து மகிழ்ந்தார். "நாடகக் கதை நன்றாக உள்ளது. அரங்கேற்றலாம்" என்றார். மாணவர் இருவரும் மகிழ்ச்சியுடன் திரும்பினர்.

தம்முடைய முதல் படைப்பு மேடை நாடகமாக மக்களைச் சேர்கிறது. இது வெற்றிபெற்றால் மேலும் பல படைப்புகளை எழுத முடியும் என்ற நம்பிக்கையும் மனத்தில் உருவாகி நிலைத்து வளர்ந்தது.

கொஞ்ச நாட்களில் "சக்தி நாடக. சபா" தஞ்சையை விட்டு சென்னையில் முகாமிட்டது. இங்கே, "சிற்பியின் கனவு" ஒத்திகை தொடங்கியது. கவிஞர் அவர்களை ஒத்திகை பார்க்க வருமாறு கடிதம் எழுதினார் சக்தி கிருஷ்ணசாமி. அவரும் சென்னை வந்து ஒற்றைவாடை தியேட்டரில் நடந்த ஒத்திகையைப் பார்த்தார். அச்சமயம் நாடக சபாவிற்கு பெங்களூரிலிருந்து அழைப்பு வந்தது. அங்கே சென்று சில மாதங்கள் நாடகம் நடத்தப் போவதாகவும், "சிற்பியின் கனவு" அங்கே அரங்கேற்றப்படும் என்றும் திரு. கிருஷ்ணசாமி உறுதி மொழிந்தார்கள்.

அதன்படி, பெங்களூரில் முகாமிட்டதும், முதல் நாடகமாகச் "சிற்பியின் கனவு" அரங்கேறி மக்களின் ஆதரவைப் பெற்றது. நிகழ்ச்சியை நேரில் கண்டு பரவசப்பட்டார் தமிழ்ஒளி. அந்த நாடகத்திற்கு உரிமைத் தொகையாக **ரூபா தொள்ளாயிரம் வழங்கி** வழியனுப்பி வைத்தார் சக்தி கிருஷ்ணசாமி.

பின்னாளில், சக்தி நாடக சபாவினர் சென்னை திரும்பி, மீண்டும் ஒற்றைவாடை தியேட்டரில் "சிற்பியின் கனவு" நாடகத்தை நடத்தி வந்தனர். அப்போது, சென்னைக்கு வந்துவிட்ட நம் கவிஞர், தன் நண்பர் **திரு.ஊ. கோவிந்தன்** அவர்களை உடன் அழைத்துச் சென்று நாடகத்தைப் பார்க்க வைத்தார். இதுபற்றி, தோழர் ஊ. கோவிந்தன் அவர்கள் நினைவு கூரும்போது, "நாடகம் அருமை" வசனங்கள் உணர்ச்சி மயமாக ஒலித்தன. இதற்குப்பின், **"சேரன் செங்குட்டுவன்"** என்ற தலைப்பில் மற்றொரு நாடகத்தை எழுதி "சக்தி நாடக சபாவிற்கு வழங்கினார் கவிஞர். அந்த நாடகம் அரங்கேற்றப்படவில்லை. சக்தி கிருஷ்ணசாமி அவர்களை சந்தித்து நாடகம் பற்றி கேட்டபோது, கொஞ்சம் பொறுத்திருங்கள் - ஏற்பாடு செய்கிறேன்" என்றார். கவிஞரும் வற்புறுத்தவில்லை. கால ஓட்டத்தில், அந்த நாடகம் என்ன ஆயிற்று என்றே தெரியவில்லை.

"சிற்பியின் கனவு" நாடகத்தின் கதாநாயகியாகவும், கதா நாயகனாகவும் நடித்த பெருமை **நடிகர் திலகம் சிவாஜி கணேசன்** அவர்களுக்கு உண்டு. பின்னாளில், அந்த நாடகக் கதை **"வணங்காமுடி"** என்ற பெயரில் திரைப்படமாக்கப்பட்டபோதும் திரு. சிவாஜி கணேசன் அவர்களே கதாநாயகனாக நடித்துள்ளார் என்பதும் உண்மை. ஆனால், திரையில் கதாசிரியர் பெயர் நிழலடிக்கப்பட்டு, **சக்தி கிருஷ்ணசாமி** பெயர் மின்னியதும் உண்மை.

இப்படி கதாசிரியர் பெயர் நிழலடிக்கப்படுவது திரைத்துறையின் தொழில் "தருமம்" என்றே இப்போதும் சிலர் கூறுகின்றனர்.

# 3. காவியம் படைத்தார் தமிழ் ஒளி

கரந்தையைவிட்டுப் புதுவை திரும்பிய தமிழ் ஒளி ஆசான் பாரதிதாசன் அவர்களைச் சந்தித்து, "படிப்பைத் தொடர மனமில்லை" என்று கூறினார். அவரும் அதனை ஏற்றுக்கொண்டு, தனக்கு உதவியாளராய் இருக்கும்படி பணித்தார்கள். இந்தக் கால கட்டம் 1943 - 44 எனலாம்.

பாரதிதாசனாருடன் தொடர்பு வைத்திருந்த நாட்களில் தினமும் அங்குச் செல்லுவார் தமிழ் ஒளி. ஆசான் ஏவிய பணிகளைச் செய்வார். இல்லம் நாடிவரும் விருந்தினரை உபசரிப்பதிலும் பங்கு கொள்வார். ஆசான் எழுதும் கவிதைகளைப் படியெடுத்துத் தருவார்.

தமிழ் ஒளி கூர்மையான பார்வையுடையவர். எதையும் ஊடுருவி நோக்கும் திறம் கொண்டவர். மாலை வேளையில் தினமும் குயில் தோப்பு சென்று வருவார். அங்கே நிலவும் எழில் மிகுந்த சூழல் அவரைக் கவி பாடத் தூண்டும். தினமும் ஒரு கவிதை எழுதி வருவார். அந்தக் கவிதையை ஆசான் திருமுன் வைத்து ஆசி பெறுவார்.

இந்த நாட்களில்தான் விஜயரங்கம் "தமிழ் ஒளி" ஆனார் போலும்! தமிழ் ஒளி எழுதிவரும் கவிதைகள், பாரதிதாசனார்க்குப் பிடித்தன. ரசிப்பார், தேவையான இடத்தில் திருத்தம் சொல்வார், தன்னைக் காண வரும் நண்பர்களிடத்தும் தமிழ் ஒளி பற்றிக் கூறுவார். அவ்வகையில், உள்ளூர்ப் பிரமுகர் - காந்தீயவாதி **எஸ்.ஆர். சுப்பிரமணியம்** அவர்களின் அன்பைப் பெற்றவர் தமிழ்ஒளி.

ஆசான் இல்லத்துடன் தொடர்பு கொண்ட நாட்களை நினைவு கூரும்போது, "அவர் இருக்கும் போது வீடு கலகலப்பாக இருக்கும்; எழுதும் நேரம் தவிர வீட்டிலுள்ளவர்களுடன் பேசி மகிழ்வார். விருந்தோம்பலுக்கு எடுத்துக்காட்டாய் விளங்கியது ஆசான் இல்லம். விருந்தினர் திரும்பிச் செல்லும்போது பயணச் செலவிற்கும் பணம் கொடுத்து அனுப்புவார். அங்கிருந்த நாட்கள் மகிழ்ச்சியானவை. கவிதை எழுதுவதில் ஆர்வமும் வெறித்தனமும் அப்போதுதான் என் வசமானது. **"பாண்டியன் பரிசு"** காவியத்தின் கையெழுத்துப்படியை முழுவதுமாக நகல் எடுத்துக் கொடுத்துள்ளேன்" என்றார். இந்தக் கட்டத்தில்தான், **"கவிஞனின் காதல்"** எனும் குறுங்காப்பியத்தைத் தமிழ்ஒளி இயற்றியுள்ளார் என்பதை நாம் நினைவில் கொள்வோம்.

இங்கிருந்த நாட்களில், பாரதிதாசன் நூற்களை வெளியிட்டு வந்த பதிப்பகத்தாருடன் நட்பு ஏற்பட்டது. அதன் வழி "குயில்" ஏட்டின் பதிப்பாளராய் இருந்த **திருவாரூர் டி.என். ராமன்** நெருக்கமானார். அவரிடம், தாம் எழுதிய கவிதைகளைத் தொகுத்து இரண்டு தொகுதிகளாக வெளியிட்டு உதவுமாறு தமிழ்ஒளி கொடுத்தார்.

நாட்கள் மாதங்களாகியும் தொகுப்பு நூல் வெளிவரவில்லை. சென்னை வந்து திரு. ராமன் அவர்களை சந்தித்தார். அப்போது "குயில்" ஏட்டிற்கு இரு கவிதைகளை எழுதி வழங்கினார். அதே கால கட்டத்தில் முல்லை முத்தையா அவர்கள் வெளியிட்டு வந்த **"முல்லை"** ஏட்டிற்கும் கவிதைகளைக் கொடுத்துள்ளார். இந்தக் கட்டத்திலும் யாரிடத்தும் மாத ஊதியத்திற்கு அவர் பணிபுரியவில்லை. இது உண்மை.

தொகுப்பு நூல் வெளிவரும் என ஆவலுடன் இருந்த தமிழ் ஒளிக்கு, "கவிதைத் தொகுதிகள் தொலைந்து போயின" என்ற பதிலை நயமாகச் சொல்லிவிட்டார் ராமன். தமிழ் ஒளி அதிர்ச்சிக்குள்ளானார். யாரிடம் முறையிடுவது எனப் புரியாமல் தவித்தார். அந்தச் சந்தர்ப்பத்தில் "குயில்" ஏடு தொடர்பாகப் பாரதிதாசனார்க்கும், திரு. ராமனுக்கும் இடையே பிரச்சினைகள் உருவாகியிருந்தன. தமிழ்ஒளி புதுவை திரும்பினார்.

அப்போது அவருக்கு வயது இருபத்து ஒன்று. அந்த இளம் வயதில் தகுதிமிக்க ஒரு கவிஞனாக அவர் தலை நிமிர்வதை யாரோ விரும்பவில்லை போலும்; அதனால்தான் கவிதைத் தொகுதிகளைத் தொலைத்திருக்கிறார்கள் அல்லது தொலைந்து போனதாகச் சொல்லி யிருக்கிறார்கள் எனவும் ஐயுற்றார்.

எது, எப்படியாயினும், தனக்குள்ள படைப்பாற்றலை யாராலும் அழிக்க முடியாதென உறுதிபட நம்பினார். உள்ளத்தில் ஊற்றெடுக்கும் கவிப் பெருக்கை அணை போட்டா தடுக்க முடியும்? வீறுடன் எழுத முற்பட்டார். வாழ்ந்த சூழலையே கதைக் களமாக்கி, கற்பனை வளத்துடன் ஒரு குறுங்காவியத்தைப் படைத்தார். இருநூற்று நான்கு எண்சீர் விருத்தங்களாலான **"நிலைபெற்ற சிலை"** பொன்னெனப் பொலிந்தது.

காவியத்தின் கையெழுத்துப் பிரதியுடன் மீண்டும் சென்னை வந்தார் கவிஞர். இயக்கத் தோழராக அறிமுகமாகியிருந்த பேராசிரியர் க. அன்பழகன் அவர்களைச் சந்தித்து காவியத்தைப் படிக்கக் கொடுத்தார். அவரும் படித்துப் பாராட்டுத் தெரிவித்தார். அவர்

நடத்திவந்த "புது வாழ்வு" ஏட்டிற்கும் இரண்டு கவிதைகளைக் கவிஞர் வழங்கினார். பின்னர், "தமிழ் முரசு" ஏட்டினை வெளியிட்டு வந்த தோழர் ஊ. கோவிந்தன் அவர்களுடன் தொடர்பு கொண்டு தோழமை பெற்றார். அரசியல் ரீதியான உணர்ச்சிமிக்க இரண்டு கவிதைகளை எழுதித் தமிழ்முரசு ஏட்டில் வெளிவரச் செய்தார். அந்நிலையில்-

"நிலைபெற்ற சிலை" குறுங்காவியத்தை நூல் வடிவில் தோழர் ஊ. கோவிந்தன் அவர்களே வெளியிட முன்வந்தார். அதனைத் தொடர்ந்து, "கவிஞனின் காதல்" - "வீராயி" என இரு குறுங் காப்பியங்களும் வெளிவந்தன.

ஒரே ஆண்டில் மூன்று குறுங்காவியங்களை வெளிப்படுத்திய பெருமைக்குரிய கவிஞராகத் தமிழ்ஒளி, இலக்கிய வட்டத்தில் பாராட்டப் பெற்றார்.

# 4. கம்யூனிஸ்ட் கட்சியில் காலூன்றினார் கவிஞர்

நாடு சுதந்திரம் அடைந்த (1947) போது சென்னை நகரத்தின் பொலிவு எவ்வாறிருந்ததென்பது நேரில் பார்த்தவர்களுக்குத் தெரியும். இப்போது **வடசென்னை** என்று பேசப்படும் பகுதிகளே, அப்போது சென்னை நகரமாக விளங்கியது.

துறைமுகம் தொடங்கி யானைக்கவுனி வரை வர்த்தகம் வியாபித் திருந்த அளவுக்கு, தொழிலாளர் வர்க்கமும் பெருகியிருந்தது. அதே போன்று சூளையிலிருந்து பெரம்பூர் வரை தொழிலாளர் குடியிருப்புக்களும் வியாபித்திருந்தன. இங்கே ஏழைகளின் வாகனமாம் "ட்ராம் வண்டி" இரைச்சலிட்டபடியே எப்போதும் ஓடிக்கொண்டிருக்கும். எங்கு நோக்கினும் செங்கொடிகளே பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருக்கும்.

தொழிற்சங்கங்களை நடத்துவோர் யாராயினும், **கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட், காங்கிரஸ்** என எந்தக் கட்சியினராயினும், அவர்கள் பறக்க விடும் கொடி செந்நிறமாகத்தான் காட்சியளிக்கும். அவற்றின் பெயர்ப்பலகைகளும் செந்நிறமே. ஏழைத் தொழிலாளர்கள் கோரிக்கை களை முன் வைத்து ஊர்வலம் நடத்தும் போதும் அவர்கள் ஏந்திச் செல்லும் பதாகைகளும் செந்நிறமாகவே பொலிவு பெறும்.

அந்நாளில் பணப் புழக்கம் அதிகமில்லை. உழைக்கும் தொழிலாளர் எண்ணிக்கையில், ஒரு ரூபாய்க்கு மேல் ஊதியம் பெறுவோர் எண்ணிக்கை சரிபாதியாகத்தான் இருக்கும். நாள் கூலி ஆறணா, எட்டணா, பன்னிரண்டணா என அணா கணக்கில் ஊதியம் பெறுபவரே அதிகம். அவர்களுக்கும் வேலை உத்தரவாதம் இருக்க வில்லை. பற்றாக்குறை வாழ்க்கையே நிரந்தரமானது. இங்கே, "கூலி, கூலி" எனக் கூவித் திரியும் ஆண் - பெண்- சிறுவர் உட்பட வீதியில் அலைவோரைக் கண்கூடாகக் காணலாம்.

இந்த ஏழை மக்களின் வசிப்பிடங்கள், பெரும்பாலும் நடை பாதைகளாகவேயிருந்தன. ஓட்டைத்தகரங்களும் ஒடிந்த கொம்புகளும், இற்றுப்போன படுதா துணிகளும் இணைந்த குடில்களே அவை. அவர்களிடையே பசியும் பட்டினியும் ஒருபுறம் வருத்த, சம்பாத்யத்தைக் குடித்துவிட்டுப் பெண்டு பிள்ளைகளை அடித்துத் துன்புறுத்தும் அட்டூழியம் வீதியில் நடப்போரை வேடிக்கை பார்க்க வைக்கும்.

வெள்ளைக்காரன் விட்டுச் சென்ற மிச்சம் சொச்சம் போல், உடுத்த ஆடையின்றி, கந்தல் துணிகளால் மேனியை மூடிக்கொண்டு, கன்னிப் பெண்கள் நடமாடுவதைக் காண நெஞ்சு வெடிக்கும்.

இப்படிப்பட்ட அவலங்கள் புதுவையிலும் உண்டு. ஆயினும், கவிஞரின் பார்வையில் சென்னையில் காணப்படும் துயர நிலையே வெங்கொடுமையாகத் தோன்றின.

அதுநாள் வரை ஆரிய, திராவிடப் பிரச்சினைகளில் தன்னுடைய கவனத்தை ஆழப்பதித்திருந்த தமிழ் ஒளி, இப்போது, நேரில் கண்ட நெஞ்சை உறுத்திய ஏழ்மைக் கொடுமைகள் பற்றி எண்ணினார்.

சமத்துவம், சகோதரத்துவம், பொதுவுடைமை பற்றி எல்லாக் கட்சிகளுமே பேசி வருகின்றன. ஆனால், அவலம் தோய்ந்த இந்த ஏழைமக்களின் நலன் காக்க குரல் கொடுப்போர் யார்? போராடுவோர் யார்?

அடிப்படைக் கொள்கையில் கழகத்திற்கும், கம்யூனிஸ்ட் கட்சிக்கும் வேறுபாடு அதிகம் இல்லையென்பது மெய்யாக இருக்கலாம்; நடைமுறையில், உழைக்கும் மக்களின் உரிமைக்காகப் போராடுவது யார்?

சுதந்திரத்தின் சின்னமாக மூவர்ணக்கொடி பறக்கலாம். உழைக்கும் மக்களின் சின்னமாக செங்கொடியல்லவா பறக்கிறது?

உணர்ச்சி பூர்வமாக மட்டுமன்றி, அறிவு பூர்வமாகவும் நாட்டு நடப்புக்களை ஆய்ந்து நோக்கினார் தமிழ் ஒளி. செங்கொடியில் பொதிந்துள்ள **"சுத்தி அரிவாள்"** சின்னமே, உழைக்கும் வர்க்கத்தின் உண்மையான பாதுகாப்புச் சின்னம் என்ற முடிவிற்கு வந்தார். 1947 ஆகஸ்டு திங்களில் ஒருநாள், **"ஜனசக்தி"** அலுவலகம் சென்றார். அதன் ஆசிரியரும், கம்யூனிஸ்ட் கட்சித் தலைவருமான மதிப்புமிக்கத் தோழர் ப. **ஜீவானந்தம் அவர்களைச் சந்தித்தார்.** தான் ஒரு கவிஞன் என்பதை உணர்த்தி, கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்த்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். தோழர் ஜீவா அவர்களும், தமிழ் ஒளியின் புரட்சிகரமான கவிதைகளைப் படித்திருந்த நினைவோடு அவரை அரவணைத்துக் கொண்டார்கள்.

அன்று தொட்டு, "ஜனசக்தி" ஏட்டில், தமிழ்ஒளியின் கவிதைகள் பிரகாசமாக வெளிவந்தன. தமிழகம் அறியப் பொதுவுடைமைக் கட்சிக் கவிஞரானார் தமிழ் ஒளி.

# 5. நெருப்பில் பூத்த செம்மலர்கள்

***1948ம்*** ஆண்டு இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, ஒரு மாபெரும் விபத்தினை எதிர்கொண்டதை நாடு அறியும். வெள்ளைக்காரனிடமிருந்த ஆட்சியுரிமையைச் "சுதந்திரம்" என்ற பேரால் இந்திய முதலாளி வர்க்கம் கைப்பற்றியுள்ளது என அறிவித்து, அதனை மீட்டெடுக்க தொழிலாளி வர்க்கச் சார்பில் கம்யூனிஸ்ட் கட்சி களம் இறங்கியதுதான் அந்த விபத்து.

அதையொட்டி, நாடு முழுவதும் கொந்தளிப்பான நிலை உருவானதும், ஆகஸ்டு (1942) புரட்சியை நினைவூட்டும் நிகழ்ச்சிகள் பரவலாக நடைபெற்றதும் உண்மை.

இந்திய அரசு கம்யூனிஸ்ட் கட்சிக்குத் தடைவிதித்துத் தலைவர்களைக் கைது செய்தது. கட்சி அலுவலகங்கள், தொழிற் சங்க அலுவலகங்கள் அனைத்தும் *சீல்* வைக்கப்பட்டன. பத்திரிகைகள் தடைசெய்யப்பெற்று, எழுத்துச் சுதந்திரம் பேச்சு சுதந்திரம் முழுவதுமாக முடக்கப்பட்டன. செங்கொடியை உயர்த்திப் பிடிக்க யாரும் முன்வர முடியாத அளவுக்கு மக்கள் அச்சுறுத்தப்பட்டனர். இருட்டிலே நின்று வான் நோக்கிய நிலை. நம்பிக்கையூட்டும் நட்சத்திரங்கள் இங்குமங்கும் தென்பட்டன.

தலைமறைவு வாழ்க்கையை மேற்கொண்டிருந்த சில தலைவர்கள், வெளியில் இருந்த சட்டம் கண்டு கொள்ளாத அறிவு ஜீவிகளை அழைத்து ஏடு நடத்தப் பணித்தனர். விளைவாக, **"முன்னணி"** வார ஏடு முகிழ்த்தது. **கவிஞர் குயிலன்** ஆசிரியராகவும், **கவிஞர் தமிழ்ஒளி துணை ஆசிரியராகவும்** பொறுப்பேற்றனர். தோழர். **எஸ்.ஆர்.கே.** அவர்கள் தலைமறைவாக இருந்து கட்டுரைகளை வழங்கி வந்தார்.

அந்த ஏட்டின் வாயிலாக, தமிழக மக்களுக்கு, கம்யூனிஸ்ட் கட்சியின் செய்திகளையும், உலக அரங்கில், ஏகாதிபத்திய காலனி நாடுகளில் பாட்டாளி வர்க்கம் தொடுத்துள்ள போராட்ட நிகழ்வுகளையும் விரிவாக வெளிப்படுத்தினர்.

அந்த நாட்களில், இந்தப் போராட்ட நிகழ்வுகளைச் சிறுகதை - ஓரங்க நாடகம் - கவிதை எனப் பல வடிவங்களில் "முன்னணி"யில் எழுதி வந்தார் தமிழ்ஒளி. குறிப்பாக, சர்வதேச சிறப்புமிக்க **"மே தினம்"** பற்றியும், *சீன* மக்களின் செஞ்சேனை ஈட்டிய வெற்றிகள் குறித்தும் அவர் இயற்றிய கவிதைகள் வரலாற்றுச் சிறப்புமிக்கவை.

"முன்னணி ஏட்டின் தொடர் பணிகள் ஓராண்டுக் காலமே நிகழ்ந்தது. பின்னர் அரசின் கவனம் தடையுத்தரவாகப் பாய்ந்தது. அதுவரை. அந்த ஏட்டில் நம் கவிஞரின் படைப்புக்கள், தமிழ்ஒளி - விஜயரங்கம் - விஜயன் - சி.வி.ர. எனப் பல பெயர்களில் வெளி வந்துள்ளன.

படைப்பாளியான தமிழ்ஒளிக்கு. பத்திரிகை நடத்தும் அனுபவத்தைப் பயிற்றுவித்தது "முன்னணி". அவர் தமது சொந்தப் பொறுப்பில், **"ஜனயுகம்"** என்ற பெயரில் மார்க்சீய தத்துவ மாதப் பத்திரிகை ஒன்றினையும் வெளியிட்டார். அந்த ஏடு பற்றிய ஒரு விமர்சனம், 4-9-1948 "முன்னணி" ஏட்டில், கவிஞர் குயிலன் அவர்களால் எழுதப்பட்டுள்ளது. அதன் ஒரு பகுதி.

"மார்க்ஸிஸ்ட் தத்துவத்தை விளக்குவதற்கே அர்ப்பணித்துக் கொண்டிருக்கும் மாத சஞ்சிகை தமிழில் வெளிவருவது மிகவும் பொருத்தமானது. மகிழ்ச்சி தரும் செய்தி. அவசரத் தேவையைப் பூர்த்தி செய்யும் ஆயுதம்.

"சஞ்சிகையின் ஆசிரியர் விஜயரங்கத்தை நாம் பாராட்டுகிறோம். இத்தகைய இதழ்களை தொடர்ச்சியாக அளிப்பாரென்று நாம் நிச்சயமாக நம்புகிறோம்."

இடர்ப்பாடு மிகுந்த காலகட்டத்தில், கம்யூனிஸ்ட் கட்சியின் இலட்சியத்தைப் பரப்புவதற்குத் தமிழ்ஒளி செலுத்தியுள்ள பங்களிப்பு எத்தகையது என்பதை இந்தத் தலைமுறையினர் அறிந்து கொள்ள இது உதவும் என எதிர்பார்க்கிறோம்.

சுதந்திரப் போராட்டக் காலத்திலும் யாரெல்லாமோ இலட்சிய ஏடுகளை வெளியிட்டுள்ளனர். எப்படியெல்லாமோ பொருள் திரட்டியுள்ளனர் என்கிற சேதிகளை நாம் அறிவோம். இங்கே, "ஜனயுகம்" ஏட்டினை நடத்த நம் கவிஞர் யாரிடத்தும் நிதி கோரவில்லை! புதுவையில் தமக்குச் சொந்தமாக இருந்த தென்னந்தோப்பினை விற்று "முதல்" சேர்க்க எண்ணினார். அதன் பொருட்டுப் புதுவையும் சென்றார். அங்கே, அவருடைய தந்தையார் தென்னந்தோப்பை "போகியத்திற்கு" விட்டிருப்பதை அறிந்து ஏமாற்றத்துடன் சென்னை திரும்பினார். ஏட்டுப்பணி தொடராமல் நின்றுவிட்டது.

தமிழ்ஒளி தனித்து நின்றார். சோஷலிஸ்ட் கட்சித் **தோழர் எஸ். சங்கரன்** அவர்கள் அன்புக் கரம் நீட்டி அழைத்தார். அவர் நடத்தி வந்த "அலை ஓசை"வார ஏட்டில் தமிழ் ஒளி எழுதத் தொடங்கினார்.

அப்போது "முன்னணி"யில் தமிழ்ஒளி எழுதிய சிறுகதைகளைத் தொகுத்து **"சாக்கடைச் சமுதாயம்"** நூலை திரு. சங்கரன் வெளியிட்டு உதவினார். அடுத்து **"மே தினமே நீ வருக!"** கவிதை நூலினையும் அவரே வெளியிட்டார்.

1954ல் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை மாவட்டக் கிளையில், ஏதோ கருத்து மோதல்கள் நிகழ்ந்து, தோழர் எஸ். ராமகிருஷ்ணன் அவர்களுடன், தமிழ்ஒளியும் வேறு சில தோழர்களும் கட்சியை விட்டு வெளியேறியதாக, என் நண்பர்கள் வாயிலாகத் தெரிந்து கொள்ள முடிந்தது.

இதன் பின்னர், கட்சி வேறுபாடு கருதாமல் பல நண்பர்களுட தமிழ்ஒளி தொடர்பு கொண்டார். பல ஏடுகளிலும் அவருடைய கவிதைகள் வெளிவரத் தொடங்கின. அப்போதும், கம்யூனிஸ்ட் சித்தாந்தத்திற்கு எதிராக அவருடைய பேனா நகர்ந்ததில்லை. இது உறுதியான உண்மை.

# 6. "மேதினம்" பாடிய மேதகு கவிஞர்

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் மாணவர் என்ற முறையில், ஆரிய திராவிடப் பிரச்சினைகள் குறித்துக் கவிதைகள் படைத்ததும்; அவை கழக ஏடுகளில் வெளியாயின என்பதும் உண்மை என்றாலும், அவரைக் கழகம் சார்ந்த கவிஞர் என்று யாரும் குறிப்பிடுவதில்லை. **"தமிழ்ஒளி"** என்றால் **கம்யூனிஸ்ட் கவிஞர்** என்பதே ஆழப் பதிந்த மெய்ப்பாடாக இருந்து வந்தது.

1947-48களில் மரபு சார்ந்த தமிழ்க் கவிதைகள் மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்றிருந்ததை யாவரும் அறிவர். அப்போது வெளியான தமிழ்ஒளியின் மூன்று குறுங்காவியங்களும், "ஜனசக்தி" - "முன்னணி" ஏடுகளில் வெளிவந்த புரட்சிகரமான சிந்தனைகளைத் தூண்டும் கவிதைகளுமே அவரை, கம்யூனிஸ்ட் கவிஞராக இனம்காட்டின. இந்த ஒப்புதல் இன்னமும் நிலைத்த உண்மையாக நிலவுவதைத் தமிழ் உலகு அறியும்.

எனவே, தமிழ்க் கவிதை இலக்கியத்தில் கம்யூனிட்டுகளின் பங்களிப்பு என்று ஏதேனும் சொல்ல வேண்டுமானால், "தமிழ் ஒளி"யின் கவிதைகளே முன்னெழுந்து நிற்கும் வலிமை படைத்தவை. அதற்கு இணையான கவிதைப் படைப்புகளை கூறும் வாய்ப்பு அங்கில்லை.

இங்கே ஒன்றை நாம் தெளிவுபடத் தெரிந்து கொள்ள வேண்டும். **மகாகவி பாரதியார் தொழிலாளர் மேன்மையைப் பாடியவர்; புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார், தொழிலாளர் உரிமைகளைப் பாடியவர்; கவிஞர் தமிழ் ஒளி மட்டுமே தொழிலாளர் போராட்டங் களைப் பாடிய களப்போர் கவிஞராவார்.** இந்த உண்மை வரலாறு பூர்வமானது.

தமிழ் ஒளி மறைந்து பல ஆண்டுகளின் பின், இருவேறு சந்தர்ப்பங்களில், நான் சந்தித்த அறிஞர் பெருமக்கள் சொன்ன கருத்துக்களை உங்கள் முன் வைக்கிறேன்.

உலகத் தொழிலாளர் வர்க்கத்தின் மாபெரும் வெற்றி விழாவாகக் கொண்டாடப் பெறும், "மேதின விழா" பற்றித் தமிழில் கவிதை இலக்கியம் படைத்த பெருமை, தமிழ் ஒளிக்கே உரிய தனிப் பெருமையாகும். இதுநாள் வரை, இதற்கு ஒப்பான ஒருகவிதை யாராலும் எழுதப்படவில்லை. இது குறித்து, மார்க்சீய அறிஞரும், "ஜனசக்தி" ஆசிரியருமான தோழர் ஆர்.கே.கண்ணன் அவர்கள்.

"நானறிந்த வரை, இந்திய மொழிகளில் மேதினம் பற்றி இப்படியொரு கவிதை வெளிவந்ததில்லை. தமிழ் ஒளியின் இந்தக் கவிதை ஒரு பொக்கிஷம்" என்றே கூறினார்கள்.

சென்னை பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறைத் தலைவராய் விளங்கிய **பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி** அவர்கள், தன்னை சந்திக்க வருமாறு கடிதம் எழுதியிருந்தார்கள். நான் சென்ற போது அவர் வீட்டில் இல்லை. நான் வெளியிட்ட தமிழ்ஒளியின் படைப்புக்களை கொடுத்து விட்டு வந்தேன்.

மீண்டும் ஒரு கடிதம் மருத்துவமனை முகவரியுடன் வந்தது. சென்று பார்த்தேன். நான் கொடுத்திருந்த நூற்களைப் படித்ததாகக் கூறினார். மேலும், அவர்;

"அகில இந்திய அளவில் ஓர் ஆய்வரங்கம் நடக்கவுள்ளது. அதில், விடுதலைக்குப் பின்னர் எழுந்த சமூக மாறுதல்களைப் பிரதிபலிக்கும் இலக்கியங்கள், படைப்பாளிகள் பற்றித் தமிழ் இலக்கியம் சார்ந்து நான் பேச உள்ளேன். தமிழ்ஒளியின் "நெய்வேலி நாம் பெற்ற பேறு" என்ற கவிதை என்னைக் கவர்ந்தது. அரசியல் ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் சமூக மாறுதல்கள் குறித்த அவருடைய சிந்தனை உயர்வானது. சீனப்புரட்சி குறித்த கவிதைகள் அற்புதம். அவரைப் பற்றியே ஆய்வரங்கில் பேச முடிவு செய்துள்ளேன். வேண்டிய விவரங்களை உங்களிடம் கேட்டுப்பெற விரும்பினேன்" என்றார்.

வெகு நேரம் பேசினோம். நான் சொன்ன செய்திகளை மனதில் பதிவு செய்து கொண்டவர், கவிஞரைப்பற்றித் தமிழ் அறிஞர்கள் - கவிஞர்கள் கூறியுள்ள கருத்துக்களை திரட்டித்தர வேண்டுமெனவும் கேட்டார். இயன்ற உதவிகளைச் செய்வதாகக் கூறி விடை பெற்றேன்.

தமிழ் ஒளியை அறிந்து கொள்ளத் தமிழகமே அக்கறை கொள்ளாத நிலையில், அகில இந்திய அளவிலான ஓர் ஆய்வரங்கில், தமிழ் ஒளியின் படைப்புக்கள் பெருமைபடுத்தவுள்ளதை எண்ணி நான் மகிழ்ச்சியடைந்தேன். சில தினங்களின் பின், இரண்டாம் முறையாக டாக்டர் சஞ்சீவி அவர்களைச் சந்தித்தபோது அவர் சோர்வுடன் காணப்பட்டார். எனினும் என்னிடம் சொல்ல நினைத்ததைத் தெளிவுபடச் சொன்னார்.

"இந்த அளவுக்குப் படைப்புகள் இருந்தும், கட்சிப் பின்னணி இருந்தும், அவர் காலத்தால் நிழலடிக்கப்பட்டார் எனக் கூறுவது சரியா?"

இந்தக் கேள்விக்கு பதில் கூறுவது ஒரு குற்றச் சாட்டாகக் கருதப் படுமே, என்ற மனத்தவிப்பும் எனக்கு ஏற்பட்டது. இங்கே தயக்கத்தை விட்டு, உண்மையை பேசுவதுதான் உகந்தது என்ற முடிவிற்கு வந்தேன்.

"அய்யா, நாம் நிலப்பிரபுத்துவ சமுதாயத்தில் அல்லவா வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இந்த குணதோஷம் யாரை விட்டு வைத்தது. பாரதியும், பாரதிதாசனும் காலத்தால் நிழலடிக்கப்பட்டவர்கள் தாமே... நிழலடிப்பதே நியதியாகிவிட்ட தமிழகத்தில், தமிழ்ஒளி மட்டும் விதிவிலக்காக முடியுமா?"

"அப்படின்னா, இந்த நிழலடிப்புக்கு முற்போக்கு வாதிகளும் உடந்தையாயினர் என்று கூறலாமா?"

பேராசிரியரின் இந்தக் கருத்தை ஏற்பதா, மறுப்பதா எனப் புரியாமல் தயங்கினேன். இப்போதும் அந்தத் தயக்கமே என்னைக் கட்டுப்படுத்தியுள்ளது.

# 7. விதியோ? வீணையோ?

கவிஞர் தமிழ்ஒளி (1954) எங்கள் அறைக்கு வந்தபோது, "விதியோ? வீணையோ?" இசை நாடகத்தின் சில பகுதிகளை மட்டும் எழுதி வைத்திருந்தார். அது தவிர வேறு உடைமை ஏதும் அவர் கொண்டுவர வில்லை.

மறுநாள், காலைச் சிற்றுண்டி முடிந்ததும், அதைப் படித்துக் காட்டினார். கவிதைக் குரல் புதுப்பாணியில் ஒலித்தது. முன்பு படித்துணர்ந்த கவிதைகளினின்றும் வேறுபட்டு ஒலித்தது. முற்றுப் பெறாத அந்தக் காவியத்தை இங்கிருந்த படியே எழுதி முடிப்பார் என எதிர்பார்த்தோம்.

கொஞ்ச நேரத்தில், "ஆ....... ஊ" என்ற அதட்டல் குரலுடன் ஒருவர் அறைக்குள் நுழைந்தார். குரலைப்போன்றே அவரது உருவமும் தடித்திருந்தது. அவர் கவிஞரிடம் பயிற்சி பெற்று வந்த எழுத்தாளர் எனவும் பிறகு தெரிந்து கொண்டோம். வந்தவர், குடத்தில் இருந்த நீரைக் குடித்துவிட்டு, "கொஞ்சம் அமைதியா இருங்க, ஒரு கதை சொல்லுகிறேன்" என்றார். அவர் சொன்ன கதை புதுமைப் பித்தன் கதை.

எனக்கு வியப்பாக இருந்தது. கவிதையை மனனம் செய்து ஒப்புவிக்கும் வழக்கம் எனக்கும் உண்டு. ஆனால், இருபது பக்கக் கதையை ஒப்புவிப்பது சிரமமாகவே தெரிந்தது. கதையைச் சொல்லி முடித்த அந்த வளரும் எழுத்தாளர், பேசத் தொடங்கினார். என்ன பேச்சு? வெட்டிப் பேச்சு, வேண்டாத விமர்சனங்கள் ஊர் வம்பு. இத்யாதி...

சிறிது நேரத்தில் கவிஞரும் அவரும் வெளியே சென்றனர். நண்பர் **சுப்பிரமணியமும்** நானும் இதுபற்றிப் பேசினோம். கவிஞர், கதை கேட்பாரா, கவிதை எழுதுவாரா? இங்கு நடப்பதைப் பார்த்தால் அந்த வளரும் எழுத்தாளர் கவிஞரை எழுதவிட மாட்டார் என்றே கருதினோம்.

நாங்கள் எண்ணியது போலவே, அடுத்தடுத்த நாட்களும் அமைந்தன. தன்னை வளர்த்துக் கொள்ளுவதில் ஆர்வமாக இருந்த அந்த வளரும் எழுத்தாளர், கவிஞரை எழுத அனுமதிக்கவில்லை. எப்போதும் தனது ஐயப்பாடுகளுக்கு விளக்கம் கேட்டுப் பெறுவதிலேயே காலத்தைப் பயன்படுத்திக்கெண்டார். கவிஞரும் அவரை பக்குவப் படுத்துவதில் அதிக அக்கறை செலுத்தினார்.

இதனிடையே, நாங்கள் அறையில் இல்லாத நேரத்தில் ஒரு அசம்பாவிதம் நடந்தது. அது எங்கள் மனதைப் பாதித்தது. நண்பர் சுப்பிரமணியம் அறையைக் காலி செய்திட முடிவெடுத்தார். எனக்கும் அது சரி எனப்பட்டது.

நாங்கள் எடுத்த முடிவுபற்றி அந்த வளரும் எழுத்தாளர் கவலைப்படவில்லை. கவிஞர் ஏமாற்றமடைந்தார். என்னிடம், "விதியோ? வீணையோ? எழுதி முடிக்கும் வரை உதவுங்கள்" எனக் கேட்டுக் கொண்டார். அவருக்காக வேறு இடத்தில் அறை எடுத்தேன். அப்போதும் நான் சொன்ன ஒரு வார்த்தை இதுதான்: "அய்யா, நாங்கள் செய்கிற உதவிகள் உங்கள் வளர்ச்சிக்குப் பயன்பட வேண்டும் என எதிர்பார்க்கிறோம். காலத்தை வீணடிப்பது நல்லதல்ல"

இடம் மாறிய சூழலில், சமைத்துப்போட ஒரு பணியாளரும் கிடைத்தார். வீட்டுச் சாப்பாட்டு மகிமையால் கவிஞரின் உடல் ஆரோக்கியம் மேம்பட்டது. அந்த வருஷம் பொங்கல் விழாவை நாங்கள் கொண்டாடினோம்.

கவிஞரும் காலத்தை பயன்படுத்திக் கொண்டு, இசை நாடகத்தை எழுதி முடித்தார். ஒரு பதிப்பாளரிடம் கொடுத்து முன் பணமும் பெற்றார். இதனை அடுத்து, காவியம் படைக்குமாறு கேட்டுக் கொண்டேன். அவரும் **கண்ணகி காப்பியம்** எழுதலாமென்றார். ஆனால் எழுத வில்லை. அதை எழுதுவதற்கும், அந்த வளரும் எழுத்தாளரே தடையாக இருந்தார். அவருடைய வருகையும் வம்புப் பேச்சும் கவிஞரைச் செயல்பட விடவில்லை.

ஒருநாள் நான் இல்லாத வேளையில் ஒரு அசம்பாவிதம் நிகழ்ந்தது. அதுபற்றி அந்த வளரும் எழுத்தாளரிடம் கேட்டபோது அவர் சொன்ன பதில் அருவருப்பைத் தந்தது. நான் அறைக்குச் செல்லுவதை நிறுத்திக் கொண்டேன். கவிஞரும் சில மாதங்களில் அறையை விட்டு வெளியேறி விட்டார்.

கவிஞருக்கும் எனக்கும் இடையே சரியாக ஓராண்டுகாலம் நிலவிய நட்புச் சூழல், அவருடைய படைப்புத் திறனைச் சீராக வெளிப்படுத்தப் பயன்படவில்லையே என்ற மனக்குறை என்னை வருத்தியது. சில மாதங்கள் அவர் இருப்பிடம் எது என்பது தெரியாமலே இருந்தேன்.

ஒரு பகற்பொழுதில், அதிர்ச்சிதரும் செய்தியுடன் ஓட்டல் தொழிலாளி ஒருவர் என் அங்காடிக்கு வந்தார். "கவிஞர், பாண்டி

பஜாரில் பைத்தியமாக அலைகிறார்" என்பதே அவர் சொன்ன செய்தி. நான் அதிர்ந்தேன். உடனடியாக அவரை மீட்க முடிவு செய்தேன்.

அமைந்தகரையில் கவிஞரை நன்கு அறிந்த ஒரு **கம்யூனிஸ்ட் தோழரை** துணைக்கு அழைத்துக் கொண்டு பாண்டிபஜாரில் கவிஞரைச் சந்தித்தேன். எப்படி? சித்தம் சிதைந்த திகம்பரச்சாமியாய் அவர் நடமாடிக் கொண்டிருந்தார். அவர் உச்சரித்துக் கொண்டிருந்த வார்த்தைகள்: "திருமணம் இன்றேல் மரணம், திருமணம் இன்றேல் மரணம்."

"இதற்குமேல் வேறு எதுவும் பேசவில்லை. யாரையும் தொல்லைப்படுத்தவில்லை" என்று அந்த ஓட்டல் தொழிலாளியும் சொன்னார். ஓரிடத்தில் அவரைப் பிடித்து நிறுத்தினோம். உடன் கொண்டு சென்ற உடைகளை அணியச் செய்து தோற்றத்தை மாற்றினோம். பிறகு ஆட்டோவில் ஏற்றிக்கொண்டு திருவொற்றியூர் சென்றோம்.

அங்கே, **தோழர் தியாகராசன் (தியாகு)** அவர்களைச் சந்தித்து நிலைமையை விளக்கினோம். அவரும் கவிஞரைப் பார்த்து வருந்தினார். "கவலைப் படாதீர்கள் நான் கவனித்துக் கொள்கிறேன்" என உறுதி மொழிந்தார்.

இருதினங்களின் பின் நான் திருவொற்றியூர் சென்றேன். அங்கே, **"புதுமைக் கலா மன்றத்தில்"** கவிஞர் தங்கியிருப்பதைக் கண்டித்து, ஒரு குழுவினர் அவரை வெளியேற்றுமாறு வற்புறுத்தினர். அந்த மோதலைக் கண்கூடாகக் கவனித்தேன். தாம்பரத்திலிருந்து வந்த சில தோழர்கள் "அவன் கட்சி விரோதி. இங்கேயிருக்க அனுமதிக்கக் கூடாது" என வலியுறுத்தினார்.

இந்த நிலைக்கு எது காரணமென அறிய முயன்றபோது, காதல் விவகாரம் பற்றிய செய்தி காதில் விழுந்தது. கவிஞர் உணர்ச்சி மயமானவர். காதலிக்க உணர்ச்சி போதும். ஆனால், வாழ்க்கைக்கு அது போதுமானதல்லவே. நாளையபற்றிய அக்கறை கொள்ள முடியாத கவிஞரால், ஒரு பெண்ணுக்கு நிரந்தர வாழ்வைத் தர முடியுமா? கேள்வியை நாம் தான் கேட்டுக் கொள்ள முடியும். கவிஞருக்கு இந்தக் கேள்வி உடன்பாடானதல்ல. அதனால் இந்த உண்மைகளை மனம் கொள்ளாமல், காதலியைத் தேடிச் சென்றுள்ளார். விளைவு தாக்குதலாய் முடிந்தது.

"அந்தக் காதலி, வேறொருவரைக் கடிமணம் செய்து கொண்ட உண்மையை அறியாதவராய் அங்கு சென்றதால்தான் தாக்குதலுக்கு

உள்ளானார்'' என்றும் தோழர் தியாகு சொன்ன செய்தி, கேட்க வருத்தமாயிருந்தது.

"தவறு நடந்து விட்டது. தண்டித்து விட்டீர்கள். இதுபோதும். இனி, மனிதாபிமானத்துடன் அவரைக் குணப்படுத்துவோம் இந்த மன்றம் எல்லோர்க்கும் பொதுவானது. கவிஞர் இங்கேயிருப்பது தவறல்ல"- எனத் தோழர் தியாகு எடுத்துச் சொன்னார்.

பெரும்பாலான உறுப்பினர்கள் ஒப்புதல் கிடைக்காததால், கவிஞரை உடன் அழைத்துக் கொண்டு, தன் வீட்டிற்குப் போனார் தியாகு.

இங்கே, தோழர் தியாகு அவர்களைப் பற்றிச் சில சொல்ல வேண்டும். பெயருக்கு ஏற்ப அவர் தியாகி. தொண்டுள்ளம் படைத்தவர். திருவொற்றியூரில் கம்யூனிஸ்ட் கட்சி வேரூன்ற அடித்தளமிட்டவர். பிழைப்புக்கு அல்லாடிய பல தோழர்களுக்கு புதுவாழ்வு அமைத்துக் கொடுத்தவர். தனக்கென குடும்பம் அமைத்துக் கொள்ளாதவர்.

கவிஞரின் உடல் நலம் குறுகிய காலத்தில் தேறிவிட்டது. மனத்தளவில் ஒரு தடுமாற்றமும், பய உணர்வும் அவரைவிட்டு அகலவில்லை யென்றும் நண்பர்கள் கூறினர். அது ஒரு பெரிய விஷயமல்ல, எல்லாரும் சகஜமாக அவருடன் பழகினால் போதும். தெளிவும் நம்பிக்கையும் வந்துவிடும் எனத் தியாகு கூறினார். கொஞ்ச நாட்களின் பின், யாரிடத்தும் சொல்லிக் கொள்ளாமல் கவிஞர் வெளியேறி விட்டதாகத் திருவொற்றியூரிலிருந்து தகவல் கிடைத்தது.

சென்னை வந்த கவிஞர் துறைமுகத் தொழிலாளர் சங்கத்திலும், வேறு சில தொழிற்சங்க அலுவலகங்களிலும் சிறிது காலம் தங்கியிருந்ததாகவும் கேள்விப்பட்டேன். குறிப்பிட்ட இடம் எது என அறிய முடியாத நிலையில் தொடர்பு இல்லாமல் போயிற்று. சில திங்களுக்குப் பிறகு அமைந்தகரைக்கு வருகை புரிந்தார் கவிஞர்.

# 8. வீணையின் நாதம் மீண்டும் ஒலித்தது

புயலில் சிக்கிய பூங்கொடி மீண்டும். பூத்துக் குலுங்கியது. மேகத் திரையால் மூடப்பட்ட முழுமதி மீண்டும் வெளிப்பட்டு ஒளி வீசியது. எல்லாமே முடிந்து விட்டது என எண்ணிய கன்மனத்தார் முன் கவிஞர் மீண்டும் தலை நிமிர்ந்து நடமாடினார்.

பல மாதங்கள் இடைவெளிக்குப் பின்னர், ஒருநாள் இரவு ஏழு மணி அளவில் என்னைக் காண வந்தார் கவிஞர். எதிர் பார்த்ததைவிட தெளிவாகவே காணப்பட்டார். அங்காடிக்குள் நுழைந்த அவரை அன்புடன் வரவேற்றேன். அவர் பேசத் தொடங்கினார்.

"நான் செத்துவிட்டதாகச் செய்தி பரப்பினார்களே உங்களுக்குத் தெரியுமா?"

"கேள்விப்பட்டேன்"

"நம்பினீர்களா?"

"இல்லை"

"அவன்தான், அந்த **முத்திரைக் கதை எழுத்தாளன்தான்** நான் செத்து விட்டதாகச் செய்தி பரப்பியவன்."

உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார் கவிஞர். நானும் பதில் கூறாமல் அமைதியாக இருந்தேன்.

"நான், சாகவில்லை சார், முன்னைவிட பன்மடங்கு ஆற்றலுடன் இருக்கிறேன். மாதவியின் வரலாற்றை காவியமாகப் பாடப் போகிறேன் - நீங்கள்தான் ஆதரவு தரவேண்டும்".

"மகிழ்ச்சி அய்யா, எழுதுங்கள். வேண்டிய உதவிகளைச் செய்கிறேன்."

என்னுடைய ஆறுதலான பேச்சை கேட்டதும்; "எழுதுவதற்கு ஏற்ற இடம் இல்லை. அதுதான் பிரச்சினை. இடம் அமைத்துக் கொடுத்தால் வேலையைத் தொடங்குவேன்" என்றார் கவிஞர்.

"இடம்" என்றதுமே பழைய அனுபவங்கள் நினைவுக்கு வந்தன. "ஓ... அது சாத்தியமில்லை அய்யா, மற்ற உதவிகளைச் செய்கிறேன். நீங்கள் எங்கிருந்தாவது எழுதுங்கள்".

"சார், சார், பழசை மறந்துடுங்க. இனி அப்படி எதுவும் நடக்காது. என்னைத் தேடி யாரும் வரமாட்டார்கள். நானும் எங்கும் போகமாட்டேன்."

"மன்னிக்கணும் அய்யா. உங்களுக்காக அறை எடுக்கும் நிலையில் நான் இல்லை. இயன்ற அளவு பண உதவிகளை மட்டுமே என்னால் செய்ய முடியும்."

பேச்சைத் தொடராமல், நாளை வருவதாகச் சொல்லிப் போனார்.

கவிஞரைப் பற்றிய நினைவுகள் மனதைக் கிளறின. குடும்பம் சாராத தனி மனித வாழ்க்கை துன்பமானது. குடும்பத்தில் தொல்லைகள் ஏற்பட்டாலும் மனதில் பற்று பாசம் தெம்பு தைரியம் தோன்ற குடும்பச் சூழல் இன்றியமையாதது என்பதை நான் அறிவேன். அந்த வாய்ப்பைப் பெற முடியாத கவிஞர் துர்பாக்கியசாலி என்றே கருதினேன்.

மறுநாள் மாலை வந்த கவிஞர், என்னை உடன் அழைத்துச் சென்று அவர் தங்கியிருந்த இடத்தைக் காட்டினார். அந்த இடம் எழுதுவதற்கு ஏற்றதல்லவென அவர் சொன்னதை நானும் ஏற்றுக்கொண்டேன். பிறகு இடம் பற்றிப் பேசினோம். நான் செயலாளராக இருந்த சமூக நலச் சங்கத்தில் தங்கமுடியுமா, என்றார். திருவொற்றியூரில் எழுந்த தகராறு இங்கும் எழலாமென்றேன். பிறகு என் அங்காடியில் தங்கியிருந்தபடியே இரவு நேரங்களில் எழுத்துப் பணியைச் செய்வதாகச் சொன்னார். மறுக்கமுடியாமல் நானும் ஒப்புக் கொண்டேன்.

மறுநாளே இங்கு வந்து விட்டார் கவிஞர். அவருக்கான உணவு விடுதி. ஓய்வு கொள்ள ஒரு இடம். படிக்க விரும்பிய நூல்கள், எழுது பொருள்கள் என அடிப்படை வசதிகளை என் சக்திக்கேற்ப செய்து கொடுத்தேன். அவரும் மனதைத் திடப்படுத்திக் கொண்டு எழுத்துப் பணியில் ஈடுபட்டார்.

பகற்பொழுதில் அவர் தங்கியிருக்க நான் ஏற்பாடு செய்து கொடுத்த இடத்தை அவர் பயன்படுத்திக் கொள்ளவில்லை. கவிஞர் படிப்பதை விட சிந்திப்பதில் அதிக கவனம் செலுத்துவார். அந்நாளில், ஷெனாய் நகருக்கு அப்பால் குடியிருப்புகள் இல்லை. வயல் வெளியும் வெற்றிடமும் தான் விசாலமாகத் தெரியும். அங்கே ஓரிடத்தை தேர்வு செய்தார் கவிஞர்.

புங்க மரங்கள் சூழ்ந்த கிணறு. அதை ஒட்டி நீர் இறைக்கும் மோட்டார் பொறுத்தப்பட்ட அறை. சிமெண்ட் தரை. அங்கே வெயிலை விலக்கியபடி குளிர்ச்சியான நிழல். மரக்கிளைகளில் அமர்ந்து இன்னோசை எழுப்பும் சிறு பறவைகளின் கூட்டம் தவிர ஆள் அரவமே அதிகம் இல்லாத இடம்.

கவிஞர் அங்கே நடமாடுவார். சிந்தனையில் மூழ்குவார். கண்ணயர்வார் விழித்தெழும் நேரம் மனம் கிளர்ச்சியுறும். சூழலை ரசிப்பார். மாலைப்பொழுதில், அந்திச் சூரியன் வானில் மறையும் அழகும், அணிவகுத்துச் செல்லும் பறவைகளின் ஒய்யாரமும், சிந்தையில் திரண்ட கற்பனை வடிவங்களும் கவிஞர் நெஞ்சில் கவிதையாய்க் கருக்கொள்ளும் இனிய சந்தங்களை வாய் முணு முணுக்கப் பெருமித உணர்வுடன் நடந்து வருவார்.

விடுதிக்குச் சென்று உணவை முடித்துக் கொண்டு சரியாக இரவு எட்டு மணி அளவில் என் அங்காடிக்குள் நுழைவார். இருக்கையில் அமர்ந்ததும், கை விரல்கள் மத்தளம் வாசிப்பது போல நர்த்தனமிடும் அவருடைய தவிப்பைப் புரிந்து கொண்டு அங்காடியை மூடிவிட்டு நான் வீட்டிற்குச் சென்று விடுவேன். அவரும் எழுதத் தொடங்குவார்.

நான் வீடு சென்று திரும்பியதும், அவருக்குக் காவலாக வெளியில் படுத்துக் கொள்ளுவேன். விடியல் வரை விளக்கு எரிந்து கொண்டிருக்கும். கவிஞர் எவ்வளவு நேரம் எழுதினார். எப்போது உறங்கினார் என்பதைத் தெரிந்து கொள்ள முடியாது. சரியாக எட்டு மணி அளவில் அவரை எழுப்பிவிட்டு, அங்காடியைத் திறந்து வைப்பேன்.

அன்பர்களே! இந்தச் சூழலில் தான் சரியாக ஓராண்டுக்காலம் கட்டுப்பட்டிருந்தார் கவிஞர். அப்போது உருவான மகத்தான படைப்புகள்: 1. **மாதவி காவியம்**, 2. **கண்ணப்பன் கிளிகள்**, 3. **புத்தர் காவியம்**, 4. **உயிர் ஒலி.**

தசரதன் சாப வரலாற்றை உணர்ச்சி பூர்வமாகக் கூறும் "உயிர் ஒலி" முற்றிலும் "கட்டளைக் கலித்துறைப்" பாக்களால் இயன்றவை. அதனைக் "கலைமகள்" ஏட்டில் தொடராக வெளியிட ஆசிரியர் கி.வா.ஜ. மறுத்து விட்டதால், ஒரு நாள் நான் இல்லாத சமயத்தில் "உயிர் ஒலி" பாடல்களைக் கிழித்தெறிந்து விட்டார் கவிஞர்.

"புத்தர் காவியம்" எழுத முற்பட்ட கவிஞர், "மாதவி காவியத்தை" வெளியிடப் பதிப்பகங்கள் முன் வராததால் மனச்சோர்வுற்று, "புத்தர் பிறந்தார்" என்ற அளவில் எழுதுவதை நிறுத்திக் கொண்டார்.

இந்தப் படைப்புகள் அனைத்தும் என்னுடைய அங்காடியில் இருந்தபடியே எழுதி முடித்ததால், இவற்றை "**அங்காடிக் காப்பியங்கள்**" என்பார் கவிஞர், நகைச்சுவையுடன்.

# 9. காவியப் படைப்பைக் காப்பாற்றினேன்

கவிஞர் நகைச்சுவையுடன் குறிப்பிட்டுச் சொன்ன அங்காடிக் காப்பியங்கள். இன்று அமர காவியங்களாகப் பாராட்டப்படுகின்றன. இந்த காவியங்கள் உருவான "களம்" பற்றிச் சில கூறுவேன்.

சென்னையில் தேசிய நெடுஞ்சாலைகளில் ஒன்று பூந்தமல்லி நெடுஞ்சாலை. அமைந்தகரை. "பஸ்" நிறுத்தம் எதிரில் அந்தச் சாலையின் மருங்கே என்னுடைய அங்காடி யிருந்து வந்தது.

அங்காடி என நான் குறிப்பிட்டுச் சொல்லுவது. பெரிய வணிக அங்காடியல்ல. சிறுதொழில் அங்காடிதான். இரண்டு பணியாளர் களை வைத்துக் கொண்டு நான் தொழில் நடத்தி வந்தேன். அப்போது நான் தனி மனிதன். குடும்பப் பொறுப்பு இல்லை. சமூக சேவையிலும், அரசியல் கட்சியிலும் தொடர்பு கொண்டிருந்தேன். என்னுடைய வருவாயில் என் தேவைக்குப் போக மிகுதியுள்ளதை மற்றவர்க்குக் கொடுத்து உதவுவது என் வழக்கம்.

தமிழ் ஆர்வம் காரணமாக, இலக்கிய அன்பர்கள் பலருடன் எனக்குத் தொடர்பிருந்தது. அவர்களில் சிலருடைய பணப் பற்றாக்குறையை நான் ஈடு செய்து வந்தேன். இப்படி உதவுவதில் மகிழ்ச்சி கொண்டேன். இந்த நிலையில், கவிஞர் தமிழ் ஒளி அவர்களும் **ஆசிரியர் விந்தன்** அவர்களும் என்னுடன் நெருக்கமாயிருந்தனர்.

கவிஞர் தமிழ் ஒளி தகுதிமிக்க கவிஞர். உரிய வசதிகளைச் செய்து கொடுத்தால் மாதம் ஒரு குறுங்காவியம் படைக்கும் ஆற்றல் உள்ளவர். அத்தகைய மாகவிஞன் கவிதைப் படைப்புகளை வெளியிட பதிப்பகங்கள் தயக்கம் காட்டிய சூழல் (1954) அப்போது நிலவியது.

ஒரு கவிஞன் வாழ்ந்ததற்கு அடையாளமே அவனுடைய காவியப் படைப்புகள் தாம் எனக் கருதியவர் தமிழ் ஒளி. தம்முடைய படைப்புகளை வெளியிட பதிப்பகங்கள் முன் வராத நிலை ஏமாற்றமும் வருத்தமும் அளித்தன. தமிழியக்கம் தோன்றிய காலகட்டத்தில், கவிதைப் படைப்புகள் பெருமளவில் வந்தன. இப்போது படைப்பு இலக்கியங்களுக்கு மாறாக "பற்று இலக்கியங்களை" வெளியிடுவதில் பதிப்பகங்கள் ஆர்வம் காட்டின இது ஏன், என்பதும் ஒரு புதிராகவே தோன்றியது.

உரையுடன் கூடிய பழந்தமிழ் நூற்களை படிப்பதன் மூலம், அந்த இலக்கியத்தின் முழுப் பயனையும் வாசகன் எய்த முடியும். தேர்ந்த சில பாடல்களுக்குச் சொல் நயம், பொருள் நயம் கூறும் நூற்களை படிப்பதனால் வாசகன் அடையும் பயன் முழுமையானதாக அமைவதில்லை. அப்படியுள்ள நிலையில் "பற்று இலக்கியங்கள்" புற்றீசலாய்க் கிளம்புவது அவருக்கு வருத்த மளித்தது.

ஒரு படைப்பாளி என்ற முறையில் மிகுந்த தன்னம்பிக்கையுடன் வாழ்ந்த கவிஞர் பெருமான், "மாதவி காவியம்" அச்சாகி வெளிவந்தால் தன் பெருமை துலங்கும். தொடர்ந்து காவியங்களை வெளியிட பதிப்பங்கள் முன்வரும் என மனப்பூர்வமாக நம்பினார் அந்த நம்பிக்கையுடன் பல பதிப்பகங்களின் வாயில்களை மிதித்துத் திரும்பினார். "தமிழ் இலக்கியக் காவலர்களாக, பெருமை பேசி வந்த பதிப்பாளர்கள் கூட" "மாதவி காவியத்தைப்," படித்துப் பாராட்டிய அளவில் ஒதுங்கிக் கொண்டனர்.

இறுதியாக ஒரு நண்பர், தாம் அச்சகம் நிறுவி, பதிப்பகம் தொடங்கப் போவதாகக் கூறினார். உங்களுடைய "மாதவி காவியமே" எங்கள் முதல் வெளியீடு என்றும் நம்பிக்கை யூட்டினார். அவர், கரந்தையில் மாணவ நண்பராக அறிமுகமானவர். அவருடைய வாக்கில் நம்பிக்கை வைத்துக் காவியத்தின் கையெழுத்துப் படியை அவரிடம் கொடுத்தார் கவிஞர்.

"அந்த நண்பர் நல்லவர், நிச்சயம் நூலை வெளியிடுவார். பதிப்புரிமைக்காக ஒரு பெருந்தொகையும் தருவதாக வாக்களித்துள்ளார். அந்தத் தொகை கிடைத்ததும் உங்களுக்குப் பாதிப் பணத்தைக் கொடுத்துவிட்டு, மிச்சப் பணத்துடன் நான் கேரளாவுக்குப் போகிறேன். அங்கே கட்சித் தோழர்கள் இருக்கிறார்கள் அவர்களோடு தங்கியிருந்து புதிய காவியம் ஒன்றை எழுதிக்கொண்டு சென்னை திரும்புவேன்" என்றார் கவிஞர்.

கேட்க இனிமையாய் இருந்தது புதிய காவியம் படைக்கும் எண்ணம் அவருக்கு உதயமாகியுள்ளது மகிழ்ச்சியளிக்கும் செய்தியல்லவா?

"அய்யா, எனக்குப் பணம் வேண்டாம். முழுவதையும் எடுத்துச் செல்லுங்கள். காவியம் எழுதி வந்தால் அதுவே எனக்கு மகிழ்ச்சி தரும்" நான் சொன்னதை மறுத்து, "சார், அப்படி சொல்லுவது சரியல்ல. நீங்கள் எனக்கு நிறைய செய்திருக்கிறீர்கள். கொஞ்சம் பணம் உங்களுக்குக் கொடுப்பதில் தவறில்லை" என்றார்.

"சரி அய்யா. முதலில் காவியம் அச்சாகி வரட்டும் பிறகு. பணம் பற்றிப் பேசுவோம்."

கவிஞரும் பெருத்த நம்பிக்கையுடன். அந்த நண்பரிடம் "மாதவி காவியத்தை"க் கொடுத்துவிட்டு வந்தார். நாட்கள் ஓடின. கவிஞரும் நடையாய் நடந்தார். அநத் நண்பர் அச்சகம் நிறுவினார். பிறகு பதிப்பகம் தொடங்குவதைக் கைவிட்டு. சினிமா பத்திரிகை ஒன்றை வெளியிட ஆவன செய்தார். கவிஞர் கேட்டபோது. "விரும்பினால் நீங்களும் பணியில் சேருங்கள். மாத ஊதியம் தருகிறேன்," என்றார். கவிஞருக்கு ஆத்திரம் பொங்கியது. அதை வெளிப்படுத்துவதால் ஆகப்போவது என்ன? கையெழுத்துப் படியைப் பெற்றுக் கொண்டு திரும்பி வந்தார். செய்தி கேட்டு நானும் வருத்தமடைந்தேன். உன்னதமான காவியப் படைப்பு இப்படி ஊர்வலம் வருகிறதே. முடிவு என்னவாகும்? கவிஞர் ஆத்திரப்பட்டுக் காவியத்தை அழித்து விட்டால். அது தமிழுக்கே அல்லவா இழப்பாகி விடும்? காவியத்தைப் பாதுகாப்பதே நல்லதாகப் பட்டது.

ஆசிரியர் விந்தன் அவர்களைச் சந்தித்துப் பேசி. "மாதவி காவியத்தின் பதிப்புரிமையை கவிஞரிடமிருந்து நான் பெற்றுக் கொள்ள விரும்புகிறேன். அது ஒன்றே காவியப் படைப்பைக் காக்க வழி. யோசித்துச் சொல்லுங்கள்" என்றேன் அவரும் என்னுடைய முடிவினை ஏற்றுக் கொண்டார். பின்னர் இருவருமாகக் கவிஞருடன் பேசினோம். அவர் இசைவு தெரிவித்தார். முறைப்படி வழக்கறிஞர் அவர்களை அணுகி. முத்திரைத் தாளில் பதிப்புரிமையை எழுதி வாங்கினோம். **ஆசிரியர் விந்தன்** அவர்களும். என் உறவினர் **திரு. மு. கிருஷ்ணசாமி** அவர்களும் சாட்சி கையொப்பமிட்டனர். கவிஞரும் முதல் முறையாகக தன்னுடைய பெயரை "கவிஞர் தமிழ் ஒளி" என்றே குறிப்பிட்டுக் கையொப்பம் இட்டார். நானும் உரிய பணத்தை அவரிடம் சேர்ப்பித்தேன். இது 1961 பிப்ரவரியில் நிகழ்ந்தது.

கவிஞரின் முகம் மலர்ந்தது. கண்களில் நன்றி உணர்வு காணப்பட்டது. முன் சொன்னபடி அவர் கேரளா செல்லுவார் என எதிர்ப்பார்த்தேன். தன்னுடைய திட்டத்தை மாற்றிக் கொண்டார் கவிஞர். என்னளவில். காவியப் படைப்பைக் காப்பாற்றி விட்ட மன நிறைவில் அமைதி கண்டேன்.

# 10. போராடி வாழ்ந்த புதுயுகக் கவிஞர்

இலட்சியத்திற்காக வாழ்கிறோம் என்கிற எண்ணத்தெளிவு உள்ளவர்கள். எத்தகைய சபலங்களுக்கும் ஆட்படுவதில்லை. சூழ்நிலையின் படிப்பினைகளும் அவர்களைச் சலனப்படுத்துவதில்லை. ஏன், புயலை எதிர் கொள்ளும் மனத்திடம், அவர்களின் நெஞ்சுர மாவதால், புயலுக்குப் பின்வரும் அமைதிக்காகவும் அவர்கள் ஏங்குவதில்லை.

"கவிதையே தன் இலட்சியம்" என ஏற்றுக் கொண்ட கவிஞர் காலம் முழுவதும் எதிர் நீச்சலிட்டே வாழ்ந்து காட்டியவர்.

பழகிய நண்பர்களை ஐயுறுவதும் தான் விரும்பாதவற்றை வலி யுறுத்துவோரைத் தன் எதிரியாக எண்ணுவதும் அவர்தம் இயல்பாக இருந்தது. எனினும், சராசரி மனித விருப்பங்களுக்கு அப்பாற்பட்டவராய் விளங்கிய அவர், ஒரு துறவிக்குச் சமமாக வாழ்ந்ததை நண்பர்கள் ஏற்றுக் கொண்டனர் என்பதும் உண்மை.

இங்கே அவருடைய இறுதி நாட்கள் பற்றிச் சில கூறுவேன்.

கவிஞர் தமது விருப்பம் போல், வசிப்பிடத்தை மாற்றிக் கொண்டிருப்பதுதான் வழக்கம். அவர் எங்குள்ளார் என்பதையும் பலரிடம் கேட்டே தெரிந்து கொள்ள வேண்டியிருக்கும். தவிர்க்க முடியாத நிலைவரும் போது, யார் மூலமாவது எனக்குக் கடிதம் அனுப்புவார். தொடர்ந்து இருமுறை பணம் கொடுத்தனுப்பினால், அடுத்து அவரே நேரில் வந்து விடுவார். அப்போதே, பிரிவு காலத்தில் நடந்தவற்றைக் கேட்டுத் தெரிந்து கொள்வேன்.

1963 என நினைவு, கவிஞர் என்னைக் காண வந்தபோது, அவருடைய தோற்றத்தில் மாறுதல் தெரிந்தது. இளைத்திருந்தார். இருமினார். மூச்சு இறைப்பும் தெரிந்தது. அவரை டாக்டரிடம் அழைத்துப் போய் சிகிச்சையளித்தேன். மறுநாள், ஆசிரியர் விந்தன் அவர்களும் நானும் கவிஞரை "அரசு பொது மருத்துவமனையில்" சேர்த்தோம். சரியாக ஒரு வார காலம் கூட அங்கே தங்கியிருக்கவில்லை. எங்குச் சென்றார் என்பதும் தெரியவில்லை. விசாரித்தபோது, மருத்துவ மனைகளில் அவர் எதிர்பார்த்த வசதிகள், உபசரணைகள் கிடைக்க வில்லையென்பதே கவிஞர் வெளியேறியதற்கான காரணங்கள் என்பதைத் தெரிந்து கொண்டோம்.

அந்நாளில், இப்போதுள்ளதை போல, தனியார் மருத்துவமனைகள் அதிகமில்லை. இருந்த சிலவும் பெரும் பணக்காரர்களுக்கு ஏற்றதாக இருந்தன. அதனால், எளியவர்க்கு உகந்தது "அரசு மருத்துவமனை" என்பதே எல்லோருடைய எண்ணமாகவும் இருந்தது. அதனால் நாங்களும் வேறு வகையில் சிந்திக்க வாய்ப்பில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில், புதுவையிலிருந்து அவருடைய **மைத்துனரும் இளைய சகோதரியும்** சென்னை வந்தனர். கவிஞரின் தந்தையார் உடல் நலமற்றிருப்பதாகக் கூறி, இவரை உடன் அழைத்துச்செல்ல வேண்டுமென்றனர். கொஞ்சம் பணத்தை அவர்களிடம் கொடுத்து வழியனுப்பி வைத்தேன்.

புதுவை சென்ற கவிஞர், அங்கே, "ஜெப்மர்"மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளார். அங்கிருந்தபடி அவர் எழுதிய கடிதம் ஒன்றும் எனக்கு வந்தது - சிரமத்தைச் சொல்லிப் பணம் கேட்டிருந்தார். புதுவை செல்லுவதா என நினைத்துக் கொண்டிருந்தபோது, என் உறவினரும் அன்புத் தோழருமான திரு. மு. கிருஷ்ணசாமி அவர்கள், ஏதோ அலுவல் காரணமாகத் தாம் புதுவை செல்ல விருப்பதாகவும், அப்படியே கவிஞரையும் சந்தித்து வருவதாகவும் கூறினார்.

கவிஞருக்கு வேண்டிய, வேட்டி, சட்டை துண்டு அத்துடன், கொஞ்சம் பணமும் கொடுத்தனுப்பினேன். நண்பர் புதுவை சென்றார். ஜெப்மர் மருத்துவ மனையில் கவிஞரைக் காணவில்லை. அங்கிருந்தவர்கள் அவருடைய முகவரி தெரியாதென்றும், சில நாட்களின் முன், திரு.கி.வா.ஜ. அனுப்பிய பணவிடை திருப்பி அனுப்பப்பட்டதாகவும் சொன்னார்களாம்.

1964-ல் பாவேந்தர் மறைவின்போது நான் புதுவை சென்றேன். அப்போதும் கவிஞர் இருப்பிடம் பற்றி என்னால் அறிய இயலவில்லை. வருத்தத்துடன் திரும்பினேன்.

சரியாகப் பத்து நாட்களில் சென்னை வந்துள்ளார் கவிஞர் "காந்தி வழி" - "சமநீதி" ஏடுகளுக்கு பாவேந்தர் பற்றிய இரண்டு இரங்கற் பாக்களை எழுதிக் கொடுத்துள்ளார். "சமநீதி" துணை ஆசிரியர் திரு. சீனிவாசமூர்த்தி (திருமாறன்) அவர்களும், திரு.மொ.சு. மணியும் கவிஞர் தோற்றத்தைக் கண்டு ஒருவாறு யூகித்து, அவரைப் புகைப்பட நிலையத்திற்கு அழைத்துச் சென்று, கவிஞரை புகைப்படமாகப் பதிவு செய்தார்கள். அந்தப் படம்தான் தாடியுடன் நாம் காணும் கவிஞருடைய திருமுகம்.

"சமநீதி" அலுவலகத்தைவிட்டு, கவிஞர் என்னிடம் வந்தார். அவரது தோற்றம் கண்டு நான் திடுக்கிட்டேன். உடல் சருகாகி,ஊன்று கோலுடன் அவர் காணப்பட்டார். உடனடியாக "ஹோட்டல் நிர்மலாவில்" அறை எடுத்துக் கவிஞரை இருக்க வைத்தேன். பிறகு மருத்துவ சிகிச்சை பற்றிப் பேசினேன்." அதெல்லாம் வேண்டாம் இருதினங்களுக்கு ஒருமுறை "செப்டாமைசின்" ஊசி போட்டுக் கொண்டால் போதுமென்றார்.

அவர் சொன்னபடி அப்போதே டாக்டரிடம் அழைத்துப் போய் ஊசி போட்டுக் கொள்ள ஆவன செய்தேன். பின்னர், வீட்டிலிருந்து உணவு கொண்டு வந்து கொடுத்தேன். "கவிஞரிடம், உங்கள் விருப்பம் போல் விடுதியில் தங்கியிருங்கள். வாடகையை நான் கொடுக்கிறேன். தினசரி உணவும் அனுப்பு வைக்கிறேன்" என்றேன்.

எனக்கு எது சாத்தியமோ, அதை மட்டும் உறுதிபட மொழிந்தேன்.

இந்த ஏற்பாட்டின்படி, அவர் விடுதியில் தங்கியிருந்தால், மற்ற நண்பர்களை இங்கே வரவழைத்திருப்பேன். அவருக்கு உடல் நலம் கெடாமலும், எனக்கும் மன அமைதி ஏற்பட்டிருக்கும். மாறாக, கவிஞர் மன உளைச்சலுக்கு ஆட்பட்டவராகத் தினமும் சைக்கிள் ரிக்ஷாவில் சென்னையை வலம்வரத் தொடங்கினார்கள்.

ஒரு காலத்தில் கால் நடையாய்ச் சென்னையை வலம் வந்து பழகிய கவிஞர். இப்போது சைக்கிள் ரிக்ஷாவிலே வலம் வந்தது கண்டு, நண்பர்கள் துணுக்குற்றனர். தானறிந்த அனைவரையும் ஒரு பார்வை பார்த்துவிடக் கருதினாற்போல, அனைத்து நண்பர்களுக்கும் முக தரிசனம் தந்தார். தனக்கு உதவுபவர்களைக் கண்டு ஒரு புன்முறுவல் பூப்பார். "இதுதான் இறுதி" என்பதுபோல அந்த முறுவல் உதிர்ந்து போகும்.

மாலை ஏழு மணி போல, சைக்கிள் ரிக்ஷாவில் வந்து என் அங்காடிமுன் இறங்குவார். ரிக்ஷாகாரனிடம் தகராறு மூளும், இவர் பேசிய தொகை என்பார். அவர் சுற்றி அலைந்த இடங்கள் பற்றிச் சொல்லுவார். நான், கேட்ட தொகையைக் கொடுத்து அவரை அனுப்பி வைப்பேன்.

இது குறித்து அவரைக் கண்டிப்பது போல ஒருமுறை பேசி விட்டேன். அவரும் கொஞ்சமும் யோசியாமல், இந்த நிலையிலும் நான் சம்பாதிக்க வேண்டியுள்ளது என்றார். என்னால் பொறுக்க முடியவில்லை.

"ஆமாம், சார். நீங்கள் தங்கியிருக்கும் அறைக்கு நான் வாடகை கொடுக்கிறேன். வீட்டிலிருந்து அனுப்பி வைக்கும் உணவையும்

விரயமாக்குகிறீர்கள். இந்த நிலையில் நீங்கள் சம்பாதிப்பது சைக்கிள் ரிக்ஷாவுக்கு வாடகையாகப் போகிறது. இது தேவையா?" என்றேன் அவர் பதில் பேசவில்லை.

இந்தக் கட்டத்தில் இன்னொரு செய்தியும் என் செவியில் விழுந்தது. தியாகராய நகரில் கவிஞர் கண்ணதாசன், இவரைக் கண்டதாகவும், உடல் நலம் கேட்டு வருந்தியதாகவும், சிகிச்சைக்காக வாரந்தோறும் ஒரு தொகையை இவருக்குத் தரும்படி தமது நிறுவன மேலாளரிடம் கண்ணதாசன் சொன்னதாகவும், அதன்படிச் சிலவாரங்கள் இவர் பணம் பெற்று வந்ததாகவும் தகவல் வந்தது.

கம்பீரமாக நடமாடிய நாட்களில் யாரையும் பொருட்படுத்தாத கவிஞர், நலிவுற்ற நிலையில் பிறருடைய அனுதாபத்திற்கு ஆளாகி வந்ததை எண்ணி வேதனையடைந்தேன்.

இந்தச் சந்தர்ப்பத்தில் புதுவையிலிருந்து கவிஞரின் இளைய சகோதரியும், மைத்துனரும் இரண்டாம் முறையாகச் சென்னை வந்து என்னைச் சந்தித்தனர். கவிஞர் தங்கியிருந்த அறைக்கு அவர்களை அழைத்துப் போய்க் காட்டினேன். புதுவை செல்லக் கவிஞர் ஒப்புக் கொண்டார். பயணச் செலவிற்குப் பணம் கொடுத்து அவர்களை வழியனுப்பி வைத்தேன். அப்போது கவிஞர் என்னைப் பார்த்த பார்வையே எனக்கும் அவருக்கும் இறுதிச் சந்திப்பாக முடிந்தது.

# 11. சாவிலும் புகழ்பெறாத கவிஞர்

*1965* மார்ச் திங்கள் 29ம் நாள், புதுவையில் இயற்கை யெய்தினார் தமிழ்ஒளி. இந்தச் செய்தியும் "**கலைமகள்**" ஏடு வாயிலாகத்தான் தமிழகம் அறிந்து கொண்டது. இதன் பின்னரே "ஜனசக்தியும்" வேறுசில ஏடுகளும் இரங்கற் செய்திகளை வெளியிட்டன.

இந்தச் செய்தி எனக்கு அதிர்ச்சி அளித்த போதிலும் பிணியுற்ற நிலையில் அவர் அடைந்த துன்பங்களை எண்ணி, இறப்பும் ஓர் ஆறுதலே என அமைதி கொண்டேன்.

"எந்த நிர்ப்பந்தங்களுக்கும் பணிய மாட்டேன் - எதற்கும் அஞ்சமாட்டேன்" என வைராக்கியத்துடன் நடமாடிய கவிஞர் பெருமான், இறுதியில் காலனின் பிடியில் சிக்கிய செய்தியே வரலாற்றில் பதிவானது.

ஆயினும், கவிஞர் கூற்றுப்படி,

**"செத்தார் பிறப்பதில்லை,**
**செந்தமிழ்க்குத் தொண்டியற்றும்**
**சித்தர் இறப்பதில்லை!"**

என்பதும் மெய்யே அல்லவா? ஆம். அந்தக் கவிச்சித்தர் சாகவில்லை. அவர், தமது கவிதைகளில் எப்போதும் வாழ்ந்து கொண்டிருப்பார் என்பது திண்ணம்!

இனி, கவிஞர் தொடர்பான நீங்கா நினைவுகள், நெருப்பாய்ச் சுடும் நிகழ்ச்சிகள், நலம் நாடிய நல்லோர் பற்றிய தகவல்களையும் எடுத்துரைப்பேன்.

# மண்ணின் மைந்தர்

ஒரு மாலைப்போதில் கவிஞருடன் உலாச் சென்றிருந்தேன். வழக்கமாக நடந்து செல்லும்போது கண்ணில்படும் காட்சிகளில் அவர் கவனம் பதியும். நின்று பார்த்து ரசித்த பின்பு, உதடுகள் அசைபோட நடையைத் தொடருவார். சில நேரங்களில் சிரிப்பும் கோபமும் முகத்தில் தோன்றும். ஏதேனும் சொல்ல நினைத்தால் "சார்" என விளித்து நம்மிடம் சொல்லுவார்.

அன்று, அந்தி சாய்ந்து இரவு திரை விரித்த நிலையில், திரும்பிக் கொண்டிருந்தோம். ஷெனாய் நகர் வந்ததும், ஒரு வீட்டின் முன் நின்று, "குஞ்சிதம்" - "குருசாமி" என உச்சரித்தார். நானும், "இது குத்தூசியார் வீடு" என விளக்கமளித்தேன்.

"சரி, வாங்களேன், பார்த்துப் பேசுவோம்".

"எனக்கு நேரமில்லை. நீங்கள் பேசிவிட்டு வாருங்கள்". நான் திரும்பிவிட்டேன்.

இரவில் இதுபற்றிப் பேச்சு எழுந்தது.

"சார், குத்தூசியார் என்னைச் சிங்கப்பூர் போகச் சொன்னார். **''தமிழ் முரசு''** ஏட்டில் துணை ஆசிரியர் வேலைக்கு ஆள் தேவையாம்"-

"நல்ல வாய்ப்புதான். போகலாமே"-

"எனக்குப் பிரியமில்லையென்று சொல்லிவிட்டேன்"

"ஏன், சிங்கப்பூர் அழகான ஊர். வசதியாக வாழலாம். நிம்மதியாக இருக்கலாம். நிறைய எழுதலாம்".

நான் உணர்த்திய குறிப்பு கவிஞரை சினம் கொள்ள வைத்தது போலும்!

"எழுதுவதை இங்கிருந்தும் எழுதலாமே - அதற்காக, சிங்கப்பூர் போய்ச் சாக வேண்டுமா? எது எப்படி நடந்தாலும் என்னுடைய இறுதி மூச்சு தமிழ் மண்ணில்தான் அடங்க வேண்டும்."

நான் பேச்சைத் தொடராமல் நிறுத்திக் கொண்டேன். அன்றிரவு அவர் எழுதிய கவிதை இது:

## எண்ணித் துணிந்தேன்

**"விண்ணைத் தொட முயன்றேன் - போர்**
**வித்தை கற்க முயன்றேன்!**
**மண்ணைத் தொடும் நிழலில் - மன**
**மங்கை எனைத் தடுத்தாள்!**

**திங்களை எட்டச் சென்றேன் - மேற்**
**சென்றுகை கொட்டச் சென்றேன்!**
**மங்கை மனக்கிழத்தி - எனை**
**மண்ணில் இறக்கி விட்டாள்!**

**ஆகாயம் நீந்தச் சென்றேன் - கோள்**
**ஆயிரம் ஏந்தச் சென்றேன்!**
**சாகா மனக்கிழத்தி - எனைத்**
**தரையில் இறக்கிவிட்டாள்!**

**புதனைப் பிணிக்கச் சென்றேன் - செவ்வாய்ப்**
**புத்தி கணிக்கச் சென்றேன்!**
**பதறி நெடுந்தரையில் - மனப்**
**பாவை இறக்கி விட்டாள்!**

**மண்ணில் முளைத்தவன் நான் - அதன்**
**மார்பில் திளைத்தவன் நான்!**
**எண்ணித் துணிந்துவிட்டேன் - இனி**
**எங்கும் பறந்து செல்லேன்!"**

கவிதை பறந்து செல்லாமல் நிலைத்திருப்பதும் நாம்பெற்ற பேறு அல்லவா?

# "உயிர் ஒலி" ஓய்ந்த செய்தி

ஒருநாள் இரவு "அம்பிகாபதிக் கோவை" படித்துக் கொண்டிருந்தேன். கவிஞர் அறைக்குள் வந்தார். "என்ன படிக்கிறீர்கள்?" என்றார். நூலின் பெயரைச் சொன்னேன். "எப்படி யிருக்கிறது கோவை?"

"இனிமையாகவே உள்ளது. அனைத்தும் ஒருதுறைப் பாடல்களாக வருவதால் சற்று அலுப்புத்தட்டுகிறது."

"அது அப்படித்தான் இருக்கும். அகத்துறைக்கு விதிக்கப்பட்டுள்ள இலக்கணத்தை மீறக்கூடாதல்லவா?"

கவிஞர் உணர்த்தியதை மனதிற்கொண்டு, கோவையைப் படிப்பதில் ஆழ்ந்தேன்.

சிறிது நேரத்திற்குப் பின்னர், இரண்டு பாடல்களை எழுதி என்னிடம் கொடுத்தார் கவிஞர். படித்துப் பார்த்தேன். வியப்பு மேலிட்டது. கோவையில் இயன்றுள்ள அதே பாணியில் சுவை குன்றாத பாடல்கள். நான் சற்றும் யோசிக்காமல்,

"சார் கட்டளைக் கலித்துறைக்குத் தனி இலக்கணம் சொல்லுவார்களே"-

"என்ன, இலக்கணம், நேர் பதினாறு, நிரை பதினேழுதானே, எண்ணிப்பாருங்கள்-"

நான் தவறு செய்துவிட்டதாக உணர்ந்தேன். இலக்கணத்தைப் பற்றி அவரிடம் பேசலாமா? மெல்லச் சிரித்துவிட்டு அமைதியானேன்.

இரு தினங்களுக்குப்பிறகு, **"உயிர்ஒலி"** என்று தலைப்பிட்டு கையெழுத்துப்படி ஒன்றை என்னிடம் கொடுத்தார். முழுவதுமாகப் படித்துப் பார்த்தேன். அத்தனையும் கட்டளைக் கலித்துறைப் பாக்கள். உயிர்த்துடிப்புடன் ஒலித்த உயர்தமிழ்ப் பாக்கள்.

காற்றையும் நீரையும் பருகி வாழ்ந்த கண்ணற்ற மனிதர்கள், வேட்டையாட வந்தவரின் அம்புக்குப் பலியான சோகக் கதையை, கவிஞர் தனக்கே உரிய பாணியில் உணர்ச்சி மயமான கவிதைகளாக வடித்திருந்தார்.

அந்தக் கதை இராமாயணத்தில் இடம்பெற்றுள்ள தசரதன் சாப வரலாற்றைக் கூறுவது.

அந்தக் கதையைக் கண்ணீர்க் காவியமாகப் படைத்து படிப்பவர் நெஞ்சம் பதறும்படி பாக்களில் உயிர் ஒலியை ஒலிக்கச் செய்திருந்தார். என் நெஞ்சம் நெகிழ்ந்தது.

மறுநாள் "உயிர் ஒலி"யை எடுத்துச்சென்று திரு.கி.வா.ஜ. அவர்களிடம் கொடுத்து "கலைமகள்" ஏட்டில் தொடராக வெளியிடுமாறு கேட்டுக் கொண்டார்.

"கவிதையைத் தொடராக வெளியிடுவது வழக்கமில்லை" என்றும். "மேலும் சற்று விரிவாக எழுதிவாருங்கள் நூலாக வெளியிட ஆவன செய்கிறேன்" என்றார் திரு.கி.வா.ஜ.

கவிஞர் அறைக்குத் திரும்பியதும் செய்தியைச் சொன்னார். "உயிர்ஒலி" இரண்டு நாட்கள் வரை மேசை அறையில் மூச்சு விட்டுக் கொண்டிருப்பதைக் கண்டேன் அடுத்த நாள் காலை அவை சிதைந்த ஓவியமாக, சிதறிய காகித துணுக்குகளாக அறை முழுவதும் பரவியிருப்பதைக் கண்டு மனம் பதறினேன்.

"அடடா, இப்படி நேருமென அறிந்திருந்தால் பாதுகாத்திருக்க லாமே" என ஆதங்கப்பட்டேன்.

"திரு. கி.வா.ஜ. மனம் கொண்டிருந்தால், "உயிர் ஒலி"யைக் காத்திருக்கலாமே" என்ற எண்ணமும் எழுந்தது.

தமிழில் எழுந்த ஒரு புதிய படைப்பு, யார் செய்த தீமையினாலோ உருக்குலைந்து போனது என்று உங்களிடம் சொல்லி வருத்தமடைகிறேன்.

# பதிப்பாளர் "பற்றிய" நூல்!

ஒரு பதிப்பாளர். இஸ்லாமியர். சுதந்திரப் போராட்டத் தியாகிகளின் வரலாற்றினை நூல்களாக வெளியிட்டு, புகழும் பொருளும் ஈட்டியவர். நம் கவிஞருக்கும் நண்பர்.

அவரை அணுகித் தமது கவிதைப் படைப்புகளை வெளியிடக் கேட்டுக் கொண்டார் கவிஞர். அவரும் மற்ற பதிப்பாளர்களைப்போல் தயக்கத்தை வெளியிட்டுவிட்டு-

"இப்போது பழந்தமிழ் இலக்கியங்கள் மலிவுப் பதிப்பாக வெளிவந்து பெருமளவில் விற்பனையாகின்றன. நீங்கள் ஒத்துழைத்தால் எனக்கு ஆறுதலாயிருக்கும். இதோ, இந்த "ஐந்திணை" நூலை எடுத்துச் செல்லுங்கள். பத உரையும் பொழிப்புரையும் எழுதிக் கொடுங்கள் பணம் தருகிறேன்" என்றார்.

ஒரு படைப்பாளியின் கவனம் பற்று இலக்கியத்திற்குத் திரும்புவது உடன்பாடாகத் தோன்றவில்லை. ஆயினும், பணத் தேவைக்காக அதனை ஏற்றுக் கொண்டார்; சிறப்பாகவே செய்தும் கொடுத்தார்.

எதிர்பார்த்தபடி அந்நூல் உடனடியாக அச்சாகவில்லை. கவிஞர் மறைவுக்குப் பின்னர், **"ஐந்திணைச் செல்வம்" பதிப்பாளர் பெயரில்** வெளிவந்ததைத்தான் காண முடிந்தது!

# இளங்கவிஞரா?...

ஆண்டு தோறும் வெளிவரும் "ஆனந்த விகடன்" தீபாவளி மலரில் ஒரு பகுதியாக, கவிதைகள் வெளியிடப்படுவது வழக்கம்.

அதில் பங்கு பெறும் கவிஞர்களுக்குச் சன்மானம் மட்டுமன்றிப் புகைப்படத்துடன் கூடிய விளம்பரமும் கிடைக்கும். இந்த வாய்ப்பினைப் பலரும் எதிர்பார்ப்பதுண்டு.

ஓரிடத்தில் தமிழ்ஒளியைச் சந்தித்த **திரு. கொத்தமங்கலம் சுப்பு** அவர்கள், "நீங்களும் ஒரு நல்ல கவிதையை அனுப்புங்க, இளங்கவிஞர் பகுதியில் வெளியிடுகிறோம்" என்றார்.

இளங்கவிஞர் எனச் சொல்லக் கேட்டதுமே கவிஞருக்குக் கோபம் வந்துவிட்டது. "என்ன இளங்கவிஞரா?" என்றார்.

திரு. சுப்பு வியப்புடன் பார்த்தார். "என் கவிதைகள் முதிர்ச்சி யடைந்து விட்டன, நான் இளங்கவிஞன் அல்ல" எனக்கூறி வேகமாக நடந்துவிட்டார் கவிஞர்.

அன்றிரவு இதுபற்றி என்னிடம் பேசினார். "எத்தனை காலத்துக்குத்தான் இளங்கவிஞராக இருக்க முடியும்?" ஏதோ ஒரு சக்தி **இரும்புத் திரையாக** இருந்து கொண்டு என் வளர்ச்சியைத் தடுத்து வருகிறது."

அவருடைய மனநிலை புரிந்தது. ஆறுதல் சொல்ல முடியாமல் அமைதியாக இருந்துவிட்டேன்.

# டாக்டர் கமில்சுவலெபில் சந்திப்பு

செக் நாட்டுத் தமிழறிஞர் டாக்டர் கமில் சுவலெபில் முதன் முறையாகச் சென்னை வந்திருந்தார். அவர் தங்கியிருந்த இடம் அரண்மனைக்காரத் தெரு, கத்தோலிக்கர் மாளிகை.

பேராசிரியர்களும், தமிழன்பர்களும் அவரைச் சந்தித்து அளவளாவி வந்தனர். கவிஞர் தமிழ்ஒளியும் ஒருநாள் சந்தித்தார்.

தமிழ்ஒளி தன் பெயரைக் கூறியதும், ஒரு புத்தகத்தை தேடி எடுத்து, "இது உங்களுடையதுதானே" என்றாராம் கமில்சுவலெபில். அந்நூல் **"வீராயி"**.

"உங்கள் கவிதை புயலாகச் சீறுகிறது. கருத்துகளும் புரட்சிகரமாக உள்ளன" என்ற புகழுரை தமிழ் ஒளிக்கு இதமாக இருந்ததாம்.

பிறகு, தமிழ் மொழி, தமிழ்ப் பண்பாடு பற்றிப் பேச்சு எழுந்தபோது, "உலகில் மூத்த மொழிகளில் ஒன்று தமிழ் மொழி. உலகின் பல மொழிகளிலும் தமிழ்ச் சொற்கள் பயின்று வருகின்றன. ஆயினும், பண்பாட்டுக் கூறுகள் இன்று மாறியுள்ளதாக அறிகிறேன்."

"எப்படிச் சொல்லுகிறீர்கள் என்று தமிழ்ஒளி கேட்கவும்," "இங்குள்ள பணியாளர் தினமும் எனக்குப் பழம் வாங்கி வருகிறார். ஒருநாள், நான் பழம் வாங்கச் சென்றேன். அவர்கள் சொன்ன விலை வியப்பளித்தது. பண்டைக் காலத்தில் தமிழ் வணிகர்கள் **"கொள்வதும் மிகை கொளாது, கொடுப்பதும் குறைபடாது"** நடந்து கொண்டதாக இலக்கியம் பேசுகிறது. இன்றுள்ள நிலவரம் முரண்பாடாக அல்லவா உள்ளது?"

இதுகேட்டுக் கவிஞர் அதிர்ச்சியடைந்தார். ஒருவாறு தேற்றிக் கொண்டு, "பண்டைக்காலத்தில் தமிழ்நாட்டைத் தமிழர்களே ஆண்டு வந்தனர். அதனால் வாழ்க்கைமுறை சீராக இருந்து வந்தது. பிற்காலத்தில் யாரெல்லாமோ படையெடுத்து வந்து ஆட்சி பீடத்தில் அமர்ந்ததால் வாழ்க்கை முறையும் சிதைந்து போனது. இன்று தமிழர்களைப் பழங்காலத்தவர் என்று அடையாளம் காட்ட எஞ்சியிருப்பது தமிழ் மொழியும் இலக்கியமும்தான்."

இந்த விளக்கத்தைக் கமில்சுவலெபில் ஏற்றுக்கொண்டார். தமிழ் ஒளி விடைபெற்று எழுந்தபோது- ஓலையால் பின்னப்பட்ட ஒரு விளையாட்டுப் பொம்மையைப் பரிசளித்து வழியனுப்பி வைத்தார் டாக்டர் கமில்சுவலெபில்.

பின்னர், நடந்த ஒரு நிகழ்ச்சியில் சென்னை ஜைன சமாஜத்தினர், டாக்டர் கமில்சுவலெபில் அவர்களுக்கு, வரவேற்பும் பாராட்டும் தெரிவித்து வாழ்த்து மடலும் வழங்கியுள்ளனர். அந்த வாழ்த்துப் பாவினை எழுதியவர் கவிஞர் தமிழ்ஒளி.

வாழ்த்து மடலின் இறுதியில் வரும் வெண்பா இது:

**"போற்றும் பொதுவுடைமைப் பூங்காவிற் சுற்றிவந்து**
**சாற்றும் தமிழ்வண்டு வாழியரோ - நூற்றொகையாற்**
**பண்டுலகம் பாராட்டும் பான்மைகொள் நம் உறவைக்**
**கண்டுலகம் பாராட்டும் காண்!"**

# நலம் பாராட்டிய நல்லோர்

"பற்றற்ற துறவிபோல் வாழ்ந்தவர் தமிழ்ஒளி" என நாம் குறிப்பிட்டுள்ளோம். அவருடைய வாழ்க்கையின் காப்பரண்களாக விளங்கியவர்கள் நண்பர்கள்தான்.

அந்த நண்பர்கள் சிலரைப்பற்றி முன்னர்க் குறிப்பிட்டுள்ளோம். மேலும், சில நண்பர்கள் குறித்து இங்கே எடுத்துரைப்போம்.

புதுவையில் உற்ற நண்பர்களாக விளங்கியவர்கள் பற்றிய தகவல்கள் நம்மிடமில்லை. சென்னையில் நாமறிந்த தமிழ்ஒளியின் நண்பர்கள் பற்றியே இங்குக் குறிப்பிடுவோம்.

## கவிஞர் குயிலன்

கவிதை உறவாகக் கரம் இணைந்த நட்பு. 1946ல் இவர் வெளியிட்ட "கவிமலர்" ஏட்டில் தமிழ்ஒளியின் கவிதை இடம் பெற்றுள்ளது. இருவரும் சேர்ந்து பாப்பா பாட்டுக்களை எழுதி ஒரே நூலாக வெளி யிட்டுள்ளனர். பொதுவுடைமைக் கட்சியில் இணைந்து செயலாற்றிய இவர்களை இரட்டைக் கவிஞர்கள் என்றும் கூறுவர். "முன்னணி" ஏடு வாயிலாகக் குயிலன் வெளியிட்டுள்ள இலக்கியப் படைப்புகள் முற்போக்கு இலக்கியத்தின் முன்னோடி என்றே கூறலாம். "முன்னணி" ஏட்டில் தமிழ்ஒளியின் ஆற்றல் முழுமையாக வெளிப்பட வழிகோலி யவர் குயிலன் என்பது முற்றிலும் உண்மை.

கற்பனை உள்ளம் படைத்தவர்களிடையே உருவாகும் கருத் தொற்றுமை நிலைத்து நிற்காது என்ற மனோதத்துவ உண்மை, இவர்கள் விஷயத்தில் மெய்யாகி நட்பு குலைந்துவிட்டது. எனினும் இவர்கள் இணைந்திருந்த நாட்களில் செய்துள்ள கவிதைப் பணிகள் இலக்கிய வரலாற்றில் இடம்பெறத் தக்கவையே.

## தோழர் ஊ. கோவிந்தன்

கொள்கைப் பிடிப்புள்ள பொதுவுடைமை இயக்கத் தோழர். கொள்கை ரீதியாகத் தமிழ்ஒளியை நேசித்தவர். இவர் பதிப்பாளராய் இருந்து வெளியிட்ட **"தமிழ் முரசு"** ஏட்டில் தமிழ்ஒளியின் கவிதைகள் வெளிவந்துள்ளன. பின்னர் அந்த ஏடு **திரு. ம.பொ.சி. வசமானதும்** உண்மை! நம் கவிஞருக்காகப் பதிப்பகம் நிறுவி **"நிலைபெற்ற சிலை"** குறுங்காப்பியத்தை வெளியிட்டவர். பின்னாளில் இவர் வெளியிட்ட **"புதுமை இலக்கியம்"** ஏட்டிலும் தமிழ்ஒளி எழுதியுள்ளார். சற்று

முன்கோபக் காரராயினும் மனிதநேயம் மிக்கவர். கவிஞர் அணுகிய போதெல்லாம் அரவணைத்தவர்.

## கவி.கா.மு. ஷெரீப்

கவிஞர். தேசபக்தர். பண்புள்ள மனிதர். தமிழுக்காக தமிழ்ஒளியை நேசித்தவர். 1945ல் நட்பு உருவானதாகக் கூறுகிறார். அப்போது தொடங்கி அவர் நடத்திய ஏடுகள் அனைத்திலும் தமிழ்ஒளியின் கவிதைகள் இடம் பெற்றுள்ளன. வயதில் சற்று மூத்தவராயினும் நம் கவிஞர் பால் உயர் மதிப்பு கொண்டவர். கவிஞர் மறைந்த பின்னர் எழுதிய ஒரு கட்டுரையில்-

''தமிழ்ஒளியை ஒரு அறையில் இருக்கவைத்து, போதிய வசதிகளையும் செய்து கொடுத்து, "மாதம் ஒரு குறுங்காப்பியம் எழுதிக் கொடுங்கள்'' என்றால், அவ்வாறு படைத்தளிக்கும் ஆற்றல் அவரிடமிருந்தது" என்று குறிப்பிட்டுள்ளனர். தமிழ்ஒளியைப் புரிந்து கொண்டதற்கு இதுவல்லவா சான்று!

## திரு. மா.சு. சம்பந்தம்

தமிழுக்குத் தொண்டு செய்யுமுகத்தான் தமிழர் பதிப்பகம் கண்டவர். கட்சி மாறுபடினும் தமிழுறவு மாறுபடாது என்பதை மெய்ப்பித்து வருபவர்.

கழக ஏடுகள் வாயிலாகத் தமிழ்ஒளியை அறிந்த இவர், **"வீராயி"** காவியத்தை வெளியிட்டதன் மூலம் தமிழ்ஒளிக்குப் புகழ் சேர்த்தவர் கவிஞரைக் காணும் போதெல்லாம் அன்பு பாராட்டியவர்.

## திரு. சக்கரவர்த்தி நயினார்

"முத்தமிழ் நிலைய" உரிமையாளர். தமிழ் மறுமலர்ச்சி இயக்க நூல்களை வெளியிட்டு வந்தவர். தமிழ்ஒளியின் **"கவிஞனின் காதல்"** நூலைப் பதிப்பித்தவர். தமிழ்ஒளியைக் குடும்பத்தில் ஒருவராகப் பாவித்தவர். இவருடைய மூத்தமகன் திரு. பரதன் அவர்கள் கவிஞரின் இனிய நண்பர். இவர் வாயிலாக, தமிழ்ஒளியின் **"கவிஞனின் காதல்"** **"கவிஞர் விழா"** - இரண்டு புத்தகங்களின் பதிப்புரிமையை நாம் பெற்றுள்ளோம்.

## 'தென்றல்' சொக்கலிங்கம்

''தென்றல்'' என உச்சரித்தாலே கண்ணதாசன் நினைவுதான் பலருக்கும் எழும். அதற்கும் முன்னால் "தென்றலை"த் தவழச் செய்த திரு. சொக்கலிங்கனார் பற்றிப் பிறர் சொன்னால்தான் தெரியும்.

அந்தத் 'தென்றல்' ஏட்டில், குயிலனும், தமிழ்ஒளியும், கண்ண தாசனும் கவிதை படைத்த காலம் ஒரு ஆரம்ப கட்டம்தான்.

அந்நாட்களில் இலட்சிய வீறுடன் தோன்றி, வேகமாக மறைந்துபோன ஏடுகள் வரிசையில் "தென்றலும்" ஒன்று எனில் அது உண்மையாம்.

திரு. சொக்கலிங்கனார், தியாகராய நகரில் "பாரதம் அச்சகம் நிறுவி, இளங்கோ பதிப்பகம்" தொடங்கிய கட்டத்தில் அவரை நான் சந்தித்துள்ளேன். நம் கவிஞர் எழுதிய **"சிலப்பதிகாரம், நாடகமா? காவியமா?"** நூலை அவர் வெளியிட்டிருந்தார். அந்நூலின் பதிப்புரிமையை நாம் கேட்டபோது மறுக்காமல் அளித்தார்.

தமிழ்ஒளிக்கு அவர் செய்துள்ள உதவிகள் குறித்துக் கவிஞர் குயிலன் அவர்கள் கூறக் கேட்டுக் கொண்டேன். தமிழ்ஒளியின் வரலாற்றை அறிய விரும்புவோர், இவர்தம் பெயரையும் நினைவில் கொள்ள வேண்டும்.

## திரிகூட சுந்தரம் பிள்ளை

தமிழை நேசித்தது போன்று இந்திய மொழிகளையும் நேசித்தவர். இலக்கியப் படைப்பாளிகளைப் போற்றும் பண்பினர். தேசபக்தர்.

"முன்னணி" ஏட்டில், குயிலன் - தமிழ்ஒளி இணைந்து பணியாற்றி வந்தபோது, அவர்களைப் பாராட்டி மகிழ்வித்தவர். "முன்னணி" தடைசெய்யப்பட்டதும், அவர்கள் எதிர்கொண்ட இடர்ப்பாடு அறிந்து, அவர்களை அழைத்து ஆதரவு காட்டியவர்; பண உதவிகள் புரிந்தவர்.

பிற்காலத்தில் தமிழ்ஒளி பிணியுற்றிருந்தபோது, தாமறிந்த ஓமியோபதி சிகிச்சை அளித்தும், செலவுக்குப் பணம் கொடுத்தும் வழியனுப்பியவர்.

அப்பெருமகனார் இப்போது இல்லை. அவரை நினைவு கூர்ந்து நன்றி நவில்கிறோம்.

## திரு.எஸ். சங்கரன்

சித்தாந்த ரீதியாக கம்யூனிஸ்டுகளுடன் நட்பு கொண்டிருந்த சோஷலிஸ்ட் கட்சித் தோழர். "அலை ஓசை" வார ஏட்டை நடத்தியவர். நம் கவிஞர் பால் உயர் மதிப்பு கொண்டவர். "முன்னணி"யில் தமிழ்ஒளி எழுதிய கவிதை - சிறுகதைகளைத் தொகுத்து, "சாக்கடைச் சமுதாயம்" "மேதினமே நீ வருக" நூல்களை வெளியிட்டவர். இறுதிக்காலம் வரை கவிஞருக்கு நண்பராக விளங்கியவர்.

## திரு. ஏ.எல். நாராயணன்

கவிஞர் தமிழ்ஒளி அவர்களிடம் பயிற்சி பெற்ற எழுத்தாளர். பின்னாளில் பிரபல திரைப்பட வசன கர்த்தாவாக விளங்கியவர். இரண்டு திரைப்படங்களில் தமிழ்ஒளியின் பாடல்கள் இடம்பெறச் செய்தவர் அந்த வாய்ப்பினை அவர் தொடர விரும்பாதது கண்டு வருத்த முற்றவர். கவிஞரிடம் பக்தியுள்ள இவர், எப்போதும் நன்றி மறவாத நல்ல நண்பராகவே நடந்து கொண்டார்.

## திரு. விந்தன்

"முற்போக்குச் சிந்தனை" மனித நேயத்தின் பாற்பட்டதாக இருந்திட வேண்டுமென எண்ணியவர். தமிழ் ஒளியின் கவிதைகளில் காணப்படும் கோபங்களெல்லாம் மனித நேயத்தால் எழுந்தவை என்பதைத் தெரிந்தவர். அதன் பொருட்டு அவரிடம் பரிவு கொண்டவர். தாம் நடத்திவந்த **"மனிதன்"** மாத இதழில் தமிழ்ஒளிக்கு முதன்மையான இடமளித்து கௌரவித்தார்.

கவிஞர் பிணியுற்ற போது, அவரை அழைத்துச் சென்று அரசினர் பொது மருத்துவமனையில் சேர்ப்பித்தவர்.

கவிஞர் பால் தாம் கண்ட குறைபாடுகளைப் பொருட்படுத்தாமல், அவரை உரிய மதிப்புடன் நடத்தியவர், கொள்கை உறுதிபடைத்த குணசீலர்.

## கவிஞர் தே.ப. பெருமாள்

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் மாணவர். நாஞ்சில் தமிழில் நற்கவிதை படைத்தவர் நாவலாசிரியர். தமிழ்ஒளியின் கவிதைகளில் ஈடுபாடு மிக்கவர். **"கண்ணப்பன் கிளிகள்"** நூலின் பதிப்புரிமை பெற்றவர். கவிஞர் மறைந்தபின் அந்நூலின் பதிப்புரிமையினை எனக்களித்தவர். சிறிதுகாலம் தமிழ்ஒளியைத் தன் அறையில் வைத்துப் பாதுகாத்தவர். கவிஞருக்கு இவர் செலுத்தியுள்ள கவிதை அஞ்சலி என்றென்றும் நினைவு கூரத்தக்கவையாக உள்ளது.

## திரு. சீனிவாச மூர்த்தி

நம் கவிஞர்பால் மெய்யான அன்பு கொண்டவர். கவிஞர் மறைந்த பின்பு தம் பொறுப்பில் இருந்த **"சமநீதி"** ஏட்டின், முகப்பில் கவிஞர் படத்தை வெளியிட்டு நண்பர்கள் பலருடைய கட்டுரைகளுடன், அவ்வேட்டைச் சிறப்பிதழாக, கவிஞர் நினைவுக்கு அர்ப்பணித்தவர். அதுவே தமிழ்ஒளிக்கு அவர் செய்துள்ள பெருந்தொண்டு எனலாம்.

## திரு. பாலசுப்பிரமணியன்

"செங்குந்தமித்திரன்" அச்சகத்தில், "முன்னணி" ஏடு அச்சாகி வந்த நாளில் கவிஞர் பால் நட்பு கொண்ட மாணவர். இவர் படிப்பை முடித்துப் பணியில் சேர்ந்து, முதல் சம்பளம் பெற்றதும், புத்தாடைகள் வாங்கி வந்து நம் கவிஞருக்குக் காணிக்கையாக்கியவர். கவிஞர் பிணியுற்றிருந்த நிலையில் அவரைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று உபசரித்தவர். மனித நேயத்தைச் சொல்லால் அன்றிச் செயலால் மெய்ப்பித்த சிறந்த மனிதர்.

## திரு. தேவபாரதி

"எழுத்துக்காரன் தெரு சுப்பிரமணியன்" என்று கவிஞரால் அறிமுகம் செய்யப்பட்டவர். இப்போது தேவபாரதி எனப் பெயர் மருவி சிறுகதை எழுத்தாளராகப் பரிணமிப்பவர். தோற்றத்தில் எளியவர். நம் கவிஞரை இன்னுயிராக நேசித்தவர்.

கவிஞர் என்னை விட்டு விலகியிருந்த நாட்களில், இவர் வாயிலாகச் சீட்டு அனுப்பி உதவி பெறுவது வழக்கம். இப்போதும் கவிஞருக்கு நன்றி பாராட்டி வருபவர். நல்ல மனிதர்.

## திரு எம். ஈ. தேவராசன்

சென்னையில் பிரபலமான வணிகக் குடும்பத்தின் வாரிசு. பச்சையப்பன் கல்லூரி மாணவர். திரு. தேவபாரதியின் பள்ளித் தோழர், அவர் மூலம் நமக்கும் அறிமுகமானவர். தமிழ்ப்பற்று காரணமாக தமிழ்ஒளியை விரும்பியவர் ஒரு கட்டத்தில் கவிஞரை மருத்துவ மனையில் சேர்த்துச் சிகிச்சை பெற உதவியவர். இப்போதும் கவிஞர் நினைவை நெஞ்சாரப் போற்றிவரும் தமிழன்பர்.

## செ.து. சஞ்சீவி

என்னைப் பற்றிச் சொல்லுவது சுயவிளம்பரத்துக்காக அல்ல, தமிழ்ஒளியின் வரலாறு கூறும்போது, என்னைப் பற்றிய குறிப்பும் இன்றியமையாதது என உணர்ந்து இதனை எழுதுகிறேன்.

1948ல் "கம்யூனிஸ்டுகள் வேட்டையாடப்பட்டனர்" என்ற தலைப்பிட்டு, "தினமணி" நாளேட்டில் தினமும் செய்திகள் வந்து கொண்டிருந்த நேரம்.

காஞ்சிபுரம் தேரடிப் பகுதியில் செங்கொடிகள் பறந்து கொண்டிருந்தன. அதற்குரிய கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகமும், நெசவாளர் சங்கம் மற்றும் சில தொழிற்சங்கப் பெயர்ப்பலகைகளும்

பளிச்சிட்டன. ஒரு காலைப் போதில், அங்கே போலீஸ் லாரிகள் வந்து நின்றன. அதிலிருந்த முரட்டுக் காளைகளாம் மலபார் ஸ்பெஷல் போலீசார் திமுதிமென ஓடி மேற்சொன்ன அலுவலகங்களையும், அங்கிருந்தவர்களையும் மிகக் கொடூரமாகத் தாக்குவதை என் கண்ணால் கண்டேன். அவர்களைத் தரதரவென்று இழுத்து வந்து லாரிகளில் ஏற்றப்படுவதைப் பார்த்து மனம் பதறினேன். அத்துடன், என் நண்பர், "கம்யூனிஸ்ட் கண்ணன்" என்ற தொழிலாளி தலைமறைவானதும், அவருக்குப் பதிலாக "சோஷலிஸ்ட் கண்ணன்" என்பவரைக் கைது செய்து இழுத்துச் செல்லப்பட்ட செய்தியும் எனக்கு அதிர்ச்சியளித்தது.

இதுகுறித்துப் பரவலாகப் பேசப்பட்ட நிலையில், 1942ல் நடந்த ஆகஸ்டு புரட்சி பற்றிய செய்திகளை பலர் சொல்லவும் கேட்க முடிந்தது. நாடு பற்றியும் சுதந்திரம் பற்றியும் தெளிவான எண்ணங்கள் உணர்வு பூர்வமாக என் உள்ளத்தில் பதிவாயின.

இயல்பாகவே, உயர்சாதி ஆணவத்தை எதிர்க்கும் மனோபாவம் கொண்ட எனக்கு, பெரியார் கொள்கையில் அதிக ஈடுபாடு இருந்து வந்தது. சென்னை திரும்பியதும், எங்கள் பகுதியில் கம்யூனிஸ்ட் தோழர்கள் யாருமில்லை. சகதோழர்கள் பலரும் திராவிடக் கழக ஆதரவாளராக இருந்தனர். அவர்களுடன் இணைந்து கழகப்பணிகளில் பங்கு கொண்டேன். அதன் வழி, தமிழ்ப்பற்று வளர்ந்து பாரதிதாசன் கவிதைகளையும் பிற கவிதை, படைப்புகளையும் ஆர்வமுடன் கற்கும் நிலை உருவானது தமிழ்ஒளியின் "வீராயி" நூலினை அப்படித்தான் படிக்க நேர்ந்தது. அந்நூலில் வெளிப்பட்டிருந்த ஆவேசம், போர்க்குணம்மிக்க புரட்சிகரமான சிந்தனைகள் என்னை வெகுவாக ஆட்கொண்டது.

தமிழ்ஒளியை நேரில் காண நேர்ந்த போது அவர்பால் பற்று கொள்ள இந்த உணர்வுகள் துணை நின்றன.

அந்தக் காலகட்டத்தில், தலைமறைவு வாழ்க்கையை மேற்கொண்டிருந்த கம்யூனிஸ்டு தோழர்களுக்கு, ஆதரவாகத் திராவிட கழகத் தோழர்கள் புகலிடம் அளித்து வந்தது உண்மை. அவ்வகையில், தமிழறியாத இரண்டு மலையாளித் தோழர்களை சிறிதுகாலம் பாதுகாக்கும் நற்பேறும் எனக்குக் கிட்டியது.

இந்த வாய்ப்பினைத் தொடர்ந்து, கம்யூனிசம் பற்றிய அறிவினை வளர்த்துக் கொள்ளும் ஆர்வம் என்னுள் வளர்ந்தது. புத்தகங்களும், ஏடுகளும் வாங்கிப் படித்தேன். கழகத் தோழனாக இருந்து கொண்டே கம்யூனிஸ்டு ஆதரவாளனாகவும் நடந்து கொண்டேன்.

நான் எழுத்துப் பயிற்சியில் முனைந்து சிறுகதைகள் பலவற்றை எழுதினேன். என்னுடைய முதல் கதை (1950) "போர்வாள்" ஏட்டில் வெளிவந்தது. அடுத்தடுத்து, "தேன்கூடு", "பிரசண்ட விகடன்," "ஆனந்த போதினி", "மாலா", போன்ற ஏடுகளிலும் இடம்பெற்றன. கண்ணதாசன் தென்றல், முல்லை, பாரதிதாசன் குயில் மற்றும் 'ஜனசக்தி' ஏடுகளில் இயற்பெயரிலும் பாணன் என்ற புனைப்பெயரிலும் பாடல்களும் எழுதியுள்ளேன்.

"மனிதன்" ஏட்டிற்கு அனுப்பிய கதைகள் பற்றித் தமிழ்ஒளியுடன் பேசினேன். அவர் கதைகளைப் படித்துவிட்டு இன்னும் வளரவேண்டும், புதுமைப்பித்தனை படியுங்கள் என்றார். நானும் படித்தேன். அது எனக்கு ஏற்றதாகப் படவில்லை. நான் எழுதுவதை நிறுத்திக் கொண்டேன்.

இங்கே ஒன்றைச் சொல்ல வேண்டும். தமிழ்ஒளி "முகம்நக" நட்பை நாடாதவர். எனக்கும் அந்தக் கொள்கையில் உடன்பாடு உண்டு.

தமிழ்ஒளியின் அன்றாடத் தேவைகளை நான் ஈடு செய்து கொண்டிருந்த நேரம் அது. என்னைத் திருப்திபடுத்த ஏதாவது சொல்லி யிருக்கலாம். சொல்லவில்லை. நானும் அதைத் தவறாக எடுத்துக் கொள்ளவில்லை.

துறவிக்கு வேந்தும் துரும்பாகும்போது நான் எம்மாத்திரம்?

நான் எழுத்தாளனாவதை விட, சிறந்த வாசகனாக இருக்க விரும்பினேன். தமிழ்ஒளியின் எழுத்துக்களைப் படிப்பதிலும் பாதுகாப்பதிலும் அக்கறை கொண்டேன்.

சித்தாந்தத் தொடர்பு, அறிவார்ந்த நட்பு என்பவற்றைவிட, மனித நேயத்துடன் மனிதர்களை அணுகவும், இயன்றவாறு உதவவும் உறுதி பூண்டுள்ள எனக்கு இப்போதும் தளர்ச்சியில்லை!

தமிழ் ஒளியைத் தமிழகம் அறியுமாறு அவர்தம் இலக்கியப் படைப்புக்களை வெளிக் கொண்டு வந்ததன் வாயிலாக, இன்று புதுவை அரசு தமிழ்ஒளிக்கு விழா எடுக்கும் நிலை உருவானது.

இது என்னுடைய முயற்சிக்குக் கிடைத்த வெற்றியாக எண்ணி மன நிறைவடைகிறேன்.

வெல்க, தமிழ்ஒளி!

# சென்னை வாழ்க்கைப் பற்றிய சில செய்திகள்

## புதுவை முற்போக்கு எழுத்தாளர் சங்கம் 21-03-1999ல் நடத்திய கவிஞர் தமிழ்ஒளி நினைவு நாள் கருத்தரங்கில் நிகழ்த்திய உரை.

இன்று நடைபெறும் இந்தக் கருத்தரங்கம் தமிழ் இலக்கியம் சார்ந்த ஒரு சிறப்பு கருத்தரங்கமாகும்.

காலத்தால் நிழலடிக்கப்பட்ட கவிஞர் தமிழ்ஒளி அவர்களின் கவிதைப் படைப்புகளை ஆய்வு நோக்கில் மதிப்பீடு செய்து மக்களுக்கு அறிவிக்கும் வாய்ப்பாக இந்த கருத்தரங்கம் அமைந்துள்ளது.

கவிஞர் தமிழ்ஒளி, இந்த மண்ணின் மைந்தர். புதுமணமும் புரட்சி மணமும் கமழ அதி அற்புதமான கவிதைகளை நமக்களித்த மக்கள் கவிஞர். பொதுவுடைமைக்கவிஞர்.

அவர், இந்த மண்ணில் நாற்பதாண்டுக்காலம் வாழ்ந்தவர். அவர் மறைந்து முப்பத்தைந்தாண்டுகள் கடந்துவிட்டன. இந்த ஆண்டு அவருக்குப் பவள விழா ஆண்டு. நாம் அவருடைய பிறந்த நாள் நிகழ்ச்சிகளையும், நினைவு நாள் நிகழ்ச்சிகளையும் நடத்திக் கொண்டிருக்கிறோம்.

உண்மையைச் சொல்லுவதனால், நம்கவிஞருக்குப் பிறந்த நாளும் இல்லை. இறந்த நாளுமில்லை. அவர், "எல்லாம் ஒருநாள், இதற்கேன் திருநாள்" எனப்பாடி வைத்தவர், உலகைச் சாடிச் சென்றவர்.

ஆயினும், நாம் அவருக்கு விழா எடுக்கிறோம். அவர், மகத்தான மனிதர் என்பதற்காக அல்ல, மகத்தான கவிதைகளை இந்த மனித குலத்துக்கு வழங்கியவர் என்பதற்காகவே நாம் விழா எடுக்கிறோம்.

இந்த நிலையிலும் கூட, இங்கே சிலர், முணுமுணுக்கிறார்களாம்; "தமிழ்ஒளி புதுவையில் பிறந்தவர் அல்ல, அயலூரில் பிறந்தவர்" என்று.

அவர்களுக்கு ஒன்றை நினைவூட்டலாம். மதிப்பு மிக்க தலைவர் தோழர் சுப்பையா அவர்களும், புதுவையில் பிறக்கவில்லை. திருவண்ணாமலையில் பிறந்தார் என வேறு சிலரும் சொல்லுகிறார்கள்.

யார், எங்குப் பிறந்த போதிலும் அவரவர் தந்தையர்க்குச் சொந்தமான பூமியே, அவர்களுக்கும் சொந்த பூமியாகும்.

எனவே, புதுவை சாமிப்பிள்ளை பேட்டையில் திரு. பொன்னு சாமியின் மகன் திரு. பொ. சின்னையா அவர்களுக்கு ஒரே வாரிசாகப் பிறப்பெடுத்த திரு. விஜயரங்கம் என்கிற கவிஞர் தமிழ்ஒளி, இந்த மண்ணின் மைந்தர் என அறுதியிட்டுக் கூறுவதில் நமக்குத் தயக்கமோ, சங்கடமோ ஏதுமில்லை.

மேலும், இதை ஒரு பிரச்சினையாக முன்வைக்க யார் முன் வந்தாலும், நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை.

நம்மைப் பொறுத்தவரைக் கவிஞர் தமிழ்ஒளி புதுவைக்கோ, தமிழ் நாட்டிற்கோ மட்டும் உரியவர் அல்ல, இந்தப் பூவுலகிற்கே சொந்தமான புதுயுகக்கவி. உலகப் பட்டாளி வர்க்கத்தின் போர்க்குரலை எதிரொலித்த எழுச்சிக் கவிஞர். தமிழ் மரபுக் கவிதைக்குப் பல புதிய வண்ணங்களைப் படைத்தளித்த வண்ணப் புரட்சிக் கவிஞருமாவார்.

புதுவையில் பிறந்த தமிழ்ஒளி, சென்னையில் வாழ்ந்த காலங்கள் பற்றி என்னைப் பேசுமாறு அழைத்திருக்கிறார்கள். நானும் அதுபற்றியே பேசுவேன்.

நம் கவிஞர் பெருமான் சென்னையில் வாழ்ந்த காலங்கள் பதினெட்டு ஆண்டுகளாகும். அவருக்கும் எனக்கும் நட்பு நிலவிய காலங்கள் பத்து ஆண்டுகள் மட்டுமே!

கரந்தை செந்தமிழ்க் கல்லூரியில் மாணவராயிருந்த நாளில், அவர் எழுதிய **"சிற்பியின் கனவு"** நாடகம், சென்னையில் அரங்கேறுவதைக் காண 1944ல் முதல் முறையாக சென்னையில் காலடி வைத்தவர் நம் கவிஞர்.

அந்த நாடக அரங்கம், சென்னை வால்டாக்ஸ் சாலையில் அமைந்த ஒற்றைவாடை தியேட்டர்!

அந்த வாடையில் இரும்புப் பட்டறைகள் வரிசையாக இருக்கும். அதனை தொடர்ந்து அங்கே பணிபுரியும் கூலித் தொழிலாளர்களின் குடில்களும் வரிசையாகவே காணப்படும்.

வெயிலுக்கும் மழைக்கும் பாதுகாப்பு இல்லாத அந்தக் குடில்களில், வாழ்க்கைக்குப் பாதுகாப்பில்லாத ஏழைமக்களின் அவலம் தோய்ந்த வாழ்க்கைச் சிந்திரங்கள் நம் கவிஞரின் நெஞ்சை உறுத்தின போலும்!

அவர் அதிகம் யோசித்தார். அடுத்தடுத்து, சென்னை வந்த போதெல்லாம், உழைக்கும் மக்களின் வசிப்பிடங்களையே சுற்றிப் பார்த்துச் சென்றார்.

முடிவாக, வர்க்க எழுச்சியைத் தோற்றுவிக்கவும், களப் பணிகளில் ஈடுபடவும் சென்னை நகரமே சிறந்த இடம் எனக் கருதினார். 1945 முதல் சென்னை அவருக்கு நிரந்தர வசிப்பிடமாகிவிட்டது.

இந்தக் கட்டத்தில் ஒன்றைத் தெளிவுபடுத்த வேண்டும்.

கவிஞருக்குக் குடும்பம் இல்லை. உறவினர்களையும் அவர் நாடவில்லை. தனிமனிதனாகவே நடமாடினார். அதே சமயம் நண்பர்கள் குழாம் ஒன்றையும் அவர் அமைத்துக் கொண்டார். அந்தக் குழுவில்,

எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், பதிப்பாளர்கள், இலக்கிய ஆர்வலர்கள், தொழிற்சங்கத் தோழர்கள் எனப் பலரும் இருந்தனர்.

குறிப்பாக, ஜார்ஜ் டவுனில் அவருக்கு நண்பர்கள் அதிகம். தொழிற்சங்கங்களும் அதிகம். தங்கசாலையிலும், திருவொற்றியூரிலும் கட்சித் தோழர்களின் வசிப்பிடங்களும் இருந்தன. இவையெல்லாமே நம் கவிஞருக்கும் வசிப்பிடங்களாய் அமைந்தன.

இத்தகைய ஆதரவான சூழல் இருந்த போதிலும் எந்த ஒரு இடத்திலும் அவர் நிலைத்திருக்க மாட்டார்.

அவருக்குத் தொழில் கவிதை. அவசியம் என எண்ணும்போது கதைகள், கட்டுரைகள், நாடகங்கள் எழுதுவார்.

பத்திரிகைகளுடன் அவருக்குத் தொடர்பு இருந்த போதிலும் எந்த ஒரு பத்திரிகையிலும் அவர் மாத ஊதியத்திற்குப் பணிபுரிந்ததில்லை.

இந்தக் கட்டத்தில், "முன்னணி" ஏடு நம் நினைவுக்கு வரும். அந்தக் காலம் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியை இருள் சூழ்ந்த காலம். கொள்கைப் பிடிப்புள்ள தோழர்களின் உள்ளங்கள் நீறுபூத்த நெருப்பாய்க் கனன்றிருந்த நேரம். கட்சிக் கட்டளையை ஏற்றுத் தோழர் கவிஞர் குயிலன் அவர்களுடன் இணைந்து, முழு அர்ப்பணிப்பு உணர்வுடன் உழைத்தார் நம் கவிஞர். அது உண்மை.

அந்த ஏட்டில் அவர் எழுதியுள்ள அனைத்து எழுத்தோவியங் களுமே தீப்பொறிகளாக, ஒளிப்பிழம்புகளாக இப்போதும் சுடர் விட்டுக் கொண்டிருப்பதை நம்மால் உணர முடியும்.

அந்த உழைப்பு தியாகத்தின் பாற்பட்டது. அதற்கு விலை மதிப்பு கூற முடியாது. அதனால், அந்த உழைப்பை நன்றியுடன் போற்றுதல் செய்ய வேண்டும்.

அன்பர்களே! தமிழ்ஒளியின் உள்ளம் தணலாய் இருந்த போதிலும், தோற்றத்தில் மிகவும் எளியவராகக் காணப்படுவார்.

அவருக்குத் தேவைகள் மிகக் குறைவு. அதனால், பணப்பேய் அவரைப் பற்றவில்லை!

தேவையுள்ளபோது நண்பர்களிடம் பணம் கேட்பார். மறுக்காமல் பணம் கொடுப்பவரிடம் அடுத்தடுத்து பணம் கேட்பார். உதவி என்ற வகையில் பணம் தர மறுப்பவரிடம் வருத்தம் கொள்ளமாட்டார்.

அவருக்கு வசிப்பிடம் நிரந்தரமில்லாததால் தனக்கென பெட்டி - படுக்கை வைத்துக் கொள்ளவில்லை. மாற்றுத்துணிக்கு மேலாக ஆடைகளையும் அவர் விரும்பியதில்லை.

இந்த நடைமுறைகளைக் கவனத்தில் கொண்டால் அவரை ஒரு துறவி எனச் சொல்லத் தோன்றும். அந்தக் கருத்து சரியானதென்றே நானும் கூறுவேன்.

எனக்கும் கவிஞருக்கும் நட்புறவு அரும்பிய ஆண்டு 1954. அந்த உறவு அவருடைய ஆயுள் முடியும் காலம்வரை நிலைத்திருந்தது என நான் உறுதியாகக் கூற முடியும்.

என்னளவில், சராசரி மனித குணங்களுக்கு பெரிதும் மாறுபட்டவர் கவிஞர் என்பதைப் புரிந்து கொள்ள அதிக நாட்கள் தேவைப்பட்டன.

இங்கே, சில நிகழ்ச்சிகளை நினைவு கூர்வது பொருந்துமெனக் கருதுகிறேன்.

நான் சிறிது காலம் எல்.ஐ.சி. முகவராயிருந்தேன். என்னிடம் பாலிசி எடுக்க ஒருவர் வந்தார். அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது கவிஞர் குறுக்கிட்டார். "சார், இந்தத் திட்டத்தில் என்னை சேர்த்துக் கொள்ளுவீர்களா?" "நிரந்தர வருவாய் உள்ளவர்கள்தான் திட்டத்தில் சேர முடியும்" என்றேன்.

"நிரந்தர வருவாய் எதற்கு?"

"தவணைத் தொகையை தவறாமல் கட்ட வேண்டுமே"

"அப்படின்னா, பணம் கட்டினாதான் பாதுகாப்பு கொடுப்பாங்க இல்லையா?"

"அதுதான் திட்ட அடிப்படை"

அப்படின்னா, நான் சேர மாட்டேன்!

கவிஞர் விருப்பப்படி பிரிமியம் செலுத்தாமலே பாலிசி வழங்கும் காலம் வருமா, என்ன?

இன்னொரு செய்தி : ஒரு மாதப் பத்திரிகை கவிதையை அரைப் பக்கத்தில் வெளியிட்டு ஐந்து ரூபாய் சன்மானம் வழங்கி வந்தது. கவிஞர் எதிர்பார்த்திருந்தார். அஞ்சலில் ஏடும், காசோலையும் வந்தன. அந்தக் காசோலையைக் கையில் பிடித்தபடி:"என்னசார், ஒரு கவிதைக்கு விலை ஐந்து ரூபாயா, வெட்கக்கேடு. ஒரு கவிதை எழுதினால் ஒரு கார் வரவேண்டும். ஒரு பங்களா வரவேண்டும்" என விறைப்பாகப் பேசினார். நானும் புரியாமலே கேட்டேன், "அது, எப்படி சார், வரும்?"

கவிஞர் சொன்னார்: "நீங்கள் இலக்கியத்தில் படிக்கவில்லையா, புலவர்கள் பாடிய பாடலுக்குப் பொன்னும் பொருளும் வழங்கி அவர்களை யானை மீது ஏற்றி வழியனுப்பிவைத்த தமிழ் மன்னர்கள் வாழ்ந்த பூமியல்லவா, இது?"

உண்மைதான். இது இருபதாம் நூற்றாண்டு என்ற நினைவு கவிஞருக்கு மறந்து போய்விட்டதே!

மேலும், ஒரு செய்தியைச் சொல்லுகிறேன் கேளுங்கள்:

ஒருநாள் மெரீனா கடற்கரைக்குச் சென்றார், கவிஞர். அந்தி சாய்ந்த நிலையில், கடலில் எழுந்த முழுநிலைவைக்கண்டு பரவசப்பட்டார். அன்று நிறைமதி நாள். வெகுநேரம் இருந்து விட்டார். இருண்ட இருட்டில் ஒளி நிலவு உற்சாகம் தந்தது போலும்! கற்பனையில் ஆழ்ந்த கவிஞர், கண்ணயர்ந்து போனார்.

நள்ளிரவில், யாரோ அதட்டும் குரல் கேட்டு கண்விழித்துப் பார்த்தார். இரண்டு காவலர்கள் எதிரில் நிற்பது தெரிந்தது. அவருக்குப் புரியவில்லை. புரியும்படி அவர்கள் கேட்டனர்:

"நீ, யார், எங்கே வந்தே, ஏன்படுத்துத் தூங்கினே". இது அவர்கள் விசாரணை.

''கடற்கரையில் படுத்து இயற்கையை அனுபவிக்கவும் உரிமையில்லாத நாட்டில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்". மனம் குமுறினார் கவிஞர்.

காவலர்கள், அவரை "நட, ஸ்டேஷனுக்கு" என அழைத்துப் போயினர்.

வழி நடையிலும் விசாரணை தொடர்ந்தது. தொழிலைக் கேட்டனர் "கவிதை" என்றார். அவர்களுக்கு அது புரியவில்லை. "பாட்டு" என விளக்கினார். பாடச் சொன்னார்கள். ஒரு பாட்டையும் பாடிக் காட்டினார். அவர்கள் தலையாட்டினர். கவிஞர் சொன்னார். "இந்தப் பாட்டெல்லாம் பத்திரிகைளில் வெளிவரும்".

"பத்திரிகையா, என்ன பத்திரிகை"

"சுதேச மித்திரன், ஜனசக்தி, தமிழ்நாடு" இதைக் கேட்டதும் காவலர்களின் குரலில் மரியாதை தொனி ஒலித்தது. இனி தன்னை விட்டுவிடுவார்கள் எனக்கருதி, "நான் போகலாமா?" என்றார்.

"வேணாம்யா, விடியறவரை ஸ்டேஷனிலே படுத்திரு. இப்ப போனா, வேற போலீஸ்காரங்க உன்னை பிடிச்சுப் போய் கேசு போட்டாலும் போட்டிடுவாங்க."

அவர்கள் சொன்னபடி, புதிய ஆபத்தில் சிக்காமல் இருக்க, அந்த இரவை அங்கேயே போக்கினார். விடிந்ததும் அவருக்குத் தேநீர் வாங்கிக் கொடுத்து காவலர்கள் வழியனுப்பி வைத்தனர்.

இந்தச் சம்பவம் நடந்த ஆண்டு 1956. கவிஞர் இரவைப் போக்கிய இடம் சென்னை ஜாம்பஜார் காவல் நிலையம்.

அன்பர்களே! சென்னை வாழ்க்கையில் இதுபோன்ற பல சம்பவங்களும் நடந்துள்ளன. அவருடன் நெருங்கிப் பழகியவர்களுக்கு இந்த உண்மைகள் தெரிந்திருக்கும்.

பரந்து விரிந்த இந்த உலகத்தைப் பார்க்கவும், இயற்கையை ரசிக்கவும், சிந்திக்கவும், அவருக்கு அமைந்த வசிப்பிடங்கள் போதுமானதாயில்லை. அந்தக் குறைபாட்டைப் பூங்காக்களும், கடற்கரையும்தான் ஈடுசெய்தன.

தமிழ் ஒளியின் படைப்புக்கள் எப்படிப்பட்ட சூழ்லில் கருக்கொண்டன. எவ்வாறு இலக்கிய வடிவம் பெற்றன என்பதை அறிய விரும்பும் ஆய்வாளர்கள் இந்தச் செய்திகளையும் மனதில் கொள்ள வேண்டும்.

கவிஞரைப் பொறுத்தவரை தன்னுடைய சந்தோஷத்தைவிட, மக்கள் படும் துன்பங்கள் பற்றித் தெரிந்து கொள்ளவே அதிகம் விரும்புவார். நாட்டு நடப்புகளைக் கூர்ந்து நோக்குவார். தொழிலாளர் பிரச்சினைகள், விலைவாசி உயர்வு, ஆளும் வர்க்கத்தினர் செய்யும் அட்டூழியங்கள், புதிய பணக்காரர்களின் போலித்தனங்கள் - இதையெல்லாம் கவிதைகளில் பதிவு செய்தவர் தமிழ்ஒளி.

கவிஞருடைய வாழ்க்கையில் நேர்ந்துள்ள திருப்பங்கள் பற்றித் தெரிந்து கொள்ளப் பலரும் விரும்புகிறார்கள். அதுபற்றிச் சில சொல்லுவதும் அவசியம்தான்.

கட்சி வாழ்க்கையில் தொடர்புடைய ஒரு குடும்பத்துப் பெண்ணை அவர் காதலித்தார். அந்தக் காதல் கைகூடவில்லை. அதன் காரணமாகப் பலதுன்பங்களுக்கும் ஆளானார். ஆழமான மனப்புண்களையும் ஏற்றார். இந்தப் பாதிப்புகளை அவருடைய **"கோசலைக்குமரி" "கண்ணப்பன் கிளிகள்"** காவியங்களில் காணலாம்.

இன்னொரு செய்தி. கட்சி வாழ்க்கையில் கவிஞருக்கு நேர்ந்த மனக்குறைகள் பற்றியும் சில சொல்லத்தான் வேண்டும்.

"மாதவி காவியத்தின்" பதிப்புரிமையை நான்பெற்ற பிறகு. முதல் கட்டமாக, மேதினப்பாடலையும் வேறு சில பாடலையும் சேர்த்துச் சிறு நூலாக வெளியிட அனுமதி கேட்டேன். கவிஞர் சொன்னார்:

"அதையெல்லாம் மறந்து விடுங்கள். 1954க்குப் பிறகு நான் எழுதியுள்ள கவிதைகள் மட்டுமே என் பெயரில் வெளிவர வேண்டும்" என்றார். நான் திடுக்குற்றேன். அவர் மேலும் சொன்னார்:

"நான் கழக ஏடுகளில் எழுதிய கவிதைகளைக் கழகப் பேச்சாளர்கள், மேடைகளில் மேற்கோள் காட்டிப் பேசியதை என்னால் கேட்க முடிந்தது. இங்கே, என்னுடைய எந்தக் கவிதையும் கட்சி மேடைகளில் ஒலிப்பதை என்னால் கேட்க முடியவில்லை. மேதினப்பாடலை எவ்வளவு ஆர்வத்துடன் எழுதினேன். அதை அடியோடு மறந்து விட்டார்களே"

"இப்ப, எல்லாமே சினிமாப்பாட்டுத்தான் பெரும்பாட்டாப்போச்சு. நானும் சினிமாவுக்குப் பாட்டெழுதி பணம் சேர்ந்திருந்தால் என்னையும் பாராட்டி மலர் போட்டிருப்பார்கள். அந்த வழிக்கு நான் போகவில்லை. எண்ணங்களை இலக்கியத்தில் பதிவு செய்தேன். அது விழலுக்குப் பாய்ச்சிய நீராகிவிட்டது."

அருமைத் தோழர்களே!

கவிஞர் அடைந்த மனவருத்தம் ஆழமானதுதான். அந்நாளில் படைப்பு இலக்கியங்களைவிட, மொழிபெயர்ப்பு இலக்கியங்களையே பெரிதுபடுத்திப் பேசிவந்தனர். இந்த நிலைப்பாடுதான் நம் கவிஞரைப் பாதித்தது.

நானும். கவிஞரின் மனநிலையைப் புரிந்துகொண்டு. அந்தக் கவிதைகளை அப்போது வெளியிடவில்லை. அவர் மறைந்த பின்னும் காலம் தாழ்த்தியே அவற்றை **"மக்கள் கவிதைகள்"** என்ற தலைப்பில் வெளியிட முன்வந்தேன்.

அதன் பின்னரும், என்னுடைய தூண்டுதலால்தான் மேதினக் கவிதையும், நவம்பர் புரட்சிக்கு நல்வாழ்த்துக் கவிதையும் "ஜனசக்தி" ஏட்டில் மறுபிரசுரமாயின.

இன்றுள்ள இளைய தலைமுறை கம்யூனிஸ்ட் தோழர்கள், தமிழ்ஒளி எந்த அணியில் இருந்தார் எனக் கேள்வி எழுப்புவதில்லை. "தமிழ்ஒளி நம்மவர், நமக்கே உரியவர்" என உளப்பூர்வமாக உரிமை பாராட்டுகின்றனர். இந்த நிலை நம்மை மெய்சிலிர்க்க வைக்கிறது. அவர்களை நாம் பாராட்டுகிறோம்.

உழைக்கும் வர்க்கத்தினரிடையே போர்க்குணம் மங்கியுள்ள இந்த கால கட்டத்தில், தமிழ் ஒளியின் புரட்சிகரமான கவிதைகளை மக்களிடம் கொண்டு செல்வது மிகுந்த பயன் விளைக்குமென நான் கருதுகிறேன்.

கவிஞரின், **நிலைபெற்ற சிலை, வீராயி, மக்கள் கவிதைகள், உயிரோவியங்கள்,** அனைத்துமே மக்கள் இலக்கியங்களாகத் திகழ்பவை. அவற்றைப் போற்றிக் காப்பது கம்யூனிஸ்டுகளின் கடமை!

மேலும், அவருடைய கவிதைப் படைப்புகள் பலவும் காலத்தை வென்று நிலைத்திருக்கும் தகுதி படைத்தவை என்று, அமரர் டாக்டர் மு. வரதராசனார், பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார் போன்ற தமிழ்ச்சான்றோர்கள் கூறியுள்ள கருத்துக்களும் நம் நெஞ்சங்களில் நிறைந்துள்ளன.

இன்று-இங்கு, நடைபெறும் கருத்தரங்கம் நம் கவிஞரை மேம்படுத்தும் வகையில் வலுவான எண்ணங்களை வெளிப்படுத்தும் என உறுதியாக நம்புகிறேன்.

அறிஞர் பெருமக்கள் நிறைந்த இந்த அரங்கில், மிக எளிய மனிதனாகிய எனக்கும் பேச வாய்ப்பளித்த புதுவை முற்போக்கு எழுத்தாளர் சங்கத் தோழர்களுக்கு நன்றிகூறி விடை பெறுகிறேன்.

**வணக்கம்.**




1999 — கவிஞருக்கு நாம் எடுத்த 75ம் அண்டு 'பவள விழா' நினைவாக வெளியிடப்பட்ட நூலின் முகப்போவியம்

# புதுவை நோக்கி

தமிழ்வானில் வானம்பாடியாய் வலம் வந்தவர். கவிஞர் தமிழ்ஒளி. அவர் மறைந்த பின்னர், நட்புக்கடனாக நான் செய்ய வேண்டியது குறித்துச் சிந்தித்தேன். நண்பர்களுடனும் கலந்து பேசினேன். விளைவாக, புதுவை சென்று கவிஞர் குடும்பத்தாரைச் சந்தித்துப் பேசி வருவதென முடிவு செய்தேன்.

அதன்படி, புதுவை சென்றேன். அங்கே, மிஷன் தெருவில் வசித்து வந்த நண்பர் ஏழுமலை அவர்களைக் கண்டுபேசிப் பயணத்தின் நோக்கத்தை விளக்கினேன். பிறகு, அவரும் நானும் ஒரு புகைப்படக் காரரை உடன் அழைத்துக் கொண்டு, சாமிப்பிள்ளை தோட்டத்திற்குச் சென்றோம். தமிழ்ஒளியின் தந்தையார் மற்றும், குடும்பத்தினரைச் சந்தித்து அறிமுகம் செய்து கொண்டோம்.

தமிழ்ஒளி சென்னையில் வாழ்ந்த நாட்களில் அவரது அன்னையார் இங்கு வந்து போனதும், இளைய சகோதரியும் மைத்துனரும் இரண்டு முறை இங்கு வந்து கவிஞரை அழைத்துச் சென்றுள்ள விவரமும் குடும்பத்தார் அறிந்தவையானதால், என்னை அடையாளம் காண்பதில் சிரமம் எழவில்லை.

தமிழ் ஒளியின் தந்தையார் என் கைகளைப் பற்றிக் கொண்டு கண்ணீர் விட்டார். "பட்டணத்துக்குப் போனபிள்ளை, எப்படியெல்லாமோ வாழ்ந்திருக்குமென நினைத்தோம். அங்கே வந்து பார்த்தவங்க சொன்ன பிறகுதான் உண்மை தெரிந்தது. அறிவைக் கொடுத்த ஆண்டவன், நல்லபடியா வாழவைக்கலையே. நீங்க என் பிள்ளைக்கு நல்லது செய்து இருக்கீங்க. உங்களுக்குப் புண்ணியம் சேரும்."

அவர் வாழ்த்தியதை ஏற்றுக்கொண்டு, சம்பிரதாயத்துக்காக நானும் ஆறுதல் கூறினேன். உண்மையில் அந்தக் குடும்பத்தின் நிலை எண்ணி வேதனையுற்றேன்.

கவிஞர், குடும்பத்தின் வாரிசாகப் பிறந்த ஒரே பிள்ளை. அவர் தானும் வாழ்ந்து, குடும்பத்தாரையும் வாழ வைத்திருக்க வேண்டும். பெற்றவர்கள் எதிர்பார்ப்புகள் எதையும் அவர் ஈடு செய்யவில்லை. மாறாக, அவர்களின் முன்பாகவே தன் இன்னுயிரை நீத்ததும் கொடுமையே!

தமிழ்ஒளியின் வாழ்க்கை பல சோதனைகளைப் பின்னணியாகக் கொண்டது. அவைகளின் ஊடே அவர் சாதித்துள்ளவையும்

அதிகம்தான். தமிழின் பேறாகப் பிறந்துவிட்ட அப்பெருமகனார், தமது பெற்றோர்கள் பெயர்களையும் நம் நினைவுக்கு விட்டுச் சென்றுள்ளாரே. இதுவும் ஒரு சாதனை யல்லவா? உண்மைதான்.

**"மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி 'இவன் தந்தை**
**என்னோற்றான் கொல்' எனும் சொல்!"**

- என்ற வள்ளுவர் வாக்கினை அவர் மெய்ப்பித்துவிட்டார். நாமும் அந்தப் பெருமையை உணர்ந்துதானே புதுவையை நாடிச் சென்றோம்.

பெரியவருடன் பேசிக்கொண்டே மயானம் வரை சென்று, கவிஞர் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் அஞ்சலி செலுத்தினோம். பின்னர், அவர் தம் இறுதி மூச்சு அடங்கிய குடிலுக்குப் போனோம். அங்கேயிருந்த இளைய சகோதரியார் என்னைக் கண்டதும் கண்ணீர் விட்டபடியே,

"இங்கே தான் அண்ணன் உயிர் விட்டது. கடைசி நேரத்தில் கதறி அழுதார். உங்க பேரை சொல்லிச் சொல்லி சுவத்திலே முட்டிக் கொண்டார். அப்போ சுவத்திலே பதிந்த நகக்கீறல் அப்படியே இருக்கு" எனச் சுட்டிக் காட்டினார். உடனிருந்த புகைப்படக்காரர் அந்தக் கீறலையும் குடிலையும் படம் பிடித்தார்.

பிறகு, பெரியவர் **திரு. பொ. சின்னையா** அவர்களுடன் பேசினோம். "அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் கல்லறை கட்டலாமா, என்ன செலவாகும்" எனக் கேட்டோம். அவர் சொன்னார், "அதெல்லாம் செய்யணும்னா, நீங்க வந்து, இங்கே தங்கியிருந்துதான் செய்ய வேண்டும் சொந்தக்காரர்கள் நல்லவங்களா இல்லே, எங்களை எதுவும் செய்யவிட மாட்டாங்க".

"அவர் சொல்வது சரிதான்" என்றார் உடன் வந்த நண்பர். அங்குள்ள சூழ்நிலை அப்படிப்பட்டதுதான். தங்களை மீறிய ஒரு கவுரவம் அடுத்தவரை அண்டாதபடி பார்த்தக் கொள்வார்களாம்.

அங்கு நிலவிய "சூழல்" பற்றிச் சில சொல்லுவோம். "சாமிப் பிள்ளைத் தோட்டம்" என்ற பெயருக்கு ஏற்ப, அங்கேயிருந்த தென்னந்தோப்பில்தான் தமிழ் ஒளியின் குடில் அமைந்திருந்தது. கவிஞரைப் பற்றியிருந்த காசநோய் பிறரைப்பற்றிவிடுமோ என்ற அச்சத்தில் தனியாக ஒரு கூரை வீட்டில் அவரை இருக்க வைத்தனர். அடுத்தடுத்து ஏழை எளியவரின் குடில்கள் இருந்தன. வறுமையின் பங்களிப்பில் எல்லோரும் சமமாக வாழ்ந்தனர். பெரும்பாலோர்க்கு வைத்தியமே தொழில். சிலருக்கு ஆலையில் வேலை. வேறு சிலருக்குக்

கூலி வேலைதான் கதி. அதிகம் படிக்காத மக்கள் கூட்டம் குதர்க்கப் பேச்சுக்களுக்குக் குறைவிருக்காது என்றார் நண்பர்.

"செத்தவர்க்குக் கல்லறை கட்டுவதைவிட, இருப்பவர்க்கு ஏதாவது கொடுங்கள்" என்பார் கவிஞர். இந்த நினைவு வந்ததும், அடுத்து செய்வது பற்றிப் பேசினோம்.

"தமிழ் ஒளிக்கு மெய்யான நினைவுச்சின்னம் கல்லறை அமைப்பதல்ல, அவர் எழுதிய கவிதைகளை மக்கள் முன் வைப்பதுதான். சரியான நினைவுச் சின்னம். அவர் காலத்தில் வெளிவந்த கவிதை நூல்கள் எதுவுமே மறுபதிப்புகளாக வெளிவரவில்லை. இந்நிலையில், ஏடுகளில் வெளிவந்துள்ள தனிக்கவிதைகளைத் திரட்டி தொகுப்பு நூலாக வெளியிடலாமெனக் கருதுகிறேன். அந்த முயற்சிக்கு உங்களுடைய அனுமதி வேண்டும்" என்றேன்.

"அய்யா, நீங்கள் நினைப்பதுபோலவே செய்யுங்கள் நீங்கள் எது செய்தாலும் நல்லதாகத்தான் இருக்கும்".

பெரியவர் ஒப்புக் கொண்டதை யடுத்து, முறைப்படி முத்திரைத்தாள் வாங்கி வந்து, "தமிழ்ஒளியின் கவிதைகளைத் தொகுத்து வெளியிட உரிமை அளிக்கிறேன்" எனத் தெளிவுபட எழுதி அவருக்குப் படித்துக் காட்டினோம். அவரும் மனப்பூர்வமாக ஒப்புதல் அளித்து முத்திரைத் தாளில் கையொப்பமிட்டார்.

நாங்களும் குறிப்பிட்டுச் சொன்னபடி ஒரு தொகையை அவரிடம் கொடுத்து விட்டு விடை பெற்றுக் கொண்டோம். அவரும், சென்னைக்கு வந்து என்னைச் சந்திப்பதாகக் கூறி வழியனுப்பி வைத்தார்.

இந்நிகழ்வுகள் 1965 ஜூன் திங்களில் நடந்தது. அதன் பின்னரே கவிதைகளைத் திரட்டும் பணியில் நான் தீவிரம் காட்டினேன். அந்த முயற்சியில் எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் பற்றிய செய்திகளை இனிக் கூறுவேன்.

# கவிதைகளைத் தேடி

கவிதைகளைத் தேடும் முயற்சியில் நான் இறங்கியதும், முதலில் **"கலைமகள்"** அலுவலகத்தில் தான் காலடி வைத்தேன். அங்கே, **"கண்ணன்"** ஆசிரியர் **திரு. ஆர்.வி.**யிடம் எனக்கு அறிமுகம் உண்டு. அவர் வாயிலாகத் **திரு. கா.ஸ்ரீ.ஸ்ரீ., திரு. த.நா சேனாபதி** ஆகியோரைச் சந்தித்தேன். அவர்கள் அன்புடன் உதவினர். திரு.சேனாதிபதி அவர்கள், **"தமிழ்ஒளி எங்கள் ஆஸ்தான கவிஞர் ஆயிற்றே"** என்றார். நான் பெருமிதம் உற்றேன். திரு.கா.ஸ்ரீ.ஸ்ரீ. அவர்கள் தமிழ்ஒளியின் கவிதைகள் வெளிவந்துள்ள "கலைமகள்" ஏட்டுப் படிகளைக் காட்டி, "குறித்துக் கொள்ளுங்கள்" என்றார்.

நான், அவ்வேடுகளைப் பார்வையிட்டு, என்னிடம் இல்லாத "கார்த்திகை விளக்கு", "நேரு இல்லாத இந்தியா" என்ற இரு கவிதைகளை மட்டும் குறித்துக் கொண்டு நன்றி கூறிவிட்டுத் திரும்பினேன்.

அடுத்து ஒருநாள் **"அமுதசுரபி"** அலுவலகம் சென்று என்னிடமில்லாத நான்கு கவிதைகள், இரண்டு ஏடுகளில் வெளிவந்துள்ள குட்டிக் கதைகளைக் குறித்துக் கொண்டு திரும்பினேன்.

அதனைத் தொடர்ந்து வாரத்தில் இரண்டு, மூன்று தினங்கள் பத்திரிகை அலுவலகங்களுக்குச் சென்று கவிதைகளைத் திரட்டி வந்தேன்.

பல இடங்களில் ஒத்துழைப்புக் கிட்டியது. ஒருசில இடங்களில் இடர்ப்பாடுகள் நேர்ந்து உழைப்பே வீணானது.

ஆசிரியர் **விந்தன்** அவர்களுடன் மல்லிகை பதிப்பகத்திற்குச் சென்றேன். அதன் உரிமையாளர் **திரு. எஸ். சங்கரன்** அவர்கள் என்னை அறிந்திருந்தார் போலும்! புன்முறுவலுடன் வரவேற்றார். விந்தன் அறிமுகம் செய்தனர். திரு. சங்கரன் சொன்னார்: "நல்ல முயற்சிதான். சிறப்பாகவே செய்யட்டும். அன்று ஓலைச்சுவடிகளைத் தேடி "உ.வே.சா." அலைந்தது போல, இன்று தமிழ்ஒளியைத் தேடி "செ.து.ச." அலைகிறார்! எனக் கேள்விப்பட்டேன். இவரைப்பற்றி தமிழ்ஒளி சொல்லியிருக்கிறார்."

எனக்கு ஆறுதலாய் இருந்தது. திரு. சங்கரன் அவர்கள் நடத்திவந்த **"அலை ஓசை"** பற்றிக் கேட்டேன். நாளை வாருங்கள் எடுத்து வைக்கிறேன் என்றார்.

அன்று மாலை பாரீஸ் சென்று ஜீவபந்து திரு. **ஸ்ரீபால்** அவர்களைச் சந்தித்தேன். அவர் **"நல்லறம்"** ஏட்டுப்படிகளை என்னிடம் கொடுத்தார். கவிதைகளை மட்டும் எழுதிக் கொண்டு வந்தேன்.

மறுநாள் திரு. சங்கரன். அவர்களைச் சந்தித்தேன். அவர் அளித்த **"அலை ஓசை"** ஏட்டுப்படிகளிலிருந்த கவிதைகளை எழுதிக் கொண்டேன். திரும்புகையில், தாம் வெளியிட்ட, தமிழ் ஒளி எழுதிய மூன்று நூல்களையும் கொடுத்து இவற்றையும் நீங்கள் வெளியிட்டுக் கொள்ளலாமென்றார்.

நான் பணம் தருவது பற்றிப் பேச்செடுத்தேன். அவர், "அது தேவையில்லை. உங்களுடைய முயற்சிகளுக்கு முன்னால் இது பெரியது அல்ல" என்றார். நன்றி கூறித் திரும்பினேன்.

நாளேடுகள் வரிசையில், **ஜனசக்தி - சுதேச மித்திரன் - தமிழ்நாடு** ஏடுகளில் கவிதைகளைத் தேடிப் பெற முயன்றேன்.

"தமிழ்நாடு" மதுரைக்கு மாற்றலாகி விட்டது. "சுதேசமித்திர"னில் சில கவிதைகளைக் கண்டெடுத்தேன். "ஜனசக்தி" அலுவலகம் உரிமை யுள்ள இடமாகப் பாவித்து அணுகினேன். தொடர்ந்து சில நாட்கள் கவிதைகளைச் சேகரித்துக் கெண்டிருந்தபோது, ஒருவர் குறுக்கிட்டு, முறைப்படி அனுமதி கேட்டுக் கடிதம் தர வேண்டுமென்றார். மறுதினமே கடிதம் அனுப்பினேன். சரியாக ஒருவார காலத்தில், "ஜனசக்தி" அலுவலகப் பொறுப்பாளர் **தோழர் கே. பாலதண்டாயுதம்** அவர்கள் அனுமதி வழங்கி எனக்குக் கடிதம் எழுதினார். அதனை ஏற்று "ஜனசக்தி"யை நாடி வாரத்தில் நான்கு நாட்கள் சென்று வந்தேன். எனக்குக் கிடைத்த கவிதைகள் அனைத்துமே 1954க்குப் பிறகு எழுதப்பட்டவைதாம். பழைய ஏடுகள் ஏதும் அங்கு காணப்படவில்லை.

அதுவரை திரட்டிய கவிதைகளை ஆராய்ந்து பார்த்ததும், அவற்றை இரண்டு தொகுதிகளாகத்தான் வெளியிட வேண்டுமென்றும் முதல் தொகுதியை **"தமிழ்ஒளியின் கவிதைகள்"** என்ற தலைப்பிலும், இரண்டாவது தொகுதியை **"மக்கள் கவிதைகள்"** என்ற தலைப்பிலும் வெளியிடுவதென முடிவு செய்தோம்.

ஒரு தொகுதி என்பது குறைந்த பட்சம் பத்துபாரமாவது இருக்க வேண்டும் (அதாவது 160 பக்கம்). முதல் தொகுதிக்குத் தேர்ந் தெடுக்கப்பட்ட கவிதைகள் போதுமானதாயில்லை. வேறு கவிதைகளைத் தேடினோம். **"புத்தர் பிறந்தார்"** கையெழுத்துப் படி நினைவுக்கு வந்தது. அவ்வேடு, சேகர் பதிப்பகத்தில் இருந்தது. திருவாளர் **வெள்ளையாம்பட்டு சுந்தரம்** அவர்கள், தியாகராய நகரில் இருந்த

**"பாரதம்"** அச்சகத்திற்கு வருகை புரிவதை அறிந்து. **தோழர் எம்.எஸ். கண்ணன்** அவர்களுடன் சென்று திரு. சுந்தரத்திடம் பேசினேன். அவர் மறுத்து விட்டார்.

அடுத்து ஒருநாள். திரு. விந்தன் அவர்களை அழைத்துக் கொண்டு. மண்ணடியில் உள்ள **சேகர் பதிப்பகத்திற்குச்** சென்றோம். திரு. சுந்தரம் இருந்தார். ஆசிரியர் விந்தன் அவர்களை மரியாதையுடன் வரவேற்றார். என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்து **"புத்தர் பிறந்தார்"** கையெழுத்துப்படி குறித்துப் பேசினார்.

திரு. சுந்தரம் மறுப்பு எதுவும் கூறாமல். கையெழுத்துப் படியினை எடுத்துக் கொடுத்தார். கவிஞருக்கு அவர் அளித்த தொகையும். பிளாக் செய்த வகைக்கு ஆன செலவினையும் கொடுத்தால் போதும் என்றார். அவ்வாறே அத்தொகையினை அவரிடம் அளித்துவிட்டு நூற்படியினைப் பெற்று வந்தோம்.

அதன் பின்னர். முதல் தொகுதியினை அச்சகத்திற்குக் கொடுத்தோம். நூல் அச்சாகி வந்த நிலையில். **கவிஞர் தே.ப. பெருமாள்** அவர்கள் தாமாகவே முன்வந்து **''கண்ணப்பன் கிளிகள்''** கையெழுத்துப்படியினை நம்மிடம் அளித்தார். உரிய தொகை கொடுத்துப் பெற்றுக் கொண்டோம். அதனைத் தனி நூலாகவும் அச்சிட்டோம்.

பதிப்பகத்துறை எனக்குப் பரிச்சயமில்லாத துறை. ஆசிரியர் விந்தன் அவர்களே எனக்கு வழிகாட்டி நூல்கள் இரண்டும் அச்சாகிக் கொண்டிருந்தபோது "முன்னுரை" பற்றிய பேச்சு எழுந்தது.

"இலக்கிய படைப்புகள் நிலைத்திருக்க. தக்காரின் முன்னுரை அமைவது அவசியம்" என்றார் விந்தன். அவர் விருப்பப்படியே. அவ்விரு நூல்களுக்கும். **டாக்டர் மு. வரதராசனார், கி.வா.ஜகந்நாதன்** ஆகியோர் முன்னுரைகளைப் பெற்று நூல்களை வெளியிட்டோம். அதே வேகத்தில் **"பாடு பாப்பா"** என்ற தலைப்பில் ஒரு சிறு நூலினை அச்சிட்டு முதுபெரும் எழுத்தாளர் **திரு. தி.ஜ.ர.** அவர்களிடம் முன்னுரை பெற்று வெளியிட்டோம்.

இந்த மூன்று நூல்களும் 1966 இறுதியிலும். 1967 தொடக்கத்திலும் வெளிவந்தன.

நூல்கள் அச்சாகி வந்தபோது. விற்பனை முகாந்திரம் பற்றி யோசித்தார் விந்தன். **"பாரி நிலைய"** உரிமையாளரைச் சந்தித்து விற்பனை உரிமைக்கு நூல்களை ஏற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். அவரிடம் ஒப்புதல் பெற்று மூன்ற நூல்களிலும் விற்பனை உரிமை **"பாரி நிலையம்"** என அச்சிட்டோம்.

# தமிழ்ஒளியின் தந்தை

புத்தகங்கள அச்சிட்டு முடிந்த நிலையில் (1966) புதுவை யிலிருந்து தமிழ்ஒளியின் தந்தை திரு. பொ. சின்னையா அவர்களும், அவருடைய தம்பி மகளும் சென்னை வந்தனர். அமைந்த கரையில் உறவினர் வீட்டில் தங்கினர்.

அவர்கள் என்னைக் காண வந்தபோது, அன்புடன் உபசரித்து அச்சிட்ட புத்தகங்களை அவர்களிடம் கொடுத்தேன். புத்தகங்களைப் பார்த்துப் பெரியவர் ஆனந்தக் கண்ணீர் விட்டார்.

கவிஞருக்கு நினைவிடம் கட்டுவது பற்றி நானாகவே பேச்சுக் கொடுத்தேன். "இப்போது உள்ள நிலையில் புதுவை வந்து நான்கு நாட்கள் என்னால் தங்க முடியாது. மேலும், கல்லறை எழுப்புவது பழைய வழக்கம். அது நம் கவிஞர் கொள்கைக்கு ஏற்றதுமல்ல. வேறு ஏதாவது செய்வோம்" என்றேன்.

பெரியவர் மறுப்பு சொல்லவில்லை. அவருக்குத் தேவையான இரண்டு வேட்டி - இரண்டு சட்டை - இரண்டு துண்டுகள் வாங்கிக் கொடுத்தேன். அத்துடன் கொஞ்சம் பணமும் கையில் கொடுத்து வழியனுப்பி வைத்தேன்.

சில மாதங்களுக்குப் பிறகு, கவிஞருடைய சிறிய தாயார் எனக் கூறிக் கொண்டு ஒரு அம்மையார் வந்தார். பெயர் பூரணி அம்மாள்.

நான் புதுவை சென்றிருந்த போது அவர் என்னைப் பார்க்க வில்லையாம். பம்பாய் சென்றிருந்தாராம். "உங்களைப் பார்த்துவிட்டுப் போகலாம்னு" வந்ததாகக் கூறினார். வழிச் செலவுக்குப் பணம் கொடுத்து அனுப்பி வைத்தேன்.

1967 மார்ச் 17ம் நாளன்று கவிஞரின் தந்தையார் திரு.பொ. **சின்னையா** அவர்கள் காலமானார் என்ற செய்தி எனக்கு வந்தது.

அந்தச் செய்தி வந்த ஓரிருமாதங்களின் பின், தமிழ்ஒளியின் உடன்பிறந்த சகோதரி எனக் கூறிக்கொண்டு ஒருவர் வந்தார். முகச்சாயல் பொருந்தியிருந்தது. ஆறுதல் கூறி கைச் செலவிற்கும்/பணம் கொடுத்து வழியனுப்பினேன்.

# பிரச்சினைக்கு உரியவர்கள்

இந்த மூன்று நூல்களும் வெளிவந்த பின்னர், அவற்றை வாங்கிப் படித்து, பாராட்ட வேண்டியவர்கள், நூலை முழுவதும் படிக்காமலே என்னைப் பற்றிய விமர்சனத்தை பரப்பி விட்டனர். அந்த விமரி சனத்திற்கும் இரண்டு செய்திகள் காரணமாகத் தெரிந்தன.ஒன்று பதிப்புத்துறைக்குச் சம்பந்தமில்லாதவர் சஞ்சீவி என்பது. இரண்டு, கவிஞர் பற்றிய வாழ்க்கைக் குறிப்பில் என்னைப்பற்றி நானாகக் கூறிக் கொண்ட செய்தி.

முதல் செய்தியைச் சகித்துக் கொண்டாலும், இரண்டாவது செய்தியை ஏற்க முடியுமா என வினா எழுப்பினர். எனக்கும் அது நியாயமாகவே தோன்றியது. ஆனால், அந்தச் செய்தியைக் குறிப்பிட்டது நானல்ல, ஆசிரியர் விந்தன் அவர்களே என்பதை நான் எடுத்துச் சொன்ன பிறகும் ஏற்க மறுத்தனர்.

அப்படி மறுத்து முகம் சுளித்தவர்கள் வறட்டுக் கவுரவம் பேசுபவர்களாக மட்டுமன்றி, இலட்சியவாதிகளாகவுமிருந்தனர். அதுவே எனக்கு வியப்பளித்தது.

அவ்விரு தரப்பினருக்கும் ஆறுதலாக அமையுமே எனக்கருதி அந்தச் செய்தியைக் கவிதை தொகுப்பின் இரண்டாம் பதிப்பினை வெளியிட்டபோது நானாகவே விலக்கிவிட்டேன்.

இப்போது, அந்தச் செய்தி என்னவென்பதைச் சொல்லிவிடுகிறேன்; படியுங்கள்.

நூலை அச்சிடும்போது முதல் பாரத்தை முன்னுரைக்காகவும் பதிப்புரைக்காகவும் ஒதுக்கிவிட்டு மற்ற பகுதிகளை அச்சிடுவதே வழக்கமாம். அவ்வாறே நாங்களும் அச்சிட்டுவிட்டோம். எதிர்பார்த்தபடி முன்னுரை நீளமாக அமையவில்லை. டாக்டர் மு.வ. முன்னுரை இரண்டே பக்கங்களில் அடங்கிவிட்டது. நான் எழுதியிருந்த "கவிஞர் வாழ்க்கைக் குறிப்பும் நாலே பக்கங்களில் அடங்கின. எஞ்சிய நான்கு பக்கங்களில் எதைச் சேர்ப்பது என்பது பிரச்சினையாக எழுந்தது. அச்சகத்தாரும் அவசரப்படுத்தினர். எனக்கு அச்சக அனுபவ மில்லாததால், வேறு கோணத்தில் சிந்திக்கத் தோன்றவில்லை. **ஆசிரியர் விந்தன் அவர்களே "வாழ்க்கைக் குறிப்புகளுக்கு" முன் பகுதியாக தமது கருத்துக்களை எழுதி நான்கு பக்கங்களையும் நிரப்பினர்.** அவர் எழுதிய அந்தச் செய்திகள் பிரச்சினையை உருவாக்கியது.

அச்சாகும் போதே நான் மறுப்பு தெரிவித்தேன். ஆசிரியர் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. **"நம்மைப்பற்றி நாம்தான் சொல்லிக் கொள்ள வேண்டும் பிறர் சொல்லுவார்களென எதிர்பார்க்கக் கூடாது"** என்றார். அப்படி அவர் சொன்ன செய்தி **"பாடிப் பறந்த பாவாணர்"** என்ற தலைப்பில் உள்ள கட்டுரையின் முற்பகுதியாக அமைந்தது.

இங்கே மொழி நடை வேறுபடுவதை உணர்ந்தாலே உண்மை விளங்கிவிடும். படியுங்கள்.....

**"நமக்குத் தொழில் கவிதை"** என்றார் பாரதியார். எனக்குத் தொழில் கவிதையோ இலக்கியமோ அல்ல. ஆனால், அவற்றில் எனக்கும் ஓரளவு ஈடுபாடு உண்டு.

அந்த ஈடுபாட்டின் காரணமாகப் பல கவிஞர்களும், இலக்கிய கர்த்தாக்களும் அவ்வப்போது என்னுடன் தொடர்பு கொள்வதுண்டு.

"ஏன்?'

கம்பன் எதற்காகச் சடையப்ப வள்ளலுடன் தொடர்பு கொண்டிருந் தானோ, அதற்காகத்தான்!

இப்படிச் சொல்லும்போது என்னை நானே "சடையப்ப வள்ளல்" என்று தம்பட்டம் அடித்துக் கொள்வதாக யாரும் நினைத்துவிட வேண்டாம். நான் சடையப்ப வள்ளலுமல்ல; என்னுடன் தொடர்பு கொண்டிருந்தவர்களெல்லாம் கம்பநாட்டாழ்வார்களுமல்ல. உண்மை என்னவென்றால், எனது தொழிலின் காரணமாக இலக்கிய கர்த்தாக்களை விட, எழுத்தாளர்களைவிட, "பொருளாதார நிலை"யில் நான் "ஒருபடி" மேலானவனாக இருந்தேன். அவ்வளவே!

அதாவது, இவ்வளவு பெரிய உலகில் அவர்கள் இருக்க ஒரு சாண் இடம் கூட இல்லாமல் தவித்தபோது, என் அறையில் எனக்குப் போகக் கொஞ்சம் இடம் இருந்தது அவர்களும் தங்க; பசிக்கு உண்ண அவர்களிடம் ஒரு கவளம் சோறு கூட இல்லாதபோது, என்னிடம் எனக்குப்போக இன்னொரு கவளம் சோறு இருந்தது அவர்களுக்கும் கொடுக்க; உடுக்க ஒரு வேட்டி - சட்டை கூட அவர்களிடம் இல்லாத போது, என்னிடம் எனக்குப்போக இன்னொரு வேட்டிச் சட்டையும் இருந்தது அவர்களுக்கும் கொடுக்க!

ஆம், இத்தகைய "சாதாரண உதவி"களுக்குக் கூட இன்னொரு வரை நாட வேண்டிய நிலையில்தானே இன்றையத் தமிழ்நாட்டு இலக்கிய கர்த்தாக்களில் பலரை நாம் விட்டு வைத்திருக்கிறோம்?

அவர்களில் ஒருவராகத்தான் கவிஞர் தமிழ்ஒளி அவர்களும் என்னை ஒருநாள் தேடிக் கொண்டு வந்தார்.

ooo ooo ooo

ஆசிரியர் விந்தன் அவர்களின் பண்பட்ட எழுத்து நடை வாசகர்கள் அறிந்தவை. இங்கே என்னுடைய பெயரில் உள்ள கட்டுரையின் முன்பகுதியில் அவருடைய எழுத்து இணைந்தது. எதிர்பாராத ஒன்றே!

இந்தச் செய்தி யாரையும் பாதிக்கக் கூடியதல்ல. அப்படியிருந்தும் இதை ஒரு பிரச்சினையாக்கி என்னை மட்டுப்படுத்த எண்ணிய மனிதர்கள் இப்போதும் எனக்குப் பிரச்சினையாகவே இருந்து வருகிறார்கள்.

அவர்கள் ஏன், இப்படி நடந்து கொள்ளுகிறார்கள்?

கவிஞர், வாழ்ந்தபோது நிழலடிப்புச் செய்த நிகழ்வுகளுக்குத் தாங்களும் பொறுப்பானவர்கள் என்பதை மெய்ப்பிக்கவா?

அது மெய்யானாலும், என்னை முன்னிறுத்தித் தமிழ் ஒளியை நிழலடிப்பது இனியும் சாத்தியமாகாது என்பதை அவர்கள் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

# ஆர்வத்தால் நேர்ந்த பாதிப்புகள்

ஆர்வத்துடன் நான் வெளியிட்ட இந்நூல்கள், வாசகர்களுக்கு தரிசனம் தராமலே புத்தகக் கட்டாக முடங்கிக் கிடந்ததும் ஒரு சோதனையே! **"பாரி நிலையம்"** ஒரு புத்தகக் கடல். அங்கே செல்லும் வாசகர், தனக்குத் தேவைப்படும் நூலினை தேடிப் பிடிக்க வேண்டும். நிலைய வெளியீடுகளே முகங்காட்டி நிற்கும் அலமாரிகளில் நல்ல நூல்கள் பலவற்றுக்கு இடம் கிடைப்பதில்லை. தமிழ் ஒளியின் நூல்களுக்கும் அதுதான் கதி!

சரியாக மூன்றாண்டுகளின் பின்னரும் விற்பனை கற்பனை யாகத்தான் இருந்தது. ஓராண்டில் விற்றுவரும் பணத்தைக் கொண்டு மற்றொரு நூலை வெளியிடலாம் என்ற என் நம்பிக்கை தகர்ந்துவிட்டது.

அந்நாளில், பதிப்பகங்களிடையே புத்தகப்பரிமாற்றம் செய்து பள்ளிக் கூடங்களில் விற்பனை செய்வது ஒரு தொழிலாக நடந்து வந்தது. என்னுடைய நிலையை அறிந்து பள்ளி ஆசிரியர்கள் பலர், புத்தகங்களை எடுத்து வருமாறு கூறினர். "மல்லிகை பதிப்பகம்" சங்கரன் அவர்கள் உதவ முன் வந்தனர்.

மூன்றாமாண்டின் முடிவில் **"பாரி நிலையத்தில்"** தேங்கிக் கிடந்த நான் வெளியிட்ட நூல்களை முழுவதுமாக எடுத்து வந்து **மல்லிகை பதிப்பகத்தில்** சேர்ப்பித்தேன். அங்கே பரிமாற்ற அடிப்படையில் பலதிறப்பட்ட நூல்களை எடுத்துச் சென்று பள்ளிகளில் விற்பனை செய்தேன். இம்முயற்சியில், **"நியூ செஞ்சுரி புத்தக நிலையம்"** எனக்கு அளித்த ஆதரவும் நினைக்கத் தக்கதே.

பள்ளிகளை நாடிச் செல்லும் முயற்சியில் தொடர்ந்து இரண்டாண்டுகள் முனைந்து செயல்பட்டுப் புத்தகக் கையிருப்பினை ஓரளவு குறைத்து விட்டேன்.

இதனிடையே, ஒரு முயற்சியாக, "ஆனந்த விகடன்" ஏட்டில், எனக்குப் பிடித்த புத்தகப் பகுதியில் "தமிழ் ஒளியின் கவிதைகள்" குறித்து விமர்சனம் வெளிவந்தால் நூல் விற்பனைக்கு வாய்ப்பு உருவாகலாம் என நண்பர்கள் கூறினர். அதன் பொருட்டு, அங்கு துணை ஆசிரியராகப் பணியில் இருந்த நண்பர் ஆம்பூர் கேசவன் அவர்களை அணுகினேன். அவருக்கு அங்கே செல்வாக்கில்லை எனத் தெரிந்தது. ஆசிரியர் விந்தன் அவர்களிடம் இதுபற்றிச் சொன்னபோது, "ஜெயகாந்தனை அணுகிப் பாருங்கள் அவர் எழுதினால், அவருடைய வாசகர்களே புத்தகத்தை வாங்கி விடுவார்கள்" என்றார்.

அப்போது தோழர் **ஜெயகாந்தன்** சேத்துப்பட்டு மெக்னிக்கல் சாலையில் குடியிருந்தார். நேரிற் சென்று பார்த்தேன். எனக்குப் பிடித்த புத்தகப் பகுதி பற்றிப் பேசியபோது நேரிடையாக பதில் கூறாமல், "அடுத்து வெளியிடும் நூலுக்கு நான் முன்னுரை தருகிறேன்" என்றார். இந்தப் பதில் நான் எதிர்பார்த்ததல்ல. சட்டென எழுந்து நின்று, அடுத்து வரும் **"மக்கள் கவிதைகள்"** நூலுக்கு அப்பாதுரையார் முன்னுரை எழுதுகிறார் எனச் சொல்லிவிட்டுத் திரும்பினேன்.

கையிருப்பில் எஞ்சியிருந்த நூல்களை நியூ செஞ்சுரி புத்தக நிலையத்தில் சேர்ப்பித்துவிட்டு மன அமைதியுற்றேன்.

ooo ooo ooo

இந்த அனுபவங்கள் அளித்த படிப்பினைகள் "ஏமாற்ற"மாக இருந்த போதிலும், தமிழ் ஒளியின் கவிதைப் படைப்புகளை வெளிக் கொண்டுவரும் திட்டத்தை நான் கைவிடவில்லை. ஆண்டுகள் பல கடந்தும் மனம் தளர்வுறாமல், திட்டமிட்டபடியே **"மக்கள் கவிதைகள்"** நூலினை (1987ல்) பன்மொழிப் புலவர் அப்பாதுரையார் முன்னுரையுடன் வெளியிட்டேன். அதனையடுத்து (1988) **"தமிழ்ஒளியின் கவிதைகள்"** நூலின் இரண்டாம் பதிப்பினையும் (1989-ல்) **"உயிரோவியங்கள்"** மற்றும் **"கண்ணப்பன் கிளிகள்"** மறுபதிப்பும் வெளிவந்தன.

புதிய நம்பிக்கையுடன் இந்நூல்களின் விற்பனை உரிமையை **"நியூ செஞ்சுரி புத்தக நிலையத்திற்கு"** வழங்கினேன். எதிர்பார்த்தபடி விற்பனை இருந்தது. இப்படியே தொடர்ந்தால் **"மாதவி காவிய"**த்தையும் தைரியமாக வெளியிடலாம் எனக் கருதினேன். இங்கேயும் இடர் எழுந்தது. ஒரு தோழர், **"பிறர் வெளியிடும் நூல்களை "ஷோ கேசில்" வைக்கக் கூடாது" என உத்தரவு போட்டாராம்.** அதுவரை கவிதைப் பகுதியில் இருந்த தமிழ் ஒளியின் நூல்களை இடம் மாற்றிவிட்டனர். விளைவு? கூடிவந்த விற்பனையும் குறைந்து போயிற்று. அடுத்த சில ஆண்டுகளில் கணக்கை முடித்துக் கையிருப்பு நூல்களையும் திருப்பி விட்டது நியூ செஞ்சுரி புத்தக நிலையம்!

இந்த ஏமாற்றங்கள், இடர்ப்பாடுகள் யாவும் பதிப்புத்துறை எனக்களித்த பரிசுகளாகவே நான் கருதினேன்.

# 'முன்னணி' - ஏடு

ஈரோடு **தோழர் மு. நடேசன்** அவர்கள் 12.9.86ல் நமக்குக் கடிதம் எழுதி, "தமிழ் ஒளியின் கவிதைகள்" நூலை அனுப்புமாறு கேட்டிருந்தார். அவ்வகையில் அவர் பெயரை அறிந்திருந்தோம். வேறு தொடர்பு இல்லை.

**"மக்கள் கவிதைகள்"** (1987) அச்சாகிக் கொண்டிருந்த போது **"முன்னணி"** ஏடு பற்றிய எண்ணம் கவலை அளித்தது. அச்சிடப்பட்ட கவிதைகள் சிலவற்றை "முன்னணி"யில் வெளிவந்ததாகக் குறிப்பிட்டிருந்தோம். அது சரியா என்பதைத் தெளிவாக்கிக் கொள்ளவும் "முன்னணி" தேவைப்பட்டது.

அந்தச் சந்தர்ப்பத்தில் சற்றும் எதிர்பாராத நிலையில் தோழர் மு. நடேசன் நம் வீட்டிற்கு வந்தார். அவரிடம் நூல் அச்சாகி வருவதைப் பற்றியும், நமக்கு ஐயமளித்த கவிதைகளை "முன்னணி"யில் படித்ததுண்டா என்பது பற்றியும் வினவினோம். அவர் சொன்னார் "முன்னணி" ஏட்டுத் தொகுப்பு என்னிடம் உள்ளது. அடுத்த மாதம் கொண்டு வந்து தருகிறேன் என்றார்.

**"முன்னணி"** ஏடுகள் இருப்பதாகச் சொன்ன செய்தி நம்மை பரவசப்படுத்தியது. உடனடியாக ஏடுகள் கிடைத்தால், இந்தத் தொகுப்பில் கவிதைகளைச் சேர்த்து விடலாம் எனக் கருதினோம். தோழரை வற்புறுத்திப் பயணச் செலவிற்குப் பணம் கொடுத்து அவரை ஈரோட்டிற்கு அனுப்பி வைத்தோம். இரண்டே நாட்களில் "முன்னணி" தொகுப்பு நம் கைக்கு வந்தது.

ஏட்டுப் படிகள் முழுவதையும் "செராக்ஸ்" படி எடுத்தோம். நமக்கு அவசரமாகத் தேவைப்பட்ட கவிதைகளை அச்சாகி வந்த நூலுடன் பின் இணைப்பாகச் சேர்த்தோம்.

பின்னர், "செராக்ஸ்" படிகளில் காணப்பட்ட **கவிஞர் குயிலன்** படைப்புகளை அவரிடம் கொடுத்து வியப்பில் ஆழ்த்தினோம்.

அடுத்து, மதுரை சென்றபோது **தோழர் எஸ். ராமகிருஷ்ணன்** அவர்களிடம் இதுபற்றிக் கூறினோம். அவர், "முன்னணி" ஏட்டுப்படிகள் முழுவதுமாக "செராக்ஸ்" எடுத்துத் தருமாறு கேட்டுக் கொண்டார். அவருடைய விருப்பத்தையும் ஈடு செய்தோம்.

பின்னாளில், மீண்டும் ஒருமுறை "**முன்னணி**" ஏட்டினை இரண்டு படிகள் "செராக்ஸ்" எடுத்தோம். ஒன்றை இதழியல் ஆய்வுக்காக ஒரு பேராசிரியரிடம் கொடுத்தோம். மற்றொன்றை "**இந்திய பொதுவுடைமைக் கட்சி**" அலுவலகத்தில் சேர்ப்பித்தோம்.

தேடாத இடமெல்லாம் தேடி, கிட்டாத புதையலைத் தன் வீட்டுப் பரணில் பாதுகாத்து நமக்கு வழங்கிய **தோழர் மு. நடேசன்** அவகள் நம் எல்லோரது நன்றிக்கும் பாத்திரமானவரல்லவா? அவருக்கு நன்றி நவில்கிறோம்.

# பொன்விழா முயற்சி தோல்வி

***1974-ம்*** ஆண்டு நம் கவிஞருக்குப் பொன்விழா ஆண்டாக அமைந்தது. அதையொட்டி எளிய முறையில் விழா எடுக்கலாமென எண்ணினேன். ஆசிரியர் விந்தன் அவர்களுடன் கலந்து பேசினேன். அவர், "சிறப்பாகச் செய்ய வேண்டும். வாழ்ந்த காலத்தில் புகழ்பெறாத கவிஞனுக்கு, இறந்த பிறகாவது புகழ் சேர்க்க வேண்டாமா, இப்போது தமிழுக்குப் பெருமை சேர்க்கும் தமிழர்களே ஆட்சியில் உள்ளனர். அவர்கள் ஆதரவோடு விழாவைக் கோலாகலமாக நடத்தி விடலாம்" என்றார்.

அவர் விரும்பியவாறு விழாக்குழு, மலர்க்குழு என அமைத்தோம்.

மலர்க்குழுவில் **திரு.வி.எஸ். சுப்பையா** I.A.S., பேராசிரியர்கள் **மா.கி. தசரதன், டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், திரு. விந்தன், கவிஞர் சுரதா** ஆகியோர் சிறப்பாசிரியர்களாக இருந்தனர். குழந்தைக் கவிஞர் **அழ. வள்ளியப்பா** அவர்கள் வரவேற்புக் குழுத் தலைவராகவும், **"ராணி"** ஆசிரியர் **அ.மா.சாமி**, துணைத்தலைவராகவும் பொறுப்பேற்றனர். செயலாளர் பேராசிரியர் **பூவண்ணன்** துணைச்செயலாளர் கவிஞர் **மணிமொழியும்** பொருளார் பொறுப்பில் **நானும்**, உறுப்பினர்களாகப் பேராசிரியர்கள் **குமரவேலன், எழில் முதல்வன், தே.ப. பெருமாள், அறந்தை நாராயணன், எஸ். சங்கரன், ஏ. சத்தியமூர்த்தி, எஸ். சுப்பிரமணியம், த. கோவேந்தன்** ஆகியோரும் குழுவில் சேர்க்கப்பட்டனர்.

மலர்க்குழு பணி தொடங்கியது. பிரபல எழுத்தாளர்கள் பேராசிரியர்கள், கவிஞர்களிடம் கட்டுரைகள், கவிதைகள் பெற்று மலரை அச்சிட்டு வந்தோம். என் நண்பர் மு. **கிருஷ்ணசாமி** அவர்கள் கூட்டுறவு நிறுவனங்களிடமிருந்து விளம்பரங்கள் பெற்றுத் தந்தார்.

மலர் அச்சாகி வந்த நிலையில், விழா நிகழ்ச்சி எப்போது நடத்துவது, யாரை அழைப்பது என்ற கேள்விகள் எழுந்தன. ஆசிரியர் விந்தன் அப்போது "தினமணிக்கதிர்" ஏட்டில் பணிபுரிந்து வந்ததால், அமைச்சர்களுடன் தொடர்பு கொண்டிருந்தார். அவர், "**முதல் அமைச்சர் கலைஞரை** அழைக்கலாம், அந்த பொறுப்பினை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன்" என்றார்.

நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. முதல்வரிடம் "**நாள்**" கேட்டுப் பெற முடியவில்லை. விழாக்குழுவில் இடம்பெற்றிருந்த யாரும் எவ்வித நடவடிக்கையும் எடுக்க இயலாதவராய் இருந்தனர். நானும் தொழிலை மாற்றிக் கொண்டு, வியாபாரத்தில் ஈடுபட்டதால், விழா நிகழ்ச்சிக்குப் போதிய பங்களிப்பு செலுத்த இயலாதவனானேன். முயற்சிகள் தடை பட்டது. விழா கைவிடப்பட்டது.

# மாதவி காவியம்

**1996-ல்** நான் உடல் நலம் குன்றி நலிவுற்றேன். **"மாதவி காவியம்"** அச்சாகாத குறை மனதை உறுத்தி வந்தது. என் பிள்ளைகளிடம் முறையிட்டேன். அவர்கள் பொறுப்பேற்று, மாதவி காவியத்தை அச்சிட்டு விழா எடுத்து வெளியீடு செய்தனர். நிகழ்ச்சியை வீடியோ படமாகவும் பதிவு செய்து மன நிறைவளித்தனர்.

அதனைத் தொடர்ந்து (1998-ல்) **கவிஞருக்கு 75ம் ஆண்டு பிறந்த நாள் விழா எடுக்க** ஆவன செய்தேன். **தமிழ்நாடு கலை இலக்கியப் பெரு மன்றத்தாருடன்** இணைந்து விழா நிகழ்ச்சியை ஓரளவு சிறப்பாகவே நடத்தினோம்.

இந்த விழாவில், **"தமிழறிஞர் பார்வையில் தமிழ் ஒளி"** என்ற தலைப்பில் ஒரு தொகுப்பு நூலினை வெளியிட்டோம். **பொன் விழா மலருக்காகப்** பெறப்பட்ட கட்டுரை - கவிதைகளுடன் மேலும் பல அறிஞர்களிடம் கட்டுரைகள் பெற்று நூலினை உருவாக்கினேன்.

**பேராசிரியர் கனகசுந்தரம் அம்மையார்** அந்நூலை வெளியிட முன்வந்தார். மிக்கப் பொலிவுடன் வந்த அந்நூல் மிக விரைவாகவே விற்று முடிந்தது.

# தோழர்கள் கவனம் திரும்பியது

கவிஞர் தமிழ் ஒளி வாழ்ந்த காலத்தில் **நிழலடிக்கப்பட்டவர்** என்ற குற்றச் சாட்டுப் பரவலாக இருந்து வருவதும்; இந்திய பொதுவுடைமை இயக்கம், அவர்தம் படைப்புகளை ஏற்று உரிய முறையில் பெருமைப்படுத்தத் தவறிவிட்டது என்றும் வெளிப்படையாக சொல்லப்பட்டு வருவதும் மெய்யே!

நாம் வெளியிட்ட **"மக்கள் கவிதைகள்"** நூல், அதற்குப் **பன்மொழிப் புலவர் வழங்கியுள்ள முன்னுரை** பல கேள்விகளை முன்னெழுப்பி, இதற்கெல்லாம் பதில்கூற வேண்டிய பொறுப்பு பொதுவுடைமை இயக்கத்திற்கு உண்டு என உணர்த்திவிட்டது.

இதன் அடிப்படையில் முதல் கட்ட நடவடிக்கையாக 1989 செப்டம்பரில், அருப்புக் கோட்டையில் நடைபெற்ற முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் ஐந்தாவது மாநாட்டுக் கருத்தரங்கிற்கு, **"கவிஞர் தமிழ் ஒளி நினைவரங்கம்"** எனப் பெயரிடப்பட்டது. இதற்கான முன் முயற்சியைத் **தோழர் மேலாண்மை பொன்னுச்சாமி** மேற்கொண்டார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இதற்கு அடுத்த கட்டமாக, தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம், கவிஞரின் பவள விழா நிகழ்ச்சியில் பங்கு கொண்டதையும் கூறலாம்.

# புதுவையில் எழுந்த விழிப்புணர்வு

"**புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்**" என்ற அமைப்பு, புதுவைக் கவிஞர்களின் படைப்புகளை ஆய்வு செய்து, சிறந்தவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து உலக அளவில் பரப்பி வருகின்றது.

இந்த அமைப்பின் சார்பில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் கவிதைகள் தொடர்பான பணிகள் மேற்கொள்ளப்பட்டு முடிந்துள்ளன. இதனை அடுத்து புதுவைச் சிவம், **வாணிதாசன்** கவிதை படைப்புகளும் ஆராயப்பட்டு வருகின்றன.

இந்த வரிசையில் தமிழ் ஒளியின் கவிதைகளையும் ஆய்வு செய்ய முடிவு மேற்கொள்ளப்பட்டதால், அந்நிறுவனப் பேராசிரியர் திரு. சம்பத் அவர்கள் என்னைச் சந்தித்தார்.

"**புதுவைக் கவிஞர் தமிழ் ஒளியின் வாழ்க்கையும் கவிதையும்**" என்ற தலைப்பில் பேசுமாறு என்னை அழைத்தார். 4.3.1998-ல் அந்நிகழ்ச்சியில் பங்கு கொண்டு என் கருத்துக்களை கட்டுரையாக வழங்கினேன்.

அந்த நிகழ்ச்சி, புதுவைத் தமிழ் அன்பர்களுக்குத் தமிழ் ஒளியை அறிய உதவியது. குறிப்பாக, **புதுவை முற்போக்கு எழுத்தாளர் சங்கம்,** தமிழ் ஒளியின் புகழ் பரப்புவதை நோக்கமாகக் கொண்டு திட்டம் வகுக்கச் செய்தது. விளைவாக, அதன் செயலாளர் **தோழர் இரா. நாகசுந்தரம்** அவர்கள் நம்முடன் தொடர்பு கொண்டார்.

21.3.1999-ல் புதுவை முற்போக்கு எழுத்தாளர் சங்கம், புதுவை நகர் மன்ற அரங்கில், "**கவிஞர் தமிழ் ஒளி - படைப்புகள் குறித்த ஆய்வுக் கருத்தரங்கம்** ஒன்றை வெகு சிறப்பாக நடத்தியது. நானும் பங்கு கொண்டேன்.

அது முழுநாள் நிகழ்ச்சி. முன்னாள் தலைமை நீதிபதி மாண்புமிகு **சி. இராமலிங்கம்** அவர்கள் தலைமை வகித்தார். பத்துக்கும் மேற்பட்ட தமிழறிஞர்கள் ஆய்வுரை நிகழ்த்தினர். முடிவில் மூன்று முக்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவை:

1. கவிஞர் தமிழ் ஒளியின் பிறந்த நாளை ஆண்டுதோறும் அரசு விழாவாக நடத்த வேண்டும்.
2. கவிஞர் தமிழ் ஒளி வாழ்ந்த பகுதியில் ஏதேனும் ஒரு பள்ளிக்கு அவருடைய பெயரினைச் சூட்ட வேண்டும்.
3. புதுவை நகரில் உள்ள ஏதேனும் ஒரு சாலைக்குக் கவிஞர் தமிழ் ஒளியின் பெயரைச் சூட்ட வேண்டும்.

என்பனவாம்.

# புதுவை அரசு விழா எடுத்தது

முற்போக்கு எழுத்தாளர் சங்கம் முன்மொழிந்த முதல் தீர்மானத்தை முதல் கட்டமாக ஏற்றுக்கொண்ட புதுவை அரசாங்கம், 1999ம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 25, 26 தேதிகளில் **"கவிஞர் தமிழ் ஒளி பிறந்தநாள் விழா"வினைக் கம்பன் கலை அரங்கில்** வெகு விமரிசையாகக் கொண்டாடியது.

முதல் நாள் மாலை நிகழ்ச்சியில் மாண்புமிகு அமைச்சர் **எஸ்.வி. சிவக்குமார்** தலைமையேற்று கவிஞர் தமிழ் ஒளியின் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்தார். சட்டசபை துணைத்தலைவர் மாண்புமிகு **மு. கந்தசாமி** அவர்கள் தொடக்க உரையாற்றினார். அடுத்து, மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவன இயக்குனர் பேராசிரியர் **எல். இராமமூர்த்தி** அவர்கள் சிறப்புரை நிகழ்த்தினார்.

நிகழ்ச்சி தொடங்கும் முன்பாக, அரசு செயலர் திரு. ந. **இராஜசேகர் I.A.S.** அவர்களிடம், என்னை அறிமுகம் செய்துவைத்த இயக்குனர் திரு. **சிவ. வீரபத்திரசாமி** அவர்கள், **"இன்றைய நிகழ்ச்சிகள் நடைபெறுவதற்கே ஐயாதான் காரணம். கவிஞர் தமிழ் ஒளியை நாடறியச் செய்த பெருமை ஐயாவுக்கே உரியது"** என்றார்.

இந்த அறிமுகம் என்னை மெய்சிலிர்க்க வைத்தது. நான் சொன்னேன்: **"ஐயா, இந்த நிகழ்ச்சிகள் நடைபெறும் காலம் வரை நான் வாழ்ந்திருப்பதே எனக்குப் பெருமை".**

மறுநாள் காலை தொடங்கி இரவு வரை முழுநாள் நிகழ்ச்சிகள். **கருத்தரங்கம், கவியரங்கம், விவாத மேடை, நாட்டியம்** என நான்கு கட்டமாக நிகழ்த்தப்பட்டன.

அங்கே, தமிழ்ஒளியின் படைப்புகள் அனைத்தும் பரிசீலனைக்கு உட்படுத்தப்பட்டன. **"தமிழ் ஒளியின் இலக்கிய இன்பம்"** குறித்து கருத்தரங்கில் பேசப்பட்டது. கவியரங்கில், **"கவியின் குரல்"** ஒலித்தது. விவாதமேடையில், **"மாதவி காவியம் சிறப்புற்று விளங்கக் காரணம்"** யாதென அறியும் முயற்சியில், **கற்பனை, ஓசை நயம், புதுமை, தமிழுணர்வு, பெண்ணுரிமை** என ஐந்து கோணங்களில் அலசப்பட்டன.

உரைகள் அனைத்துமே, "நவில் தொறும் நூல் நயம்" மிகும் மிகும் என உணர்த்துவதாயமைந்தன. செவிக்கு அமுதாய் இனித்த தமிழ்க்

கவிதைகள், கேட்போரை மனம்கொள்ளச் செய்தன தமிழ் ஒளியை ஆய்ந்து அறியவும், ஓதி உணர்த்தவும் செய்திகள் நிரம்ப உள்ளனவென்பதை நிகழ்ச்சியில் பங்கேற்ற புலவர் பெருமக்கள் சொல்லிப் போந்தனர்.

நிகழ்ச்சிகளின் இறுதி அங்கமாக நடைபெற்ற **மயூரி சித்திர நாட்டியாலயா** குழுவினர் வழங்கிய கவிஞரின் **"கோசலைக் குமரி"** நாட்டிய நிகழ்வு வெகு அற்புதம்.

சரயூ நதியில் தவழும் நீரலைகள் போன்று நாட்டிய நங்கையர் அசைந்து ஆடிய அழகே அழகு!

நாட்டிய நிகழ்ச்சியினை முழுமையாகக் காணும் வாய்ப்பில்லாமல் திரும்ப நேர்ந்தது எனக்கு வருத்த மளித்தது. மேலும், கவிஞர் பெருமான் எழுதிய இசை நாடகமாம் **"விதியோ, வீணையோ?"** அவர் காலத்தில் அரங்கேறாதது அவருக்கு எத்துனைப் பெரிய ஏமாற்றம் அளித்தது, என்ற நினைவு என் கண்களை ஈரமாக்கின.

# தோழமை பாராட்டும் கடிதங்கள்

**கடிதம் - 1**

## பாசிசத்தை எதிர்த்த கவிஞன்!

மதிப்பிற்குரிய நண்பர் சஞ்சீவி அவர்களுக்கு, வணக்கம்.

உங்கள் அருமையை இன்னும் தமிழகம் புரிந்து கொள்ளவில்லை. **பாரதிக்குச் சிங்காரவேலு** செட்டியாரும், வ.ரா. அவர்களும் செய்த அதே பணியை **தமிழ் ஒளிக்காகத் தாங்கள் ஒருவரே** ஆற்றி வருகிறீர்கள்.

தமிழ் ஒளியைத் தமிழகம் அறிகிற போது - அறிந்து போற்றுகிற போது - தாங்களும் எத்தகைய வரலாற்றுச் சிறப்புமிக்க பாத்திரம் வகித்து பாடுபட்டீர்கள் என்பதையும் தமிழகம் வியந்து நோக்கும்!

ஏப்ரல் மாதச் **செம்மலரில்** மக்கள் கவிஞனின் கவிதை நூல்களுக்கு நான் செய்திருந்த அறிமுகக் கட்டுரையைப் படித்திருப்பீர்கள். கண்ணப்பன் கிளிகளுக்கும் ஒரு அறிமுகக் கட்டுரை எழுதியிருக்கிறேன்.

அத்துடன் தமிழ் ஒளி பற்றித் தனியாக ஒரு கட்டுரையும் எழுதி வருகிறேன்.

இன்னும் நிறையச் செய்திருக்கிறேன். செய்யப்போகிறேன்.

பாரதியின் நேர் வாரிசு - ஆன்மீக வாரிசு தமிழ் ஒளி மட்டுமே என்பது எனக்குத் தெளிவாகியிருக்கிறது.

உள்ளடக்கத்திலும், உருவத்திலும் பாரதி இருந்து செய்திருந்தால் (1950-ல்) எப்படி இருக்குமோ... அப்படியே தமிழ் ஒளியின் படைப்புகள் உள்ளன.

பாரதியின் தோளில் ஏறி - காலத்தால் தாண்டிப் - பார்ப்பவன் என்ற முறையில் பாரதியின் பார்வைக்கும் அப்பால் நீள்கிறான் கவிஞன். சீனப்புரட்சி - பிலாய் உருக்காலை வரை வருகிறான்.

**பாசிசத்தை** (2ம் உலக யுத்தகாலம்)ச் சாடிய தமிழ்க்கவிதை என்பது **தமிழ் ஒளி ஒருவரிடமே** தென்படுகிறது.

பாஞ்சாலி சபத முன்னுரையில் பாரதி கோரினானே... அந்தக் கோரிக்கையை அப்படியே நிறைவேற்றியிருக்கிறார் தமிழ் ஒளி.

தமிழ் ஒளியை முற்போக்கு வட்டத்தில் முழுசாக அறிமுகப் படுத்துகிற உறுதியுடன் - முனைப்புடன் - காரியங்களில் இறங்கி யிருக்கிறேன். தாங்கள் வெளியிட்டுள்ள தமிழ் ஒளியின் கவிதை நூல்கள் யாவற்றிலும் ஒவ்வொரு பிரதி என் முகவரிக்கு அனுப்பி வைக்க மாட்டீர்களோ?

செம்மலர் நூலகத்தில் ஆய்வுக்காகப் படித்தேன். கிடைத்த புதையலை அடிக்கடி பார்த்து - மனதில் இருத்தி - வரிவரியாகக் கூட்டங்களில் பேச, எனக்கு ஆசை.

தயவு செய்து என் முகவரிக்குத் தமிழ் ஒளியின் படைப்புகள் யாவும் - ஒவ்வொரு பிரதி அனுப்பி வைக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

**ஒற்றை மனிதராக தாங்கள் ஆற்றுகிற பணியில் உதவுவதற்கு ஒரு படையையே** (தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம்) **பயன் படுத்துகிற பேராசையில் பெருமுயற்சியில் இருக்கிறேன். எனக்கு உதவி செய்யுங்கள்.**

தமிழ் ஒளிக்காக நாம் நிறையச் சாதிக்கப் போகிறோம். பிற பின்னர்.

நன்றி!

தங்கள் அன்புள்ள தோழன்
**மேலாண்மை பொன்னுச்சாமி.**
துணைப் பொதுச் செயலாளர்
த.நா. முற்போக்கு எழுத்தாளர் சங்கம்

**மேலாண்மை பொன்னுச்சாமி,**
மேலாண்மறை நாடு - *626 121*
காமராஜர் மாவட்டம்.

கடிதம் - 2

## தமிழ் ஒளி ஒரு தனிப்பெரும் புதிர்!

**உயர்திரு. செ.து. சஞ்சீவி அவர்கள்,**
புகழ்ப் புத்தகாலயம்,
சென்னை-30.

மதிப்புக்குரிய நண்பர் உயர்திரு செ.து. சஞ்சீவி அவர்களுக்கு வணக்கம். நலம். நலம் என்றே நம்புகிறேன். (உண்மையில் இருவருமே உடல் நலம் இல்லாதவர்கள். மனிதர்கள் கூறும் எவ்வளவோ பொய்களில் இதுவும் ஒன்று; போகட்டும்)

முதலில் தினமணியில் ஒருவர் எழுதிய தமிழ் ஒளியைப் பற்றிய கட்டுரையைப் படித்த இரண்டு நாள் கழித்து - அதாவது பாராட்டுவிழா நடத்திய அன்று பிற்பகலில் தாங்கள் அனுப்பி வைத்திருந்த அழைப்பிதழ் கிடைத்தது. காலம் இன்மையால் வாழ்த்துச் செய்தி கூட அனுப்ப முடியவில்லை. மன்னிக்க வேண்டுகிறேன்.

விழா முடிந்த மூன்று நான்கு நாட்கள் கழித்து, விழா மலராக வெளியிட்ட "தமிழறிஞர்கள் பார்வையில் கவிஞர் தமிழ் ஒளி" என்ற நூலும் கிடைக்கப் பெற்றேன். மிக்க நன்றி. அப்புத்தகத்தின் விலையான ரூபாய் ஐம்பதுக்கு இத்துடன் குறுக்குக் கோடிட்ட டிராப்ட் ஒன்று அனுப்பி வைத்துள்ளேன். நம்பர்: வேண்டாம் M.O.விலேயே அனுப்பி யிருக்கிறேன்.

விழாவில் நண்பர் ஊ. கோவிந்தன் அவர்களைச் சிறப்பித்ததற் காகவும், புத்தகத்தில் அவருடைய படத்தை வெளியிட்டதற்காகவும் எனது நன்றி.

நான் கடிதம் எழுதத் தாமதமானதற்குக் காரணம் கடிதம் எழுத முடியாத அளவில் நோய்வாய்ப்பட்டிருந்ததே காரணமாகும். சிரமப்பட்டு நண்பர் கோவிந்தன் அவர்களுக்கு, புத்தகம் கிடைத்த அடுத்த வாரமே கடிதம் எழுதிவிட்டேன்.

**"தமிழ் ஒளி" ஒரு தனிப் பெரும் புதிர். அத்தனை அறிஞர்களும் போற்றும் அளவு திறம் பெற்றவர்தான்.** ஆனால் அவர்களில் யாரும் தமிழொளியைத் தலித்தாக அறிந்தவர்களும் இல்லை; நினைத்தவர்களும் இல்லை; நடத்தியவர்களும் இல்லை. ஆனால் பாவம், இன்று அவருக்கு "தலித்" சிறை கிடைத்து விட்டது. வள்ளுவரையும் வால்மீகியையும் தலித் ஆக்காமல் ஏன் விட்டு வைக்கிறார்கள் என்பதுதான் புரியவில்லை. விரைவில் அவர்களுக்கும் சாதீயக் கூண்டு கிடைத்துவிடும்.

"தமிழ் ஒளி" உயிருடன் இருந்திருந்தால் நீங்கள் இவ்வளவு ஒழுங்காக அவருடைய புத்தகங்களை - ஏதோ ஒரு தியாகம் நிறைந்த கடமை என்று முனைந்து வெளியிட்டிருக்க மாட்டீர்கள்; முடியாதபடி அவர் நடந்து கொண்டிருப்பார். எனவே, அவர் அப்படி மறைந்து விட்டதே அவருக்குப் "புகழ்" பதிப்பகம் உண்டாகவும், புகழ் உண்டாகவும் காரணமாகி விட்டது.

தமிழ் ஒளியையும், அவர் வாழ்க்கையையும் யாரும் முழுமையாக அறிந்தவர்கள் இல்லை. எல்லோருக்கும் அவருடைய ஒரு பகுதி மட்டுமே தெரியும்.

தோழர்கள், ஆனந்தன், மன்னர் மன்னன், முல்லை முத்தையா, இளங்கோ பதிப்பகம் ச. சொக்கலிங்கம், குயிலன், முத்தமிழ் நிலையம் பரதன், முத்து மோகன், ஊ. கோவிந்தன், தமிழ் ஒளியின் காதலியாக இருந்த "பாப்பா" என்ற நிர்மலா மற்றும் கவிஞர் தமிழ் ஒளியை அறிந்த மேலும் சிலர்; தோழர்கள் தி.க.சி. ஜெயகாந்தன். இன்னும் பலரிடம் இருந்து சேகரித்தால் மட்டுமே அவருடைய உண்மையான வாழ்க்கைச் சரித்திரமும் பரிமாணமும் ஓரளவு கிடைக்க முடியும். இவற்றையெல்லாம் சேகரித்த பிறகே தமிழ் ஒளியின் உண்மையான வாழ்க்கை வரலாறு வெளிச்சத்துக்கு வர முடியும்.

உங்களாலும் இனி அந்த வேலையைச் செய்ய முடியாது என்றே நினைக்கிறேன்.

உடல் நிலை எப்படியானாலும் நான் இப்போது ஒரு முக்கிய வேலையில் ஈடுபட்டிருக்கிறேன். (உடல் நிலை கெடும் நாட்கள் தவிர மற்ற) நாளில் 8 மணிநேரம் எழுதுகிறேன். (என்னுடைய வாழ்க்கை வரலாறு அல்ல: ஆங்கிலம் - தென்னகமொழி அகராதி) இன்னும் இரண்டு மாதங்கள் பிடிக்கும் அந்த வேலை முடிய.

அது முடிந்த பின்னும் - இறைவனோ - இயற்கையோ - எனக்கு வாழ்நாள் நீட்டிப்புக் கிடைத்தால் தங்களுக்கு விபரமான கடிதம் எழுதுகிறேன்.

தங்கள் அன்பை மறவாத நண்பன்

**குயிலன்.**

**கவிஞர். குயிலன்,**
எண்.4, மேட்டுத் தெரு,
மேலக்கரை, மானா மதுரை - 630 606,
போன். 04574 - 68596
16.10.1998.

கடிதம் - 3

# ஒரு பெரிய கவிஞன்

மூளும் கவிதைவெறி
மூதுலகை ஆளும் நெறி - இளங்கம்பன்

யாழினுமினிய பெருந்தகையீர், வணக்கம்.

தங்கள் அன்பான கடிதமும் "தமிழறிஞர் பார்வையில் தமிழொளி" நூலும் வந்தன.

இக்காலத்தில், தங்களைப்போன்ற பெருமக்கள் சிலர் வாழ்வதால் தான் தமிழும் வாழ்கிறது. வியப்பு நிறைந்த உணர்வில் இதை எழுதுகிறேன்.

மகோன்னதமாக வாழ்ந்திருக்க வேண்டிய மக்கள் கவிஞர் தமிழ்ஒளி. அவரின் ஆற்றலை இன்றைய நிலையில் எவரிடத்தும் பொருத்திப் பார்க்க முடியவில்லையே!

இசை வளமும் இனிய மரபும் இழைய தமிழ் வடிவங்கள் பல அவர் கரத்தில் குதித்தோடி வந்து கோலம் புரிந்தன.

இருக்கின்ற சமுதாயத்தைப் பாடி, இங்கு இருக்க வேண்டிய சமுதாயத்தை இனங்காட்டிய அவரின் அன்றைய பணியை எண்ணிப் பார்க்கவும், எழுதிப்பார்க்கவும் தங்களைப் போல சிலர் இருந்ததால் (தமிழொளி தங்கள் பணியால் தமிழ் மக்களுக்கு உரிமையாகி விட்டார்) அவரின் குறைந்த கால வாழ்வு வரைந்தளித்த காவியங்கள் தமிழுக்கு உண்மையில் அரிய செல்வங்களே ஆகும்.

சமுதாய மாற்றத்திற்காக வாழ்வோடு போராடிக் கொண்டு கவிதை எழுதிய கவிஞர்களில் தமிழொளியைப்போல் பலர் இன்றும் ஒதுங்கியும் பதுங்கியும் வாழவே செய்கிறார்கள்.

மாதம் பத்தாயிரம் வரை ஊதியம் பெற்றுக்கொண்டு கவிதை எழுதும் பேராசிரியக் கவிஞர்களும் இன்று தமிழ்ப்பணி செய்கின்றார்கள்!

தமிழ்த்தாய் தமிழொளி போன்றவர்களால்தான் தலை நிமிர முடியும். உங்கள் அரிய பணிக்கு எளிய என் வாழ்த்துக்கள்.

ஒரு பெரிய கவிஞனை வாழவைத்து விட்டீர்கள்.

ஓர் கவிஞன் வாழ்ந்த காலத்தைவிட மறைந்த பின், அவனை இனங்காட்ட எடுத்துக் கொள்ளும் முயற்சியால்தான் அவன் வாழ்வு கொள்ள முடியும்.

*12.1.1999.* தங்கள் அன்பை நினைத்து
பழநி. **இளங்கம்பன்.**

கடிதம் - 4

## மறக்கப்பட்ட கவிஞருக்காக...

அன்புடையீர்,

வணக்கம். தாங்கள் அன்புடன் அனுப்பி வைத்த "தமிழறிஞர் பார்வையில் தமிழ்ஒளி" என்னும் நூல் கிடைத்தது. படித்து மகிழ்ந்தேன்.

1974ஆம் ஆண்டு நான் எழுதி அளித்த என் கட்டுரை இத்தனை ஆண்டுகளுக்குப்பின் இந்த நூலில் இடம் பெற்றிருப்பது எனக்கு வியப்பு அளித்தது.

தமிழ் ஒளி அவர்களுக்கு பொன்விழா எடுக்க முயன்ற அந்நாட்களில் நான் சென்னை மாநிலக் கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்தேன். அதன் அமைப்புக் கூட்டத்தில் - வள்ளியப்பா தலைமையில் எமரால்டு தியேட்டர் அருகே நடந்த கூட்டத்தில் நானும் கலந்து கொண்டதாக நினைவு. ஆனால் எப்போதோ ஓர்முறை நாம் இருவரும் சந்தித்தது உண்மை.

கவிஞர் சுரதா அவர்கள் தங்களைப் பற்றியும் தமிழ் ஒளியிடம் தாங்கள் கொண்டிருந்த ஈடுபாட்டைப் பற்றியும் அப்போது என்னிடம் சொன்னது உண்டு.

ஒன்றைப் பாராட்ட வேண்டும்.

விளம்பரமும் வெளிச்சமும் உடைய பிரமுகர்களை நோக்கியே புகழ்பாடும் கூட்டம் மலிந்து விட்ட இந்நாளில், தமிழர்களால் அடியோடு மறக்கப்பட்டுவிட்ட ஓர் உண்மைக் கவிஞனை - அவன் மறைந்து இத்தனை ஆண்டுகட்குப் பிறகும் - அவன் நினைவாக நூலைத் தொகுத்த தங்கள் அன்புள்ளம் பாராட்டத் தக்கது.

தமிழ் ஒளி தங்களை நண்பராகப் பெறத் தவம் செய்திருக்க வேண்டும்.

தங்கள் முயற்சியையும், தொண்டுள்ளத்தையும் பாராட்டி மகிழ்கிறேன்.

தொடர்ந்து தமிழ் ஒளியின் கவிதை நூல்களை மறுபதிப்புக் கொண்டு வருமாறு கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் தமிழ் உள்ளம் வாழ்க!

அன்புடன்
**எழில் முதல்வன்**

**பேராசிரியர் எம். இராமலிங்கம்**
**(எழில் முதல்வன்)**
தமிழ்த்துறைத் தலைவர்,
பாரதிதாசன் பல்கலைக் கழகம்,
பல்கலை பேரூர் - திருச்சி
*1.10.1998.*

கடிதம் - 5

## வாழ்த்து!

"தமிழின் ஒளியே தமிழ்ஒளி!
தமிழின் ஒலியே தமிழ்ஒளி"

தமிழ் ஒளியின் கவிதைகளைப் பரப்புவதற்கு தங்களால் தான் முடியும்.

கவிதை நூல்கள் கிடைத்தன. யாவும் படித்தேன். தொண்டு தொடர செ.து. சஞ்சீவி அவர்களுக்கும் அவரது குடும்பத்தினர், நண்பர்கள் அனைவருக்கும் இனிய புத்தாண்டு மற்றும் தைத்திருநாள் வாழ்த்துக்கள்!

அன்பு

**ஐ. மாயாண்டி பாரதி**

**ஐ. மாயாண்டி பாரதி**
தலைவர்,
மதுரை நகர் - மாவட்ட சுதந்திரப்
போராட்டவீரர்கள் சமிதி,
*70*, மேலமாசிவீதி,
மதுரை - *625 001*.

*13.1.1998*.

# கவிஞர் தமிழ் ஒளியின் இலக்கிய படைப்புகள்

| காவியங்கள் | எழுதப்பட்ட ஆண்டு | வெளிவந்த ஆண்டு |
|---|---|---|
| கவிஞனின் காதல் | 1944 | 1947 |
| நிலைபெற்ற சிலை | 1945 | 1947 |
| வீராயி | 1947 | 1947 |
| மேதின ரோஜா | 1952 | 1952 |
| விதியோ. வீணையோ? | 1954 | 1961 |
| *மாதவி காவியம் | 1957-58 | 1995 |
| *கண்ணப்பன் கிளிகள் | 1958 | 1966 |
| *புத்தர் பிறந்தார் | 1958 | 1966 |
| கோசலைக் குமரி | 1962 | 1966 |
| **கவிதைகள்** | | |
| நீ. எந்தக் கட்சியில்? | 1948 | 1948 |
| மேதினமே நீ வருக! | 1949 | 1952 |
| *தமிழ் ஒளியின் கவிதைகள் | 1954-1964 | 1966 |
| *மக்கள் கவிதைகள் | 1944-1958 | 1987 |
| **குழந்தைப் பாடல்கள்** | | |
| *பாடு. பாப்பா! (முன்னர் வெளிவந்த "பாப்பா பாட்டும்" இதில் அடக்கம்) | 1948-1962 | 1967 |
| **கட்டுரைகள்** | | |
| சிலப்பதிகாரம் நாடகமா? காவியமா? | 1959 | 1959 |
| திருக்குறளும் கடவுளும் | 1959 | 1959 |
| தமிழும் சமஸ்கிருதமும் | 1960 | 1960 |
| தமிழர் சமுதாயம் | 1961 | 1962 |

### சிறுகதைகள்

| | | |
|---|---|---|
| சாக்கடைச் சமுதாயம் | 1948-49 | 1952 |
| மாமாவின் சாகசம் (குறுநாவல்) | 1952 | 1952 |
| அறிவூட்டும் 100 அற்புதக் கதைகள் | 1960 | 1961 |
| குருவிப்பட்டி | 1954-1960 | 1961 |
| *உயிரோவியங்கள் (சாக்கடைச் சமுதாயம் நூல் இதில் அடங்கும்) | 1948 - 49 | 1989 |

### ஓரங்க நாடகம்

| | | |
|---|---|---|
| கவிஞர் விழா | 1947 | 1947 |

### மேடை நாடகங்கள்

| | | |
|---|---|---|
| சிற்பியின் கனவு | 1944 | அரங்கேற்றம் 1945 |
| சேரன் செங்குட்டுவன் | 1945 | அரங்கேறவில்லை |
| தோழர் ஸ்டாலின் | 1950 | அரங்கேறவில்லை |

மேற்படி நாடகங்களின் கையெழுத்துப்படிகள் கிடைக்காததால் அச்சில் வெளியிடும் வாய்ப்பு இல்லை.

## முக்கிய குறிப்பு:

மேற்குறிப்பிட்டவை மட்டுமின்றி நூல் வடிவம் பெறாத கவிதைகள் கட்டுரைகள் ஓரங்க நாடகங்கள் உள்ளன. இன்னமும் பழைய ஏடுகளி லிருந்தும் கவிஞரின் படைப்புகள் எதிர்பார்க்கப்படுகின்றன. அவை கிடைக்கப் பெற்றால் அச்சுக்குக் கொண்டுவர ஆவன செய்யப்படும்.

இங்கே பட்டியலில் காணப்படும் *குறியிட்ட நூல்கள் தவிர ஏனைய நூல்கள் பல பதிப்பகங்களின் வெளியீடுகளாக வந்தவை. இனி அவை மறுபதிப்புகளாக வரும் என்றும் எதிர்பார்க்கலாம்.

மேலும், சில தகவல்கள்...

கவிஞர் படைத்துள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க கவிதைகளில் **"நெய்வேலி; நாம் பெற்ற பேறு!"**, **"அணுவின் ஆற்றல்"** இரண்டும் குறிப்பிடத் தக்கவையாகும். முதல் கவிதை **திரு."சோமலெ"** அவர்கள் எழுதியுள்ள **"தென்னாற்காடு மாவட்டம்"** நூலில் சேர்க்கப் பட்டுள்ளது. இரண்டாவது கவிதை இந்திய அரசின் செய்தி ஒலி பரப்புத்துறை **உருது மொழியில்** வெளியிட்டுள்ள **"இந்திய மொழிகளில் உருவாகியுள்ள மறுமலர்ச்சிக் கவிதைகள்"** நூலில் இடம் பெற்றுள்ளது.

அடுத்து; சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையின் **பொன்விழா** மலரில், நூற்றாண்டின் சிறந்த கவிதையாக **"பட்டமரம்"** கவிதை வெளியிடப்பட்டுள்ளது.



**கவிஞர் தமிழ்ஒளி**



| தோற்றம் | மறைவு |
|---|---|
| 21-09-1924 | 29-03-1965 |

"தமிழுக்கு வளம் சேர்த்த மா கவிஞன். தன் வாழ்வை பாலைவனமாக்கிக் கொண்ட தவயோகி. அமரராகி விட்ட அப் பெருமகனாரின் கவிதை படைப்புகள் யாவும் அமர இலக்கியங்களாக என்றும் நிலைத்திருக்கும். வெல்க, தமிழ் ஒளி!"

– செ.து. சஞ்சீவி